

# தட்சிணாமூர்த்தி குருமுகம் - 100

முனைவர் தி. மகாலட்சுமி

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# தட்சிணாமூர்த்தி குருமுகம் 100

(கற்பமுப்பு குருநூல் - 100)

பதிப்பாசிரியர்
முனைவர் தி. மகாலட்சுமி

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, சி.ஐ.டி. வளாகம்,
தரமணி, சென்னை - 600 113.

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Thatchinamoorthy Gurumugam 100** |
| Editor | : | Dr. T. Mahalakshmi<br>Research Assistant<br>International Institute of Tamil Studies<br>C.I.T. Campus, Chennai 600 113. |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>2nd Main Road, C.I.T. Campus,<br>Chennai 600 113.<br>Ph: 22542992 |
| Publication No | : | 485 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | 2004 |
| Paper Used | : | 18.6 kg TNPL Map litho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | iv+164 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 50/- (Rupees fifty only) |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road,<br>Chennai - 600 004. |
| Subject | : | Siddha Medicine |

**முனைவர் சா. கிருட்டினமூர்த்தி**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை-600 113.

# அணிந்துரை

**தொ**ன்மைக் காலம் தொட்டே மக்கள் மருத்துவத்தைப் பயன்படுத்தி வருகின்றனர். அவ்வகையில் சித்த மருத்துவம் தமிழர் கண்ட சிறந்த மருத்துவமாக விளங்குகிறது. இச்சித்த மருத்துவம் தட்சிணாமூர்த்தி, அகத்தியர், திருமூலர், திருவள்ளுவர் முதலாகிய சித்தர்களைக் கொண்டு வளர்ந்தது. இப்படித் தோன்றி வளர்ந்த இம்மருத்துவ முறை நோய், நோய் தோன்றுவதற்கான அறிகுறி, நோய்க்கான மருந்து, அதன் செய்முறை, மருந்து உட்கொள்ளும் போது கடைப்பிடிக்க வேண்டிய அனுபான முறை போன்றவற்றை உள்ளடக்கியதாக விளங்குகிறது. ஆற்றல் மிக்க முப்பைப் பற்றியதாகப் பதிப்புக்கு எடுத்துக் கொண்ட **தட்சிணாமூர்த்தி குருமுகம் 100** என்ற இந்நூல் அமைகிறது. இதில் யோகம், ஞானம், மருத்துவம், வாதம், கற்பம் ஆகியன பற்றிக் கூறப்படுகின்றன.

முப்பு பற்றிய பல்வேறு சிறப்புச் செய்திகளையும், சித்தர்களின் முப்பு செய்முறைகள் பலவற்றின் தொகுப்புகளையும், மருந்து செய்முறைகளையும், அறிவியலோடு கூடிய பல்வேறு செய்திகளையும், முப்பு பற்றிய ஆய்வை மேற்கொள்ளுவோர்க்கு வேண்டிய தரவுகளையும் தன்னகத்தே கொண்டுள்ள இந்நூல் சித்த மருத்துவ வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரியும். முப்பு என்றாலே நினைத்துப் பார்க்க முடியாத, செயல்பாட்டில் இறங்க முடியாத ஒரு மாய ஜால மருந்து என்ற மயக்கத்தை நீக்கி, முப்பு பற்றிய ஆய்வில் ஆழமாக அதற்குரியோர் இறங்கினால் அதன் பயனை மக்கள் அனைவரும் பெற முடியும் என்ற நம்பிக்கையைப் பல்வேறு சான்றுகளுடன், குறிப்பாக நடைமுறைச் சான்றுகளுடன் தெளிவாக்குகிறது இந்நூல். முப்பு பற்றிய விழிப்புணர்வுக்கும், மேலும் பல முப்பு நூல்கள் உருவாவதற்கும், முப்பு பற்றிய ஆய்வு விரிவும் தெளிவும் பெறுவதற்கும் உறுதுணை புரியக் கூடிய நூலைப் பதிப்பித்த முனைவர் தி. மகாலட்சுமி அவர்களைப் பாராட்டுகிறேன். இந்நூலுக்குரிய எழுத்துருவை மதிப்பீடு செய்தளித்த மதிப்பீட்டாளர்க்கும், நூலை வெளியிட இசைவளித்த பதிப்புக் குழுவினர்க்கும் நிறுவனத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந் நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் **மாண்புமிகு கல்வியமைச்சர் திருமிகு செ. செம்மலை** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் **செயலாளர் திருமிகு பு.ஏ. இராமையா இ.ஆ.ப.** அவர்களுக்கும், **சிறப்புச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.** அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன். இந்நூலுக்கு ஒளி அச்சுக்கோப்புச் செய்த திருமதி இரா. வெண்ணிலாவுக்கும், அழகுற அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைண்டட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் என் நன்றியும் பாராட்டுகளும் உரியன.

சென்னை
*04-03-2004*

இயக்குநர்

# பொருளடக்கம்


| | |
|---|---|
| முன்னுரை | 1 |
| நூலாய்வு | 10 |
| முப்பு - பொது விளக்கம் | 13 |
| மூலம் - தட்சிணாமூர்த்தி குருமுகம் நூறு | 99 |
| தெளிவுரை | 130 |
| பாடல் முதற்குறிப்பு அகராதி | 148 |
| அருஞ்சொற் பொருள் | 150 |
| சொல்லடைவு | 154 |
| துணை நின்றவை | 162 |
| இணைப்புகள் | 163 |

# முன்னுரை

இளமையை நல்கி, நோயை நீக்கி, வாழ்நாளை நீட்டிக்கச் செய்யும் சிறப்புடையது தமிழ் மருத்துவமான சித்த மருத்துவம். தமிழர்களின் அறிவியல் சொத்தான இச்சித்த மருத்துவம் உலக அரங்கை அடைய வழி வகுக்கும் வகையில் **தட்சிணாமூர்த்தி குருமுகம் நூறு** என்ற இந்நூல் வெளிவருகிறது. இந்நிறுவனத் தாள் சுவடியாக அமையும் இந்நூலில் மூலம் மட்டுமே உள்ளது. தேவையும், தெளிவும் கருதி நூலாய்வு, முப்பு பற்றிய அரிய விளக்கம், தெளிவுரை போன்றவற்றைப் பெற்ற செம்பதிப்பாக இந்நூல் வெளிவருகின்றது.

**முப்பு – பொது விளக்கம்** என்ற பகுதியில் முப்புவின் சிறப்பு, காயகல்பமுறைகள், இரசவாதமும் காயகல்பமும், சாகாக்கலை, கற்ப மூலிகைகளின் பெயர்கள், கற்ப மூலிகைகளின் சிறப்பு, இரசவாதம், முப்பு-பெயர்விளக்கம், முப்பு பற்றிய நம் நாட்டார் கருத்து, மேனாட்டார் கருத்து, முப்புவின் ஆற்றல், இறந்த உடல் உயிர் பெறல், முப்புவின் பயன்பாடு, முப்பு கைகூடும் தகுதி, முப்புவின் வேறு பெயர்கள், முப்புவின் வகைகள், குரு வகைகள், முப்புவின் இன்றைய நிலை, பயன்பாட்டில் முப்பு, சித்தர்களின் முப்பு குரு செய்முறைகள், முப்பு செய்முறை பற்றிய கருத்துகள், பரம்பரை மருத்துவர்களின் முப்பு பற்றிய அனுபவம், சரக்குகளின் பிரிப்பு முறை, சரக்குகளின் வகைகள், காரசார சரக்குகள் என்பன போன்ற பல்வேறு செய்திகள் சிறப்புற தொகுக்கப்பெற்றுள்ளன. குறிப்பாகப் புலிப்பாணி, ஞானவெட்டி, திருவள்ளுவர், அகத்தியர், கொங்கணவர், யாகோபு முதலான சித்தர்களின் **இருபத்திநான்கு செய்முறைகள்** பல நூல்களில் இருந்து திரட்டி விரிவாகத் தரப்பட்டுள்ளன.

மூலநூலில் கற்ப முப்பு முடிக்கும் விவரமும், பாகமும், சேர்க்கும் முறையும், சுண்ணம் செய்யும் முறையும் கூறப்பட்டுள்ளன. மேலும் வீரபற்பம், வீரச்செந்தூரம், கந்தக பற்பம், இரசபற்பம், தாளகபற்பம், வங்க பற்பம், சிலாசத்துப் பற்பம் போன்ற பற்பமுறைகளும் மெழுகு, தயிலம், கற்பம் போன்றவையும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன. இம்மூலநூல் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்ற உத்தியைப் பெற்றுள்ளது.

இந்நூலில் கூறப்பட்டுள்ள மருந்து செய்முறைகள் அனைத்தும் முப்பு சேர்த்துத் தயாரிக்கப்பட்டவை என்பது இந்நூலுக்குரிய தனிச்சிறப்பாகும். வந்த நோய்களுக்கு மருந்தாகவும், வரவிருக்கும் நோய்களுக்கு நோய்த் தடுப்பு மருந்தாகவும், உள்ளத்தில் ஏற்படும் நோய்களுக்கு மருந்தாகவும், உடம்போடு கூடிய உயிரை நீடித்து நிலைபெறச் செய்யும் மருந்தாகவும் இந்நூல் அமைகிறது.

வாதம், மருத்துவம், யோகம், ஞானம், 64 சித்து வகைகள் ஆகியவற்றுக்கு முப்புவே முழு முதற் பொருளாக விளங்குகிறது. எனவே இன்று நடைமுறையிலுள்ள மருந்து செய்முறைகள் முழுப் பயனை அடைய, முப்பு பற்றிய விழிப்புணர்வும், ஆய்வும் அவசியம் உருவாதல் வேண்டும். ஏனெனில் சித்த மருத்துவத்தின் வளர்ச்சிக்கு இது பெரிதும் உறுதுணைபுரியும். முப்புவைச் சரியாகச் செய்தவர்கள் இருந்திருக்கலாம். இன்றும் இருக்கலாம். நாளையும் இருப்பர் என்பதற்குக் காட்டாக இந்நூல் அமைகிறது.

தமிழ்மொழியில் இலக்கியம், இலக்கணம், வரலாறு, பண்பாடு, மருத்துவம் எனப் பல்துறைச் சிந்தனைகளில் நூல்களை வெளியிடும் இந்நிறுவனம் இந்நூலிலுள்ள மருத்துவச் செய்திகளின் சிறப்புகளைக் கருதி நிறைவுடைய நூலாக வெளிக்கொண்டு வந்தமைக்குப் பெரிதும் மகிழ்கிறேன்.

இந்நூல் வெளிவர ஆக்கமும் ஊக்கமும் தந்து தோன்றாத் துணையாக விளங்கும் இந்நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கு என் நன்றி என்பது சிறிய காணிக்கையே. நூலாக்கத்தின் போது உசாத்துணையாக நின்ற முழுநேர ஆய்வாளர் திரு. சு. இரவீந்திரன் அவர்களுக்கும், தேவைப்படும் போது தக்க தரவு நூல்களைத் தந்து ஆற்றுப்படுத்திய கெழுதகை நண்பரும், முப்பு ஆய்வாளருமான மருத்துவர் டி. சிவக்குமார் அவர்களுக்கும், அவ்வப்போது கலந்துரையாடலில் கலந்து கொண்டு நூலுக்கு ஆக்கம் சேர்த்த துறை நண்பர் திரு. த. பூமிநாகநாதன் அவர்களுக்கும், நண்பர் திரு. கே. கோபால் அவர்களுக்கும், மற்றும் இந்நூலுக்கு ஒளி அச்சுக்கோப்புச் செய்த திருமதி இரா. வெண்ணிலாவுக்கும் அன்பு கலந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

## பதிப்புரை

பதிப்பிக்க எடுத்துக் கொண்ட நூலின் பெயர் **தட்சிணாமூர்த்தி குருமுகம் நூறு** என்பதாகும். இந்நூல் தலைப்பு சுவடியில் **தெக்ஷிணாமூர்த்தி பகவான் அருளிச் செய்த குருமுகம் - 100** என்றுள்ளது. 2 : 21 என்ற எண்ணைப் பெற்ற இத்தாள் சுவடி உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. இத்தாள் சுவடிக்கட்டில் வேறு நூல்களும் இடம் பெற்றுள்ளன. இந்நூல் 118 - 148 ஆம் பக்கங்களில் இடம் பெற்றுள்ளது.

நூறு எண்சீர் விருத்தப் பாடல்களால் நூல் இயற்றப் பட்டுள்ளது. ஒரு பாடலின் இறுதிச் சொல் அடுத்த பாடலின் தொடக்கமாக அமையும் அந்தாதியானது நூல் முழுமையும் கையாளப்பட்டுள்ளது. மூலம் மட்டுமே இடம் பெற்றுள்ள இந்நூலின் முதல் மூன்று பாடல்கள் **இறை வணக்கம், குரு வணக்கம்** என்ற வகையில் அமைகின்றன.

ா-ர-ற, ழ-ள-ல, ெ-ே, ன-ண-ந, த-ற, போன்ற இன எழுத்துகள் தவறாக வருமிடங்களும், பிழைகளும் திருத்தப்பட்டுள்ளன. க-ச, த-ந, ப-ம, ர-த, நி-ளி, ஞ-ரு, னூ-நூ, டு-ரு-கு-மு போன்ற எழுத்துகள் தம்முள் மயங்குமிடங்களும் திருத்தப்பட்டுள்ளன. திருத்தம் பெற்ற பெரும்பாலான சொற்களின் மூலவடிவம், மூலத்தின் கீழே மூலப்படியில் உள்ளவாறு கொடுக்கப் பட்டுள்ளன.

மூலநூலில் உட்தலைப்புகள் தரப்பட்டுள்ளன; தலைப்புகள் இடம் பெறாத இடங்களில் தரப்பட்டுள்ள பொருத்தமான உட்தலைப்புகள் அடைப்புக் குறியிட்டுக் காட்டப்பட்டுள்ளன. மூலநூலில் சொற்கள், தொடர்கள் விடுபடும் இடங்கள் புள்ளியிட்டுக் காட்டப்பட்டுள்ளன. அது போன்ற இடங்கள் நிரப்பப்படும் நிலையில் அவை கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளன.

## மூலப்பாட ஒப்பாய்வு

இந்நூலுக்கு அகத்தியர் கற்பமுப்பு குருநூல் என்ற பெயரில் 1959இல் வெளி வந்த பழைய அச்சு நூல் ஒன்று உள்ளது. இதிலும் பதிப்பிக்க எடுத்துக் கொண்ட நூலிலும் மூலம் மட்டுமே உள்ளன. பழைய அச்சு நூலில் 103 பாடல்கள் உள்ளன. பதிப்பிக்க எடுத்துக் கொண்ட நூலில் 102 பாடல்கள் உள்ளன. பழைய அச்சு நூலில் இடம் பெற்றுள்ள காப்புச் செய்யுள், நூலறிமுகம் ஆகிய முதல் இரண்டு பாடல்கள் இந்நூலில் இல்லை. அச்சு நூலின் 3ஆம் பாடலும் இந்நூலின் முதல் பாடலும் ஏக மூலி என்ற ஒன்றைப் பற்றிப் பேசுகின்றன. இருப்பினும் பாடல்களின் வடிவங்கள் இரண்டிலும் மிகுந்த வேறுபாட்டினைப் பெற்றுள்ளன.

*காட்டு:*

### பழைய அச்சு நூல்: பாடல்: 3

மனோன்மணியாள் பாதமதை மனதில் வைத்து
மார்க்கமுள்ள குருமுடிக்க வகையுங் கண்டேன்
வனம்பெருத்த தென்பொதிகை யிருக்கும் போது
மாசித்த ரனேகர்வந்து கற்ப முண்டு
இனம்பிரித்துச் சரக்குவகை செந்தூ ரிக்க
ஏகமூலிகை யதனை யெடுத்துக் கேட்டார்
சினமடங்கி வாதமதைச் சுருக்கிச் சொன்னேன்
சீர்பெறவே யாவையும் நான்சாற் றினேனே.

### பதிப்பு நூல்: பாடல்: 1

மனோன்மணியாள் பாதத்தை மனத்தில் வைத்து
மார்க்கமுள்ள குருமுகமாய் வந்த நூல்தான்

வனம்பெருத்த மலைச்சார்ப்பில் தவசு பண்ணு
மகாயோகி தன்பதத்தை வணங்கிப் போற்றி
இனம்பிரித்துச் சரக்குவகை செந்தூ ரிக்க
ஏகமூலி கையதனா லெடுத்துச் சொல்வேன்
தனம்பெருத்த திரவியங்கள் செந்தூ ரம்தான்
சண்முகனார் கிருபையினால் சாற்று வேனே.

இதுபோலவே அனைத்துப் பாடல்களும் மிகுந்த வடிவ வேறுபாடுகளைப் பெற்றுள்ளன. சொல், தொடர், அடி ஆகிய அனைத்திலும் இவ்வடிவ வேறுபாடுகள் உள்ளன. இவற்றின் பொருண்மைகளிலும் சிற்சில வேறுபாடுகள் உள்ளன. மேலும் இடையிடையே ஓரடி, இரண்டடி முற்றிலும் வேறுபட்டு அமைகின்றன. பாட வேறுபாடுகளும் மிகுத்துக் காணப்படுகின்றன.

அச்சு நூலில் இடம் பெற்றுள்ள உட்தலைப்புகள் சில இதில் இடம் பெறவில்லை.

இந்த அச்சு நூலை ஆதாரமாக வைத்து இந்நூலில் பாட வேறுபாடு காட்டப்பட்டுள்ளது. முக்கியமான சொற்கள் மாறுபடுமிடங்களில் மட்டுமே இப்பாட வேறுபாடுகள் உடுக்குறியிட்டுக் காட்டப்பட்டுள்ளன. மேலும் அடிகள் மாறுபடுமிடங்கள் அதிகமாக இருப்பதால் விரிவு கருதியும் பாடவேறுபாடுகள் காட்டப்படவில்லை.

முதற் பாடலை அடுத்து இந்நூலில் வரும் இரண்டு பாடல்கள் (2, 3) இறை வணக்கமாக, குரு வணக்கமாக அமைகின்றன. இவையும் மற்றும் 5, 57 முதலான எண்களில் உள்ள பதினெட்டுப் பாடல்களும் பழைய அச்சு நூலில் இல்லை. இவற்றில் பின்வரும் செய்திகள் இடம் பெற்றுள்ளன.

இப்பாடல்களுள் பொதிகை எனும் தலைப்பில் (38-40, 43) தட்சிணாமூர்த்தி, அகத்தியர், பூரணானந்தர், புலத்தியர், இராமதேவர், வராக மூர்த்தி ஆகியோர் இந்நூலாசிரியர்க்குக் குருவாக இருந்தனர் என்பதும், என்ன உறவுமுறை ஆகின்றனர் என்பதும், சிறப்பாக இராமதேவர் வழி சூட்சுமங்களை அறிந்தவர் என்பதும், ஆதி சிவனை அறிந்ததால் சித்தர்களுக்கு எல்லாம் பிள்ளையானார் என்பதும் கூறப்படுகின்றன.

வசிய ஈடு எனும் தலைப்பில் (66-69) பெண்ணின் கருப்பையில் ஒன்றாகக் கலந்து வெளிவரும் சுக்கில சுரோணிதக் கலவையைக் கொண்டு செய்யப்படும் வசிய திலத மருந்து பற்றிக் கூறப்படுகிறது. இதன் பயனால் பெண்வசியம் உட்பட அனைத்திலும் வெற்றிக் கிட்டும் என்பதும் சுட்டப் படுகிறது.

இறுதியில் வரும் பாடல்கள் (96, 98-102) மற்றுமொரு வசிய மை பற்றியும் அதன் மகிமை, பயன்பாடு ஆகியவை பற்றியும் பேசுகின்றன. மேலும் இவற்றில் தவம், ஞானம், கருமம், புதிய கற்பம், காயசித்தி ஆகியவற்றைக் குருவின் வழியாக ஆசிரியர் பெற்றார் என்றும், தட்சிணாமூர்த்தி அருளி, பிற சித்தர் வழி அவர் பெற்ற இந்நூல் மிகச்சிறந்தது என்றும் கூறப்படுகின்றன.

இதுவரை இந்நூலில் இடம்பெற்றுப் பழைய பதிப்பில் இடம்பெறாத பாடல்களின் சுருக்கம் தரப்பட்டது. அடுத்து இந்நூலில் இடம்பெறாது பழைய அச்சில் இடம்பெற்ற பத்தொன்பது பாடல்களின் சுருக்கம் கீழே தரப்படுகின்றன.

1. நாதவிந்து, வாலை, அகாரம், உகாரம், சிகாரம், மகாரம், மனோன்மணி, சிவன் ஆகியோரைக் காப்பாக வைத்து இந்நூலைத் தொடங்குகின்றேன் (பா. 1).

2. சிவனே தட்சிணாமூர்த்தி என்று நான் அறிந்துணர்ந்தேன். நான் பாடியுள்ள பெரிய பெரிய நூல்கள் பலவற்றிலுள்ள கற்பமுறைகளை மட்டும் தனியாக எடுத்து இந்நூலை ஆக்கியிருக்கிறேன் (பா. 2).

3. இந்நூல் தவப்பயன் கொண்டவர்களுக்கு மட்டுமே கிடைக்கும் (பா. 4).

4. இந்நூலை முழுமையாகப் படித்து தனியாக இருந்து இதிலுள்ள செய்முறைகளைச் செய்தால் சித்தன் ஆவாய் (பா. 5).

5. தாயை வணங்கி குண்டலினியை ஏற்றிச் சற்குருவைப் போற்றி, நாள்தோறும் அ, உ என்று செபித்துக் கற்பமுண்டு வந்தால் உடல் என்றென்றும் நிலைத்து நிற்கும் (பா. 7).

6. மனோன்மணியால் கடாட்சத்தால் நாங்கள் ஞானம் பெற்றோம். நீயும் பெற விந்தை அடக்கிச் சிரஞ்சீவியாய் தவங்கள் செய்து கொண்டிரு. (பா. 40).

7. இவ்வாறு தவம் செய்துதான் நான் அகத்தியன் என்ற பெயரும், மோட்சமும் பெற்றேன். நவகோடிச் சித்தர்களைக் கண்டுகொண்டேன். ஓங்காரத்தின் உண்மையை உணர்ந்து சிவனும் பார்வதியும் தாய் தந்தையர் என அறிந்து கொண்டேன். இதனால் பல சித்தர்கள் என்னிடம் வந்து தொண்டு செய்து உயர்ந்த கற்பத்தைத் தெரிந்து கொண்டனர் (பா. 41).

8. பொதிகையில் சிவபெருமானிடம் கற்ப முறையைக் கேட்டேன். அவர் அகார, உகார, சிகார, மகாரங்களை ஒன்றன் பின் ஒன்றாகக் கூறினார் (பா. 42).

9. ஒரு நாள் சிவபிரான் பார்வதிக்கு அகார, உகாரங்கள் பற்றிக் கூறும் போது நானும் அருகில் இருந்தேன். அப்போது தேவி வல்லாரைக் கற்பம் பற்றிக் கேட்க அவர் கூறுவதை நானும் தெளிவாகக் கேட்டுக் கொண்டேன். அதை உனக்குக் கூறுகிறேன் (பா. 45).

10. கற்பத்தினுடைய சூட்சுமத்தை யாருக்கும் எக்காரணத்தை முன்னிட்டும் கூறாதே. மனத்தை அடக்கித் தெளிவு கொண்ட பெரியோர்கள் வந்தால் அவர்களைக் கேட்டு கற்ப முறைகளை அறிந்து கொள் (பா. 59).

11. காலையிலும் மாலையிலும் நாள்தோறும் **அம்** என்று கூறி மூச்சை உள்ளே நிறுத்தி அகார பூசையை ஓராண்டும், அடுத்து அதே போல **உம்** என்று கூறி உகார பூசையை ஓராண்டும், அதற்கடுத்து இவ்விரண்டைச் சேர்த்தும் பூசை செய்ய வேண்டும் (பா. 68).

12. இப்பூசையைத் தொடர்ந்து செய்து வந்தால் ஆறாவது ஆண்டில் மயக்கம் உண்டாகும். உடலில் தோல் உரியும். தொடர்ந்து 12 ஆண்டுகள் செய்து வந்தால் மன்னர்போல் வாழ முடியும் (பா. 69).

13. 12 ஆண்டுகளுக்குப் பின் மகார, சிகார, கற்பங்களைக் கொள்ள வேண்டும். அதாவது சுழி முனையில் மனத்தை வைத்து அங்கே நாத விந்துக்களைப் பூசை செய்ய இவை இரண்டும் சேர்ந்து அமுதமாக மாறும். வாசியானது ஓடாமல் ஒரே இடத்தில் அடங்கி நிற்கும் (பா. 70).

14. அதன் பின் அட்டாங்க யோகம் செய்தும், கற்பங்களை உண்டும் வரவேண்டும். பக்தியுடன் பால், பழம், பாசிப்பயிறு சேர்த்துச் சமைத்த உணவு ஆகியவற்றை அளவோடு உண்ண வேண்டும் (பா. 71).

15. வசிய மையின் பெருமை கூறப்படுகிறது (பா. 98).

16. மனோன்மணியின் தீட்சையை இருநேரமும் விடாமல் செய்து வந்தால் மட்டுமே நான் கூறியவை பலிக்கும். **வைத்திய பூரணம் 205** என்ற நூலிலும் பலவகையான கற்பங்களையும், மருத்துவங்களையும் கூறியுள்ளேன் (பா. 100).

17. உள்ள இடத்திலேயே இருந்து கொண்டு கற்ப ரகசியத்தை வெளியில் கூறாமல் தன்னுள்ளேயே மனத்தை இருத்தி பூசை செய்தால் மேலான நிலையை அடையலாம் (பா. 101).

18. ஒழுக்கம், முறையான பூசை, ஓர் இடத்தில் இருந்து சாதனை புரிதல், மனோன்மணியாளிடம் அமுதம் வாங்கி உண்ணுதல் சற்குருவை அறிதல் போன்றன கைக்கொண்டால் நீ ரிஷி ஆவாய் (பா. 102).

19. என்னால் கூறப்பட்ட அனைத்துவிதமான நூல்களுக்கும் இதுவே குருநூல் ஆகும். இதில் கூறியுள்ள கற்பமுறைகளை முறைப்படி அறிந்தும், செய்தும் உட்கொண்டால் உடல் வலுக்கும் (பா. 103).

## தட்சிணாமூர்த்தி

அகத்தியர் ஒருவரல்ல. 32ற்கும் மேற்பட்ட அகத்தியர் உண்டு என்ற கருத்து உண்டு. அகத்தியர் பலருண்டு என்று கூறப்படுவது போல் அகத்தியருக்குப் பொதிகை, பொதிகை நாயனார், பொதிய முனி, கும்ப முனி போன்ற வேறு பல பெயர்களும் உண்டு. இவ்வகத்தியருக்குத் தட்சிணாமூர்த்தி என்ற பெயரும் இருந்திருத்தல் கூடுமென்பதையும் மருத்துவ நூல்கள் புலப்படுத்துகின்றன. ஏனென்றால் அகத்தியர் பெயரில் உள்ள பல நூல்கள் தட்சிணாமூர்த்தி பெயரிலும் கிடைக்கின்றன.

சிவன் தட்சிணாமூர்த்தி என்ற பெயரில் சின்முத்திரையில் அமர்ந்து நான்கு சித்தர்களுக்கு உபதேசம் செய்தார். அவர்களுள் ஒருவர் அகத்தியர். எனவே வேறு பெயர்கள் பலபெற்றுள்ள அகத்தியர் ஈசன் பெயராகிய தட்சிணாமூர்த்தி பெயரிலும் அழைக்கப்பட்டிருக்கலாம்.

தட்சிணாமூர்த்தி ஆதிகுரு. சனக சனாதியருக்கு உபதேசம் செய்வதற்காகச் சிவபெருமானே தட்சிணாமூர்த்தியாக எழுந்தருளிய தாகப் புராணங்கள் கூறுகின்றன.

ஒவ்வொரு சிவன் கோவிலிலும் தெற்கு முகமாக அமர்ந்திருக்கும் தட்சிணாமூர்த்தியின் சிலையைக் காணலாம். சிவன் அமர்ந்துள்ள கோலத்திற்குத் தட்சிணாமூர்த்தம் என்றே பெயர்.

இது தவிர தட்சிணாமூர்த்தி என்ற பெயரில் ஒரு சித்தர் இருந்ததாகவும் தெரிகிறது. ஆவணி மாதம் திருவோண நட்சத்திரம் முதற்காலில் பிறந்த இவர் மாயா சித்தர் என்று கூறப்படுவார். கொல்லிமலைநாதர் என்ற சித்தரின் பேரன் என்றும், வைணவ சம்பிரதாயத்தைப் பின்பற்றியவர் என்றும் கூறப்படுகிறது.

தட்சிணாமூர்த்தி பற்றிப் போகர் பின்வருமாறு பாடியுள்ளார்.

ஆதியாம் தட்சிணா மூர்த்தி யப்பா
அப்பனே அவர்மரபு ஏதென் றாக்கால்
நீதியாங் கவுண்டன்என்ற மரபே யாகும்
நிஷ்களங்கம் ஆனதொரு மூர்த்தி யென்பார் (பா. 5716)

கோனான தட்சிணா மூர்த்தி அப்பா
குவலயத்தில் வெகுகாலம் இருந்த சித்து
மானான வயதுவும் ஏதென் றாக்கால்
மகத்தான ஆயிரத்தி சொச்ச மப்பா
தோணவே திருமந்திரம் பாடி யல்லோ
தோற்றமுடன் சமாதிக்கு ஏக எண்ணி
ஆணவங்கள் தான்ஒடுங்கிச் சித்துத் தானும்
அன்பான காசிபதி சென்றிட் டாரே (5808)

சென்றதோர் நர்மதா நதியின் பக்கம்
சிறப்பான தட்சிணா மூர்த்தி னாயன்
குன்றான கரையோரம் மண்ட பந்தான்
கொற்றவனார் சமாதிமுகம் சென்று மல்லோ
வென்றிடவே ஒருயுகமாம் அறுப தாண்டு
உத்தமனார் தானிருந்து வந்த சித்து
தென்திசையில் தட்சிணா மூர்த்தி என்று
தேசமதில் பேர்கொண்ட சித்து பாரே (பா. 5809).

போகர் தட்சிணாமூர்த்தி பற்றி மேற்கூறியபடி பாடியுள்ளார். மேலும் போகர் ஏழாயிரத்தைப் பாடி முடித்த போது மறைப்பில்லாமல் பாடிவிட்டாரென்று சித்தர்கள் கோபம் கொண்டனர். தட்சிணாமூர்த்தியாரிடம் சென்று முறையிட்டனர். அகத்தியர் போகரைத் தட்சிணாமூர்த்தியிடம் அழைத்துச் சென்றார். தட்சிணாமூர்த்தி போகர் பாடிய நூல் சொல்லக் கேட்டு மகிழ்ச்சியடைந்து பாராட்டினார்.

போகர் 7000, முதற் காண்டத்தில், இச்செய்தி இடம் பெற்றுள்ளது.

காட்டு

முனிந்திட்டு கூர்மமுனி தனைய ழைத்து
மூர்க்கமாம் போகர் என்ற முனிவர் தம்மைக்
கனிந்திட்டுக் கயிலாய தட்சிணா மூர்த்தி
காரியமாய் அழைத்துவரச் சொன்னார் என்று
திணிந்திட்டுச் சீக்கிரத்தில் கொண்டுவா என்றார் (பா. 281).

மேற்கூறிய செய்திகளின் வழி தட்சிணாமூர்த்தியின் பெருமையும், அவருக்குச் சித்தர்களின் மேலிருந்த அதிகாரமும் தெரிய வருகிறது.

அகத்தியர் போகரைப் புகழ்ந்து பேசியபின் போகரின் நூலைக் கேட்ட தட்சிணாமூர்த்தி,

என்றதோர் வார்த்தையைத்தான் மூர்த்தி கேட்டே
ஏற்றமாம் போகரே நல்விசேடம் சொன்னீர்
பன்றதோர் பானமுண்ட னுப்பிக் கொண்டு
பாங்கான குகைதன்னில் போனார் போகர்
தென்றதோர் சின்மயமாந் தேவர் தாமும்
சித்தர் யோகிகளை அழைத்துச் சொல்வார்
அன்றதோர் அகத்தியரே நீர்தாம் கேளும்
அவரவர்கள் கற்றகல்வி யாண்மை தானே

ஆண்மைதான் அவர்சொன்னால் நம்மால் தானும்
அல்லவென்று சொல்வதற்கு நம்மால் ஆமோ
தாண்மைகள் நமக்காகும் ரிசிகள் சித்தர்
தற்காரம் உங்களுக்கு வேண்டாம் என்று
வேண்மைதான் அவரவர்கள் குகைக்குள் போங்கள்
விரைந்துமே என்றுசொல்லி அனுப்பி விட்டுக்
காண்மைதான் சமாதியிலே இருந்து விட்டார்
கயிலாயச் சின்மயமாந் தேவர் தானே

என்று சித்தர்களுக்குப் புத்திமதி கூறி அனுப்பி வைக்கிறார்.

தட்சிணாமூர்த்தியின் திருமந்திரத்தைத் தரிசித்தாலே போதும் என்று அகத்தியர் தமது பெருநூலான பனிரெண்டாயிரத்தில் கூறுகிறார். இவற்றிலிருந்து தட்சிணாமூர்த்தி சித்தர்களுக்கு முதன்மையானவர் என்பது அறியப்படுகிறது.

எனவே சிவபெருமான் தட்சிணாமூர்த்தியாக எழுந்தருளி சித்தர்களுக்கெல்லாம் முதன்மையானவராக விளங்கினார் என்று கொள்ள முடியும். பதிப்பிக்க எடுத்துக் கொண்ட இந்நூலில் தெக்ஷிணாமூர்த்தி பகவான் அருளிச்செய்த குருமுகம் நூறு என்ற தலைப்பு உள்ளது. இறுதியில் ஸ்ரீதெக்ஷிணாமூர்த்தி குருமுகம் நூறு முற்றிற்று என்று உள்ளது. இவையும் இதனை மெய்ப்பிக்கின்றன.

*****

# நூலாய்வு

இரக்கச் சிந்தனை உண்டய சித்தர் பெருமக்களால் யாம்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற பெருநோக்கில் எழுந்த நூல்களுள் இந்நூல் குறிப்பிடத்தக்க ஒன்று.

மறுப்பது உடல்நோய் மருந்தென லாகும்
மறுப்பது உளநோய் மருந்தெனல் சாலும்
மறுப்பது இனிநோய் வாராது இருக்க
மறுப்பது சாவை மருந்தென லாமே

என்ற திருமந்திரப் பாடல் இந்தக் கற்பமுப்பு குருநூலின் இலக்கியத்திற்கு இலக்கணமாகத் திகழ்கிறது.

## நூல் தலைப்பு

நூலின் பெயரான தட்சிணாமூர்த்தி குருமுகம் நூறு என்பதே காரணப் பெயராகத் தான் அமைந்துள்ளது. இங்குத் தட்சிணாமூர்த்தி எனும் ஆதிசிவமே குருவாக நிற்கிறார். இவர் இவ்வுலக உயிர்கட்குப் பேராசானாய் விளங்கித் தென்முகம் நோக்கி ஞானம் தந்து, பேரின்ப வாழ்வை அடைவிக்கும் அருட்கடலாய் விளங்குவதே இந்நூலின் மறைபொருளாம். அவ்வீசனே அகத்தீசனாய், அகத்தியனாய், அவர் வழித் தோன்றலாய் இந்நூலை அருளியிருக்கிறார். ஏனெனில் தான் அதுவாகவும், அதுவே தானாகவும் நிற்கும் தட்சிணாமூர்த்தி குருவாக நின்றருளியதால், அவர் வழியாகப் பெற்ற இந்நூல் குருமுகம் என்று பெயர் பெற்றுள்ளது. தட்சிணாமூர்த்தி முதல் ஏனையச் சித்தர்களின் வழி அறியப்பட்ட நூல் என்று இதற்குப் பொருள் கொள்ள முடியும்.

## நூலின் கட்டமைப்பு

சிறிய நூலாகவும், எளிய நடையிலும் அமைந்துள்ளது. மற்ற சித்தர் பாடல்களில் கூற வந்த செய்தியானது பரிபாசையில் மறைபொருளாகக் கூறப்பட்டிருக்கும் மேலும் கிடைக்காத மூலப் பொருட்கள் சொல்லப்பட்டிருக்கும். ஆயின் இந்நூல் பரிபாசைச் சொற்களைக் குறைவாகக் கொண்டும், கிடைக்கும் மூலப் பொருட்களைக் கொண்டும் சொல்லப்பட்டிருக்கிறது. இதில் யோகம், ஞானம், மருத்துவம், வாதம், கற்பம் ஆகியன பற்றிக் கூறப்பட்டுள்ளது. குருமருந்தே அனைத்துக்கும் ஆதி என்ற அடிப்படையில் முப்புகுரு என்ற அடைமொழியுடன் எழுந்த இந்நூல் செய்திகள், பயனுறு செய்திகளின் களஞ்சியத் தொகுப்பாக அமைகிறது.

இந்நூலாசிரியர் பொதிகை எனுந் தலைப்பில் தான் வந்த வகையினையும், தான் எந்தப் பாரம்பரியத்தைச் சேர்ந்தவன் என்பதையும் கூறுகிறார். மேலும் மனோன்மணியாள் என்று பராசக்தியை விளித்து, அந்த உலக மாதாவின் அருட்கடாட்சத்தால் இந்நூல் கிடைத்தது என்று கூறுவது அவரின் தன்னடக்கத்தை வெளிப்படுத்துகிறது.

## நூற்பயன்

இந்நூலில், 'விதியிருந்தால், தகுதியுள்ளவரே இதன் பயனை அடையலாம்' என ஆங்காங்கே கோடிட்டுக் காட்டப்படுகிறது. இதனைப் பற்றிச் சிந்திக்கும் போது இந்நூல் கையில் கிடைத்து, அதன் பொருளுணர்ந்து படிக்கும் பேரறிவாளன் பாக்கியவான் ஆவான் என்று தெரிகிறது. அதுமட்டுமன்றி விதியும் தகுதியும் இல்லாதவர்களுக்குக் கிடைக்காது என்பதுவும் மிகச் சூட்சமமாக அதாவது உட்பொருளாகச் சொல்லப்படுகிறது. ஒரு மூலிகையின் பயனை முழுமையாகப் பெற வேண்டுமானால், சித்தர்கள் கூற்றுப்படி உடலைத் தூய்மை செய்து தூபதீபம் காட்டி மந்திரங்கள் சொல்லி, நல்ல நேரத்தில் அதன் வேர்கள் அறாமல் பிடுங்கி எடுக்க வேண்டும். மூலிகை எடுப்பதற்குக் கூட இத்தனை விதி முறைகள் தேவையென்றால் உடலைப் பொன்னுடலாக்கி மரணமிலாப் பெருவாழ்வை நல்கும் குரு முப்புவிற்கு விதியும், தகுதியும் நூலின் பல இடங்களில் அறுதியிட்டுச் சொல்லப்பட்டிருப்பதில் வியப்பேதுமில்லை. அவ்வாறு ஏன் கூறினர் என்றால் தகுதியற்ற, ஒழுங்கற்ற ஒருவனிடம் ஓர் உயர் பொருள் சென்றடையுமானால் அப்பொருளின் உயர்வு பற்றியும், சொல்லப்பட்டுள்ள அரிய செய்திகள் பற்றியும் மிக எளிதாக நினைத்து விடக் கூடும்.

அனைத்து வியாதிகளுக்கும் ஒரே மருந்து எனும் பொருளில் ஏகமூலி எனும் முப்பு பற்றிப் பேசுகிறது. இந்த ஏகமூலி அனைத்து மருந்துகட்கும் வீரியத்தை ஏற்படுத்தும், இதனால் வாசி ஒடுங்கும். இறப்பு நீங்கும். உடல் பொன்னொளி பெறும். சித்தர்கள் நிலையை உலக மாந்தர் பெற முடியும். எனவேதான் பற்பம், செந்தூரம், தயிலம், மெழுகு போன்றவை பற்றிக் கூறுவதுடன் காயகல்ப மருந்துகள் பற்றியும் கூறுகிறது. மேலும் நம்மை யாரும் எதிர்க்காமல் இருக்கவும், அவர்களால் எவ்வித இடையூறும் ஏற்படாதிருக்கவும் வசியம் எனும் தலைப்பில் அதற்குரிய மருந்துகளைக் கூறுகிறது. அது மட்டுமல்லாமல் இறந்தவரையே எழுப்பும் ஆற்றலுடைய மரணநோய் நீக்கும் தேவாமிர்த மருந்துகளையும் இந்நூல் கூறுகிறது.

மருந்துப் பொருள்களைப் பற்றிக் கூறும் போது அதற்குரிய வேறு பெயர்களையும் ஆங்காங்கே நூல் சுட்டுகிறது. அரிதாரம் என்கிற தாளகம் (பா. 25) என்ற அடியை இதற்குக் காட்டாகக் கூறலாம். ஒரு சொல்லுக்குப் பொருள் புரியாத போது, அதன்

பொருள் நூலின் அடுத்து வரும் பகுதிகளில் அல்லது வேறு நூல்களில் இடம் பெற்றிருத்தலைச் சித்தர் நூல்களில் பரவலாகக் காணமுடிகிறது. அதே போல் இந்நூலில் வரும் **அமுதப் பால்** என்ற சொல் உமிழ் நீரையே குறிக்கிறது என்பதைப் பின்வரும் பகுதிகளின் வழி அறிய முடிகிறது. இங்ஙனம் மருந்துப் பொருளுக்கு உள்ள வேறுபெயர்களை, பரிபாசைச் சொற்களுக்குரிய பொருள்களைக் கூறுவதன் வழி நூலின் எளிமையும் தெளிவும் வெளிப்படுகிறது.

இந்நூல் நுவலும் செய்திகளில் சீவவர்க்கம் என்னும் உயிர்க்கொலை அல்லது அவ்வுயிரிகளின் குருதி, பலி செய்வது போன்ற செய்திகள் இல்லாதிருப்பது இந்நூலின் சாத்வீகத் தத்துவத்தையும், உயிரிரக்கச் சிந்தனையையும் காட்டுகிறது. உலக மாந்தருக்கு உரிய ஒழுக்கமும் ஏக பத்தினி விரதமும், தவம் செய்யும் முறைமையும் (பா. 58-65) நூலில் வலியுறுத்தப்படுகிறது. இல்லறமே நல்லறமென்றும் அதனால் இன்பம் கிட்டும் என்றும் கூறப்படுகிறது. இச்சையற்றிருப்பின் **தொட்டதெல்லாம் பொன்னாகும்** என்ற சித்தாந்தத்தைப் தெள்ளத் தெளிவாய் விளக்குகிறது.

## உயர்நோக்கு

பஞ்சபூதக் கொள்கைப்படி இம்மனித உடலைப் பிரிக்கவும், கூட்டவும், பருவுடலிலிருந்து சூட்சம உடலுக்குச் செல்வதும், ஒளியுடம்பாக்குவதும் சித்தர்களுக்குக் கைவந்த கலையாகும். இக்கலையை ஒரு பாமரனும் அடையலாம், அடைய முடியும் என்பதே அவர்களின் நோக்கமாகும். மோடி வித்தை காட்டவா இவ்வாறெல்லாம் செய்தார்கள். இல்லவே இல்லை. மரணமிலாப் பெருவாழ்விற்கு வழிகோலவே இவ்வாறெல்லாம் செய்து காட்டினர். மரணமுற்றால் பிறவி வரும். பிறவியே துன்பம் என்று கூறுபவர்கள் ஞானிகள். துன்பத்திற்குக் காரணமாக ஆசையிருந்தாலும் பிறவிகள் அடுத்தடுத்து வந்து கொண்டேயிருக்கும். எனவே ஆசையை விட்டுப் பற்றில்லாமல், அன்றாடச் செயல்களை நன்முறையில் செய்து ஒழுங்குடன் வாழ்வதே மனித வாழ்வின் மாண்பாகும். இதனைவிடுத்து மண், பொன், பெண் போன்றவற்றின் மீது பற்று வைத்து மனங்கெட்டு, உடல் கெட்டு, நோய் ஏகித் துன்பமடைந்து மண்ணில் மடிவதைத் தடுக்கவே இவ்வாறான கற்பமுறை அடங்கிய நூல்கள் சித்தர்களின் அருளால் அவ்வப்போது தோன்றி யிருக்கின்றன.

இந்நூல் படிக்கும் வாய்ப்பினைப் பெற்றுள்ளோர் சித்தர்களின் அருட்கடாட்சத்தைப் பெறுவர் என்பதை நூற்கருத்து புலப்படுத்துகின்றது. சிறப்பு மிகுந்த குரு சுண்ணம் செய்து முடிக்கும் வகையைக் கூறிச் சித்த மருத்துவம் தழைத்திட வழி கோலியிருக்கின்றது.

*****

# முப்பு - பொது விளக்கம்

சித்த மருத்துவ வளர்ச்சிக்கு முப்புவே முழுமுதற் காரணம். மருந்துகளை உடலெனக் கொண்டால், முப்புவினை உயிர் என்று கொள்ளலாம். இந்த முப்புவாகிய உயிர் சேரும் போதுதான், மருந்துகளாகிய உடல் செயல்படும்.

*குருவிலே பணவிடைதா னெடுத்துக் கொண்டு*
*குளிகைக்கும் செந்தூர பற்பத் துக்கும்*
*பருகிவிடு லேகியம்தான் ரசாய னங்கள்*
*பத்திரமாய் மாத்திரைக்கும் கசாயத் தோடு*
*மருகிவிடு சூரணங்கள் தைலத் துக்கும்*
*மாட்டிவிடு பணவிடைதான் மருந்து சித்தி*
*குருவிலே செந்தூரம் செய்யு மார்க்கம்*
*குருவுடைய கடாட்சத்தால் கூறு வேனே (பா. 16)*

என்ற இந்நூற்பாடலும் குளிகை, கசாயம் போன்ற மருந்துகளைச் செய்யும் போது இம்முப்பு சேர்ந்தால் தான் நோய்கள் முழுமையாக விலகும், விரைவில் குணமாகும் என்கின்றது. மருந்து செய்முறைகளுக்கு எனக் கடின உழைப்பை நல்கி முப்பு சேர்க்காமல் பலவாறாகச் செய்யப்படும் மருந்துகள் பலனளித்து வந்த போதிலும் முழுமையான நிறைவான பலனைத் தருவனவாக இல்லை.

*நிசமாகும் முன் குருவை மறந்து போனால்*
*நீறாது என்னப்பட்டும் நிசமா காது (ப. 31)*

என்று இந்நூலில் கூறப்படுவதால் முப்பு சேர்க்காமல் செய்யப்படும் பற்பம் பயனற்றது என்பது தெரிகிறது. இது பற்பத்திற்கு மட்டுமல்ல. அனைத்து மருந்துகளுக்கும் பொருந்தும். எனவே இம்முப்பு சேர்க்கப்படும் போதுதான் அவை முழுமை பெறுகின்றன.

## கடமையும் விழிப்புணர்வும்

சித்த மருத்துவத்தைச் செய்து வரும் பரம்பரை மருத்துவர்களும், படித்து முடித்த, படிக்கும் சித்த மருத்துவர்களும், சித்த மருத்துவ அறிஞர்களும், சித்த மருத்துவ ஓலைச் சுவடிகளைப் படிக்கும், படியெடுக்கும், வெளியிடும் பேறு பெற்றவர்களும், சித்த மருத்துவ நூல்களைப் படிக்கும் பொதுமக்களும் சித்தர்களின் அனுக்கிரகம் பெற்றவர்களே. இவர்கள் அனைவரும் முப்பு பயிற்சியில் ஈடுபடத் தகுதியானவர்களே. ஆயின் இந்த நம்பிக்கை என்பது அவர்கள் மனத்தே ஆழமாக, உறுதியாக ஏற்படவில்லை. எனவே இவர்கள் தகுதி பெற்றவர்களாக இருந்தும் அச்செயலின் பால் நினைவற்றவர்கள் ஆகவே இருந்து வருகின்றனர்.

எனவேதான் யானை தன் பலம் அறியாது என்பது போலத் தம் உள்ளுணர்வின் ஆற்றலை அறியாதவர்களாகவே மேற் கூறியவர்கள் இருக்கின்றனர். இன்னும் சொல்லப் போனால் மனிதப் பிறவி எடுத்தாலே ஞானம் பெறக்கூடிய தகுதி ஏற்பட்டுவிடுகின்றது.

**எண்ணியர் எண்ணியாங்கு எய்துவர் எண்ணியர்**
**திண்ணியர் ஆகப் பெறின்**

**தெய்வத்தால் ஆகா தெனினும் முயற்சிதன்**
**மெய்வருத்தக் கூலி தரும்**

**ஊழையும் உட்பக்கம் காண்பர்**

என்பனவற்றிற்கிணங்கத் தம் உள்ளுணர்வின் ஆற்றலை உணர்ந்து நல்லெண்ணத்துடன், மனவலிமையுடன் இச்செயலில் ஈடுபடுவார் களேயானால் எதிர்கால உலகம் முப்பின் பயன்பாட்டினை முழுமையாகப் பெறும் என்பது திண்ணம். இப்பயன்பாட்டினைப் பெறும் போது உலக அரங்கில் முப்பு சேர்க்கப்பட்ட சித்த மருந்துகள் தனிச்சிறப்பிடம் பெற்றுத் திகழும் என்பதில் எள்ளவும் ஐயமில்லை. மேலும் குறிப்பிட்ட ஒரு காலக்கட்டத்தில் சித்த மருந்து என்றாலே அது முப்பு சேர்க்கப்பட்ட மருந்துதான் என்ற நிலை உருவாகும்.

உலோக பற்பச் செந்தூரங்களைப் பயன்படுத்துவதற்கு உலக நாடுகள் பல அஞ்சுகின்றன. ஏன் நம் நாட்டில் கூட அவ் அச்சவுணர்வு இருக்கிறது என்று தான் கூற வேண்டும். அதாவது உலோக மருத்துவம் சிறுநீரகத்தைப் பாதிக்கும் அல்லது வேறு பக்க விளைவுகளை ஏற்படுத்தும் என்ற எண்ணமே இந்த அச்சவுணர்வுக்கு முக்கியக் காரணம்.

### சித்த மருத்துவமும் மாண்பும்

உலோக மருத்துவம் என்பது தேர்ந்த அனுபவ சித்த மருத்துவ அறிஞர்களால் மட்டுமே செய்யப்பட்டு வருகின்றது. ஏனென்றால் உலோகம் முப்பு சேர்க்கப்பட்டு உப்பாக மாற்றப்படுகிறது. நம் உடல் ஏற்றுக் கொள்ளும் அளவிற்கு ஏற்றதாக அவ்வுப்பு அமையும். எனவே இம்முறையில் முடிக்கப்படும் மருந்துகள் உலோகத் தன்மை அற்றவை. முன்னோர்கள் செய்முறைப்படி அல்லது குருவழியாக செய்து முடிக்கப்படும் இம்மருந்துகள் மிகவும் பயனுள்ளவையாகவும் கடுமையான நாட்பட்ட நோய்களை நீக்குகின்ற விதத்திலும், மாற்று மருத்துவத்தால் இயலாததை வெற்றி கண்டுள்ள நிலையிலும் உள்ளன. கல்லீரல் நோய், மண்ணீரல் நோய் போன்ற ஈரல் நோய்களில் ஆங்கில மருத்துவம் செயல்படாத நிலையில் சித்த மருத்துவமே இவற்றிற்குச் சிறந்த மருத்துவமாக விளங்குவதை எடுத்துக்காட்டாகக் கூறலாம். இன்றைக்கு எயிட்ஸ் என்கின்ற ஆட்கொல்லி நோயை உலக விஞ்ஞானம் தீர்க்க முடியவில்லை. இந்நோய்க்குச் சித்த மருத்துவம் மருந்து கண்டு வெற்றிக் கொடி நாட்டியுள்ளது. இதற்கு நம் காலத்தில் வாழ்ந்து வரும் சித்தரும், முன்னாள் கண்காணிப்பாளரும், பேராசிரியருமான செ.நெ. தெய்வநாயகம் அவர்களின் ஆட்கொல்லி நோய் போக்கும் ஆய்வைக் காட்டாகக் கூற முடியும். மேலை நாட்டு மருத்துவத்தை முழுதும் உணர்ந்த இவர் சித்த மருத்துவத்தின் பெருமைக்கும் முரசொலி கொட்டுகிறார். எனவே சித்தர் கலைகள் என்றும் உயிரோட்டமானவை; இறப்பைத் தீர்ப்பவை. வாழ்நாளைக் கூட்டுபவை. எனவே உலகநாடுகள் அஞ்சும் பற்பச் செந்தூரங்களை இன்றும் நம் சித்த மருத்துவர் செய்து கொண்டும் கொடுத்துக் கொண்டும் தான் உள்ளனர். இது சித்த மருத்துவத்தின் தனிச்சிறப்பாகும்.

நவலோகங்களான இரும்பு, செம்பு, காரீயம், வெள்ளீயம், எஃகு, வெள்ளி, தங்கம், தரா ஆகிய மூலப்பொருட்களைக் கொண்டு காய கற்ப மருந்துகள் தயாரிக்கவும், ஒரு தாழ்ந்த உலோகத்தை உயர்ந்த உலோகமாக மாற்றவும் இம்முப்பு மூல முதற்பொருளாக விளங்குகிறது. வாத வைத்திய முறையில் ஓர் உலோகத்தினுடைய உலோகத் தன்மை (Metalic Power) மாற்றப்படுகிறது. அதனுடைய விசத்தன்மையும், அதனால் ஏற்படுகின்ற பக்கவிளைவுகளும் அகற்றப்படுகின்றன. அந்நிலையில் இந்த உலோகத்திடம் இருந்து கிடைக்கின்ற பற்பச் செந்தூரம் ஓர் உயர்ந்த உயிர்காக்கும் மருந்தாக அல்லது மரணத்தைத் தீர்க்கும் கற்பமாக ஆகிறது. இங்ஙனம் சித்தர்கள் அவர்கள் கண்ட அன்றைய விஞ்ஞானத்தில்

மெய்ஞ்ஞானத்தின் வழி ஒரு தாழ்ந்த உலோகத்தை அமுதப் பொருளாக மாற்றியுள்ளனர்.

இன்றைய சூழலில் சித்தர்களின் அறிவியலை முழுமையாகப் படிக்காமல், முழுமையாக ஆய்வு செய்யாமல் மேலைநாட்டு மருத்துவ முறையைக் கருத்தில் கொண்டு நம்நாட்டு மருத்துவ முறை இகழப்படுகிறது. இது தன் தாயைத் தானே இழிவு செய்வது போன்றதாகும். ஒன்றைப் பற்றி நாம் பேச வேண்டுமானால் அந்தக் கலையை நாம் முழுமையாகக் கற்றுணர வேண்டும். அல்லது நாமே அதுவாக மாற வேண்டும். அந்நிலையை எட்டாமல் ஒரு மெய்ஞ்ஞான பொக்கிசத்தைப் பொய்யென்று கூறக்கூடாது. சித்தர்களின் கூற்று பொய்யென்றால் நம் சாத்திரங்களும், வேதங்களும், இதிகாசங்களும் மட்டுமல்ல இம்மண்ணில் தோன்றிய நூல்கள் அனைத்துமே பொய்யென்று அல்லவா ஆகிவிடும்.

**வினையின் நீங்கி விளங்கிய அறிவால்**
**முனிவன் கண்டதே முதல்நூ லாகும்**

என்ற கருத்து ஈண்டு எண்ணத்தக்கது. ஏனெனில் வினையில் நீங்கி இருந்தால்தான் நூல் இயற்ற முடியும். இந்நூலில் கூறப்பட்டுள்ள முப்பு சேர்க்கப்பட்ட மருந்தால் மலை போல வந்த வினை நீங்கும் என்று கூறப்படுகிறது. அவ்வகையில் இந்நூல் வினையை நீக்க வந்த நூலாகத் தன்னைப் பறைசாற்றுகின்றது.

## சித்த மருத்துவம்

நோயின்றி வாழும் வழியினைக் கூறும் சித்த மருத்துவம் உடல், உளம், உயிர் என்ற மூன்றும் ஒரு நிலைப்படும் வழியினைக் கூறுகின்றது. இதில் கூறப்படும் ஞானம், யோகம் போன்றவை உயிரையும் உளத்தையும் தூய்மைப் படுத்துவன. உடலைத் தூய்மைப்படுத்தக் கற்ப மூலிகைகள், இரசவாதங்கள் போன்றவை பயன்படுகின்றன. இச்சித்த மருத்துவம் தமிழ் மருத்துவமாகும். இத்தமிழ் மருத்துவத்திற்குச் சித்தர்களே பிரமாக்களாகத் திகழ்ந்தனர். எனவே இது சித்த மருத்துவம் என்ற பெயரினைப் பெற்றது. மனித உடல்வாகையும், மூலிகை மற்றும் மருந்தின் தன்மையையும் கணக்கில் கொண்டு இம்மருத்துவம் விளங்குகிறது.

மனித உடலிலுள்ள வாதம், பித்தம், சிலேத்துமம் என்பனவற்றை அடிப்படையாகக் கொண்டு இம்மருத்துவம் செயல்படுகின்றது. மூலிகை, உலோகம், அலோகம், விலங்கினப் பொருள் முதலியவற்றைக் கொண்டு சித்த மருந்துகள் தயாரிக்கப்

படுகின்றன. சித்தர்கள் இலை, தழை, வேர் ஆகியவற்றாலான மருந்துகளை மட்டுமே முதலில் நோயாளிக்குத் தரவேண்டும் என்று கூறுகின்றனர். மேலும் இவற்றைக் கொடுத்த பின்பும் நோயாளிக்கு நோய் தீரவில்லை என்றால் தான் உலோகங்களால் ஆன பற்பச் செந்தூரங்களைப் பயன்படுத்த வேண்டும் என்கின்றனர்.

**வேரு பாரு தழை பாரு மிஞ்சினாக்கால்**
**மெல்லமெல்லப் பற்பச் செந்தூரம் பாரு**

என்ற இவ்வடிகள் மேற்சொன்ன கருத்தை வலியுறுத்துகின்றன.

வாதம், பித்தம், சிலேத்துமம் ஆகிய மூன்றும் உடலைக் காக்கின்றன. வாதம் நரம்பு மண்டலத்தையும், பித்தம் பித்த நீரையும், சிலேத்துமம் சுவாசப் பையையும் குறிக்கின்றன. இம் மூன்றும் சமநிலை அடைந்து ஒரு நிலைப்பட்டால் உடலில் நோய்கள் அணுகாது. இவை ஒன்றுக்கொன்று மாறுபட்டு நிலை தடுமாறினால் நோய்கள் தோன்றும். இம்மூன்றில் சீர்குலைவு ஏற்படும் போது வலி தோன்றும். சீர் குலைவும் வலியும் அதிகரிக்குமாயின் உயிர்ச் சத்தியின் களைப்பு அதிகரித்து விடுகின்றது. அவ்வாறு நிகழும் போது உடலியக்கம் பெருமளவு தடைபட்டு விடுகின்றது. எனவே உடலுக்கும் உயிர்ச் சக்திக்கும் இடையே உள்ள இரத்தம், வெப்பம், காற்று ஆகிய மூன்றுக்கும் ஊறு நேர்ந்தால் நோய் ஏற்படும்.

இயற்கையோடு இணைந்த இம்மருத்துவம் நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் என்ற பஞ்சபூதத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது. நீர், நெருப்பு, காற்று ஆகிய மூன்றும் சேர்ந்து பருப்பொருளான உடலையும், நுண்பொருளான உயிர்சத்தியையும் இணைத்து அவை நட்போடு இயங்கச் செய்கின்றன. இந்த மூன்று பொருட்களின் இயல்பான அளவும், தரமும் குறையுமாயின், அவற்றின் சுற்றியக்கத்தில் தடை ஏற்படுமாயின் உடலில் உயிர்ச்சத்துக்கு அதாவது மின்சார சக்திக்குத் தடை ஏற்பட்டு உடலில் சிறுசிறு தசைப்பகுதிகள் பாதிக்கப்படுகின்றன. அதனால் வலியும் துன்பமும் ஏற்படுகின்றன.

| | |
|---|---|
| **பிரிதிவு (மண்)** | **– பருவுடல்** |
| **அப்பு (நீர்)** | **– இரத்தம்** |
| **தேயு (நெருப்பு)** | **– உடல்சூடு** |
| **வாயு (காற்று)** | **– மூக்கு** |
| **ஆகாயம்** | **– உயிர்மூச்சு** |

நமச்சிவாய வாழ்க என்பது பஞ்சபூதத்தை வாழ்த்துவதைக் குறிப்பிடுகிறது.

ந – நிலம்
ம – நீர்
சி – நெருப்பு
வா – காற்று
ய – ஆகாயம்

எனவே ஐம்பூதங்களின் தொகுதிகளான உயிர்த்தாதுக்களான வாத, பித்த, கபம் என்ற மூன்றும் சமநிலையில் உடலில் இருப்பின் நோய் ஏற்படுவதில்லை என்பது தெளிவாகிறது. ஐந்து மூலகங்களால் ஆன மனித உடலுக்கு ஐந்து மூலகங்களால் அமைந்தவையே மருந்துகளாவது அதன் தனிச்சிறப்பு. இயற்கையில் எளிதாகக் கிடைக்கும் உணவுப் பொருட்கள், மூலிகைகள், நெய்கள் போன்றவற்றை ஆதாரமாகக் கொண்டு உவரச, மாரச, உண்மைரசம் (உப்பு மூலம், நஞ்சு, அலோகம், உலோகம்) முதலியவற்றைத் தூய்மை செய்து தகுந்த அளவில் உட்கொள்ள மருந்தாக்கும் திறன் கொண்டுள்ளமையும் இதன் தனிச்சிறப்பே. உணவே மருந்து மருந்தே உணவு என்ற கோட்பாட்டினைப் பின்பற்றினால் மக்கள் உடல் நலமும், மன நலமும் பெற்று வாழலாம்.

## சித்தர்

வாசி என்ற மூச்சினை அடக்கியாண்டு யோக சக்தியினால் உடலின் ஆறு இடங்களில் மனத்தை முறையாக நாட்டிக் குண்டலினியை எழுப்பிப் பலப்பல அனுபவமும் வெற்றியும் கண்டு அப்பால் உள்ள எல்லாம் ஆன பொருளில் நிலைத்து நிற்கும் சக்தியான சித்தி பெற்றவர்களே சித்தர்கள்.

இச்சித்தர்கள் பொதியமலை, இமயமலை, சதுரகிரி, கொல்லிமலை, கஞ்சமலை முதலிய மலைக்குகைகளில் தங்கியிருந்தனர். இவர்கள் துறவறம் பூண்டதோடு மட்டுமல்லாமல் யோகப் பயிற்சியும் செய்து வந்தனர். நம் மாணவர்களுக்கும் யோகம் பயிற்றுவித்தனர். உலோகம், பாடாணம், உப்புகள் ஆகியவற்றைப் பச்சிலை, செயநீர், திராவகம், துருசு ஆகியவற்றின் உதவி கொண்டு கட்டு, களங்கம், சுண்ணம், பற்பம், செந்தூரம் போன்ற உயர்ந்த மருந்துகளாகச் செய்து அவற்றின் வழி நோய்களைத் தீர்த்தனர். யோகத்துடன் காயகற்பமும் உண்டதால் வலுத்த உடலும், நிலைத்த உள்ளமும் பெற்றிருந்தனர். இரசவாதக் கலையில் வல்லவராயிருந்தனர்.

## காயகல்ப முறைகள் (Kalpa Medicines)

நீண்டநாள் உயிர் வாழும் கலையைக் கண்டறிந்து அதன்படி வாழ்ந்து காட்டியவர்கள் சித்தர்கள்.

**உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்**
**உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே (பா. 703)**

என்கிறார் திருமூலர்.

உடலில் உள்ள நுண்ணிய அணுப்பொருள்களை நோய்க்கு இடம் கொடாமல் இருக்கத் தக்கவாறு அவற்றுக்கு வலிமையூட்டி அவை அழியாதவாறு காக்க முடியும் என்று சித்தர்கள் நம்பி அதற்கான முயற்சியில் இறங்கினர். அதன் விளைவாகக் காயகல்பம் எனும் புதிய முறை உருப்பெற்றது. கால ஓட்டத்திற்கேற்ப முதுமையுறும் உடலை இளமையாக மாற்ற முடியும் என்பது இக்காயகல்ப முறையின் கோட்பாடாகும். இதனை இரண்டு முறைகளில் அடையலாம்.

1. பிராணாயாம யோகப் பயிற்சிகளால் உடலின் உள்ளே சிலவகைச் சுரப்பிகளைத் தூண்டி அமிர்தம் எனப்படும் (Super harmone) உயர்ந்த சுரப்பு நீர்களைச் சுரக்க வைத்து அதன் வழி காயசித்தி பெறுதல். அத்துடன் காம இச்சையால் கீழிறங்கும் விந்து சக்தியை அவ்வாறு அழிய விடாமல் அதனை வற்றச் செய்து அதனால் ஏற்படும் சக்தியைக் காயசித்தி பெறப் பயன்படுத்தல்.

2. முப்பு, இரசமணி போன்ற கல்ப மருந்துகளைக் கொண்டு காயசித்தி அடைதல்.

## இரசவாதமும் காய கல்பமும்

சித்தர்களின் காயகல்பம் இரசவாதத்துடன் தொடர்புடையது. உடம்பின் அணுக்கள் அழியக் கூடாத நிலையை எய்துவிக்கத் தக்க கல்ப மருந்தைக் கண்டு பிடிக்கச் சித்தர்கள் முனைந்தனர். அதன் விளைவாக மூன்று முறைகளை வகுத்தனர்.

1. முப்பு எனப்படும் உயர்ந்த மருந்தின் வழி கல்பம் அடைதல்.

2. பாதரசம், தங்கம், செம்பு போன்றவற்றைச் செந்தூரமாக்கி அதனைப் பத்தியக் கட்டுப்பாடுகளுடன் உண்ணல்.

3. காய கல்ப மூலிகைகள் எனக் கருதப்படும் கருநெல்லி, பொற்சீந்தில், மஞ்சள் கரிசலாங்கண்ணி போன்ற 108 வகையான மூலிகைகளை முறைப்படி உண்ணல்.

இம்மூன்றின் வழியாகக் கல்ப மருந்துகளைத் தயாரித்தபோது, அவர்கள் தயாரித்த மருந்தின் வலிமையைச் சோதிக்க இரசவாதம் எனும் கலையைப் பயன்படுத்தினர். இரசவாதம் என்பது தாழ்ந்த

உலோகங்களைச் சிலவகை வேதியியல் முறைகள் வழி உயர்ந்த உலோகமாக மாற்றுவது. செம்பைப் பொன்னாக்குதல் இதற்கு எடுத்துக்காட்டு.

திருமந்திரம், இத்தகு இரசவாதம் அவர் காலத்து இருந்தமையைக் குழூஉக்குறியாகவும் (பா. 883). உவமையாகவும் (பா. 2013) குறிப்பிடுகின்றது. இங்ஙனம் இரசவாதம் காயகல்ப மருந்துக்கு உரைகல்லாய் இருந்தது. அதாவது சித்தர்கள் அழியக் கூடிய உடம்பை அழிக்காமல் காயசித்தியாக்கவல்ல திறனைக் காயகல்ப மருந்து கொண்டுள்ளதா எனச் சோதிக்க, தாழ்ந்த உலோகத்தின் மீது காயகல்ப மருந்தைச் செலுத்தி அதனால் விளையும் வேதியல் மாற்றங்களைக் கொண்டு **காயகல்ப மருந்தியல்** திறனை வரையறை செய்தனர்.

வள்ளலார் **வகார முப்பு** எனும் கல்ப மருந்தை வைத்திருந்த தாகவும் அது இரும்பு முதலிய உலோகங்களைப் பொன்னாக்கும் சக்தியுடையது என்பதையும் அறிந்த மழைச்சுவாமி, குருக்கள் சுவாமி எனும் இருவரும் அதனைப் பெற்றுத் தாம் காய சித்தி பெற விரும்பி வள்ளலாரிடம் கேட்டனராம். வள்ளலார் முள்ளங்கிக் கிழங்கின் மீது ஒரு துளி முப்புவை வைத்தவுடன் அது அன்று மாலைக்குள் முள்ளங்கியைக் கரைத்து விட்டது. இத்தகைய கடும் நெருப்புத் தன்மையுள்ள முப்புவைத் தொடுவதற்கும் தகுதியில்லை என்று விலகினர் சுவாமிகள் இருவரும் (தமிழ் இலக்கியத்தில் சித்த மருத்துவம், ப. 283).

இதன்வழி முப்பு எனப்படும் காயகல்ப மருந்தின் வலிமையையும், அதனை ஏற்கத்தக்க உடம்பு வேண்டுமென்பதையும் அறிய முடிகிறது.

**செம்பு பொன்னாகுஞ் சிவாயநம வென்னில்** (பா. 883) எனும் திருமந்திர அடி சிவாய நம என்றால் செம்பு பொன்னாகும் என்கிறது. இது இரசவாதம் பற்றிய செய்தி. சிவாய நம எனும் மறைபொருள் குறிப்பில் உள்ளது. அவ்வாறே,

**கற்பத்தை உண்டால் காயம் அழியாது** (பா. 17) என்று சட்டை முனி கற்ப விதி கூறுவதும் சித்தர்களின் அனுபவத்தில் விளைந்த கருத்தே.

போகர் (போகர் ஏழாயிரம், போக முனிவர் சரக்கு வைப்பு), மச்சமுனி (மச்சமுனி வைப்பு, மச்சமுனி திராவகம் 8000), கொங்கணவர் (கொங்கணர் சரக்கு வைப்பு), கருவூரார் (கருவூரார்

வாத காவியம்) போன்ற சித்தர்களின் இரசவாதமும் காயகல்பமும் இணைந்த பல்வேறு முறைகளை மறைமொழியாகக் குறிப்பிட்டுள்ளனர். போகர் கல்பம், கருவூரார் வாத காவியம் போன்ற நூல்களில் காணலாகும் கற்ப மூலிகைகள் பற்றிய செய்முறை விளக்கங்கள் தெளிவானவை. எளிதில் மேற்கொள்ளத் தக்கவை.

சித்த மருத்துவப் புலமை கொண்டோரும், இக்கால மருத்துவ வேதியியலாரும் இணைந்து முப்பு பற்றிய ஆய்வினை மேற்கொண்டால் மறைபொருளாக இருக்கும் முப்பு, இரசமணிக் குளிகை, கல்பம், குருமருந்து போன்றவை வெளிவரும். இவற்றால் சித்த மருத்துவத்தின் பெருமையும், தமிழகச் சித்தர்களின் வேதியியல் புலமையும் உலகிற்குப் புலனாகும் (மேற்படி, ப. 285).

### சாகாக்கலை

சித்தர்களின் காயகல்ப முறை வாழ்நாளை நீட்டிப்பதற்கும், என்றும் இளமையுடன் இருப்பதற்கும் ஆன வழிமுறைகளைக் கூறுகின்றது. அதாவது இரத்தத்தின் இளமை குன்றாமல், தசைகள், நரம்புகள் எலும்புகள் முற்றி, முதிர்ச்சியடைந்து செயலிழந்து போகாமல் தடுத்து நிறுத்த முடியும் என்பதைச் சித்தர்களின் காயகல்ப முறை அறுதியிட்டு மெய்ப்பிக்கின்றது. இதன்வழி இந்த உடலை அழிவற்ற நிலைமைக்கு, மரணமில்லாத நிலைக்குத் தயார்படுத்த முடியும் என்பதை உணர்த்துகின்றது.

கற்ப மூலிகைகளை முறைப்படி உண்பதால் மேற்கூறியதைச் செயல்படுத்த முடியும் என்று சித்தர்கள் பலரும் கூறியுள்ளனர். அவர்களுள் சட்டைமுனி, கொங்கணவர், புலத்தியர், திருவள்ளுவர், போகர் ஆகிய ஐந்து சித்தர்கள் கூறியுள்ள கற்ப சாதனை முறைகளின் தொகுப்பு கீழே தரப்படுகிறது (திருவள்ளுவர் கற்பம் 300, பதிப்புரை, பக். 5-8).

### வழலை நீக்குதல்

முதலில் கற்பம் உண்ணத் தொடங்கும் முன் சிரசிலும் மார்பிலும் உள்ள கபம், வயிற்றில் உள்ள பித்தம், அடிவயிற்றில் உள்ள மலம் ஆகியவற்றை அகற்றி உடலைத் தூய்மைப் படுத்திக் கொள்ள வேண்டும்.

### கற்பமூலிகைகள்

பிறகு கடுக்காய், மிளகு என்று படிப்படியாகக் கற்ப மூலிகைகளைச் சாப்பிட வேண்டும்.

"ஆழியான் அமரர்களுக்கு அமுதம் ஈந்தே
உள்ளவே கையதனை உதறும் போதில்
உற்றதுளி மண்ணில்விழ மரமும் ஆச்சே"

என்ற பாடலில் மகாவிஷ்ணு தேவர்களுக்கு அமிர்தத்தைப் பகிர்ந்தளித்த பின் கையை உதறியபோது விழுந்த துளிகளே விதைகளாகக் கடுக்காய் மரங்கள் தோன்றின என்று கூறுகிறார் போகர்.

## கடுக்காய்

கடுக்காயைக் கற்பமாக உட்கொள்ளும் முறை பற்றிப் பின்வரும் பாடல் அழகுற விளக்குகிறது.

ஆமென்ற வயதங்கே இருப தாகில்
ஆச்சரியங் கடுக்காயை இருபா னாள்கொள்
மூமென்ற வயதங்கே முப்ப தாகில்
முயற்சியாய் இருபதொரு ஐந்து நாள்கொள்
நாமென்ற வயதங்கே நாற்ப தாகில்
நலமாக முப்பதுநாள் கடுக்கா யைக்கொள்
தேமென்ற வயதங்கே ஐம்ப தானால்
திறமாக முப்பதொடு ஐந்து நாளே

மேலும் எந்த மாதத்தில் எந்த விதமாக எந்தத் துணைப்பொருளோடு உட்கொள்ள வேண்டும் என்பதற்கெல்லாம் வழிகள் சொல்லப்பட்டுள்ளன.

## மிளகு

அடுத்தபடியாக மிளகை ஐந்து ஐந்தாக அதாவது முதல் நாள் ஐந்து, அடுத்த நாள் பத்து என்று ஏற்றிச் சாப்பிட வேண்டும். பிறகு குறிப்பிட்ட அளவை எட்டிய பிறகு நூறு, தொண்ணூற்றைந்து என்பது போல் குறைத்துச் சாப்பிட்டு வர வேண்டும். மிளகு சாப்பிடும் போது உடலில் வெப்பம் ஏற்பட்டால் அறுகம்புல் வேர்க்கசாயம் சாப்பிட வேண்டும்.

கற்பம் சாப்பிடத் தொடங்கும் முன் ஒரு லேகியம் சாப்பிட்டு உடலை வலுப்படுத்திக் கொள்ள வேண்டும் என்கிறார் கொங்கணவர். ஒன்றிரண்டு கற்பங்கள் சாப்பிட்டபின் லேகியம் சாப்பிட்டுக் கொள்ளாம். அதனால் தவறில்லை என்கிறார் போகர்.

இப்படி ஒரு மூலிகையைக் கற்பமாகச் சாப்பிடுவதால் நமது உடம்பிலுள்ள. இரத்த அணுக்கள் முதலியவற்றில் அந்த மூலிகையின்

சிறப்புத் தன்மை சேர்கின்றது. இப்படி அம்மூலிகையின் தன்மை தொடர்ந்து இரத்தத்தில் சேர்ந்து வருவதால் உடலில் தன்மை மாற்றம் பெறுகிறது. பின் இரத்த அணுக்கள் தசை அணுக்களில் மாறுதல்களை உண்டாக்குகின்றன.

## கற்ப மூலிகைகளின் பெயர்கள்

சித்தர்கள் கற்ப மூலிகைகள் எவை எவை என்று ஒரு நீண்ட பட்டியலே கொடுத்திருக்கின்றனர். அவற்றுள் சிலவற்றைக் கூறும் பாடல்கள்:

கேளென்ற கருநெல்லி கருத்த நொச்சி
கெடியான கருவீழி கருத்த வாழை
கானென்ற கரியகரி சாலை யோடு
கருப்பான நீலியோடு கரிய வேலி
கோனென்ற கருமத்தை தீபச் சோதி
கொடுதிரணச் சோதி சயாய விருட்சம்
ஏனென்ற எருமைகனைச் சான்ரோம விருட்சம்
ஏற்றமாம் சுணங்க விருட்சம் செந்திரா

செந்திராய் செங்கள்ளி செம்மல்லி யோடு
சிவந்த கற்றாழை செஞ்சித்திர மூலம்
நந்திராய் சிவப்பாபா மார்க்கத் தோடு
நலமான கற்பிரமி கற்சேம் பாகும்
பந்திராய் கல்லுத்தா மரையி னோடு
பாய்ந்தகுழல் ஆதொண்டை மகாபொற் சீந்தில்
வந்திராய் வெண்புரசு வெள்ளைத் துத்தி
மிகுகொன்னைத் தூதுவளை மிடுக்கு மாமே

மிடுக்கான குண்டலமாம் பாலை யோடு
வெள்ளைநீர் முள்ளிவெண் விண்டுக் காந்தி
கடுக்கான வெண்கண்டரிங் காரி – யோடு
கசப்பான பசளையொடு மதுர வேம்பு
கிடுக்கான கிளிமூக்குத் துவரை அழுகண்ணி
கெடியான பொன்னூமத்தை மதுரக் கோவை
படுக்கான பொன்வன்னச் சாலி யோடு
பாங்கான கருந்தும்பை மதனத் தண்டே.

தண்டோடு மூலிகையாங் குருந்து மாகும்
தணலான சிவத்ததில்லை கருத்த வேம்பு
இரண்டோடே இவ்வகைகள் நாற்பத் தைந்தும்
ஏற்றமாம் மலைகளிலே மிகுதி உண்டு

பண்டோடு பாடாணம் அறுபத்தி நாலும்
பட்டுடனே கட்டுண்டு படுதீப் பற்றும்
துண்டோடு சூதமது கட்டும் ஆகும்
சுயமான உபரசங்கள் சத்தும் ஆமே!

## கற்ப மூலிகைகளின் சிறப்பு

இந்த நாற்பத்தைந்து கற்ப மூலிகைகளும் பாதரசத்தைக் கட்டும். பாடாணங்கள் அறுபத்து நான்கையும் கட்டும். உபரசங்கள் நூற்றியிருபதையும் சத்தாக மாற்றும் என்று அவற்றின் குணத்தையும் பேசுகிறார் போகமுனிவர்.

கற்பம் சாப்பிடும் போது உடலில் ஏற்படக் கூடிய மாறுதல்களையும் அவற்றுக்குத் தக்க மருந்து சாப்பிட்டுக் கட்டுப்படுத்தக் கூடிய விதங்களையும் சித்தர்கள் அழகாகக் கூறியிருக்கின்றனர்.

திருவள்ளுவநாயனார் தாயாரின் கற்பத்தில் கருவாக உருவானது முதல் ஒவ்வொரு மாதமும் தாயானவள் எத்தகைய துன்பங்களை அனுபவித்தாளோ அதைப் போலவே கற்பம் உண்ணும் காலத்தில் ஒவ்வொரு ஆண்டும் கடினமான தொல்லைகள் தமக்கு ஏற்பட்டதாகக் கூறுகிறார். அவற்றைத் தாம் மருந்துண்டு கடந்த விதத்தையும் கூறுகிறார்.

மேற்கூறியவை மிக எளிமையான செய்திகள் அல்ல. இவை அறிவியல் துறையில் இன்று வரை யாரும் எட்ட முடியாத இடங்களைப் பண்டைத் தமிழன் தொட்டு விட்டான் என்பதை உலகிற்கு உணர்த்த வேண்டிய செய்திகள். இச்செய்திகள் விழிப்புணர்வுடன் ஆழமான ஆய்வுக்குட்படுத்தப்பட வேண்டும். கற்பங்களின் மருத்துவக் குணங்களும் அவை உடல் அணுக்களில் உண்டு பண்ணும் மாற்றங்களும் அறிவியல் பரிசோதனைக் கூடங்களில் ஆராயப்பட வேண்டும்.

## இரசவாதம்

பாதரசம், வெள்ளி, தாம்பரம், தகரம், இரும்பு முதலிய உலோகங்களைத் தங்கமாக மாற்றும் கலையே இரசவாதக்கலை. இக்கலை பற்றித் தாயுமானவர், திருமூலர், கோரக்கர், அகத்தியர் முதலான மகாஞான சித்தர்கள் அதிகமாகப் பாடியுள்ளனர்.

## இரசவாதத்தின் நோக்கு

உலோகம் என்பது ஒரு கடினமான பொருள். தாழ்ந்த உலோகத்தை உயர்ந்த உலோகமாக மாற்றும் சக்தி முப்புவிற்கு

இருக்கிறது. மட்டமான உலோகங்களைத் தங்கமாக மாற்றக் கூடிய இம்முப்பு நம் உடலையும் தங்கமாக்கும் எனச் சித்தர்கள் நம்பினர். இந்த முப்புவிற்கு உடம்பிலுள்ள பலவகையான உலோகங்களிலுள்ள அழுக்கை அகற்றும் வல்லமை உண்டு. முப்புவின் செயற்பாட்டால் கிடைக்கும் தங்கத்தால் நரைதிரை மூப்பு நீங்கிக் கற்ப கோடி காலம் வாழ வைக்க முடியும் என்பதே இரசவாதத்தின் முக்கிய நோக்காகும். அதாவது கற்பங்களை உண்டாக்குவதே இதன் நோக்கு.

வாதம், வைத்தியம், யோகம், ஞானம் என்ற நான்கையும் ஒருங்கு வைத்துக் கூறிய சித்தர்களுக்கு வாதம் பற்றிக் கூறும் போது உலோகத்தைத் தங்கமாக்குவது குறிக்கோளாக இருந்திருக்க முடியாது. உடலைக் காயகற்பமாகக் காக்கக் கூடிய இத்தங்கத்தால் உடலைக் கற்ப சாதனை செய்து கொண்டு யோக ஞானத்தில் ஈடுபடும் நோக்கத்துடன் இரசவாதம் பற்றி எழுதியுள்ளனர்.

முப்பு முடித்தல் என்பது இரசவாதம் முடித்தலே என்று கூறுவாரும் உண்டு. அதாவது உலோகத்தைத் தங்கமாக்குதலே முப்பு முடித்தல் என்பர். முப்பு என்பது ஓர் உயர்ந்த பொருள். இப்பொருள் இரசவாதத்திற்குப் பயன்படுகிறது. அதாவது இந்த முப்புதான் உலோகங்களைத் தங்கமாக்க உதவுகிறது. முப்புவைப் பயன்படுத்தாமல் இரசவாதக்கலை செய்து பார்க்கப்பட்டிருக்கலாம். ஆயின் இரசவாதம் முடித்தல் என்பது முப்பு முடித்தல் என்று ஆகாது.

### செவிவழிச் செய்திகள்

சித்தர்கள் முற்றும் உணர்ந்தவர்கள். கால ஞானம் அறிந்தவர்கள். இச்சித்தர்கள் எதை வேண்டுமானாலும் செய்யும் ஆற்றல் பெற்றவர்கள் என்பதைப் பின்வரும் செவிவழிச் செய்திகள் மெய்ப்பிக்கின்றன.

ஒரு ஞானி தன் அமுதநீராகிய எச்சில் மூலம் சாதாரண செப்புக்காசைத் தங்கக் காசாக மாற்றிக் காட்டினார்.

மற்றொரு ஞானி வீரம், பூரம் போன்ற பாடாண மருந்துகளை உணவு போல உண்டு அதனைக் கழிவுப் பொருளாய் அதாவது சிறுநீராய் வெளியேற்றி, அதனைச் செப்புத் தகட்டில் விட்டதாகவும் அது ஏழு மாற்றுத் தங்கமாக ஆனதாகவும் கூறுவர். இங்கு வீரம் என்பது உடனடியாக உயிரைப் போக்கக் கூடிய பாடாண வகை மருந்துகளில் தலையாயது என்பது குறிப்பிடத்தக்கது.

# இலக்கியங்களில் இரசவாதக்கலை

## திருமந்திரம்

இரசவாதம் பற்றி மிகப் பழமையான குறிப்பைத் திருமூலரின் திருமந்திரத்தில் காணலாம். வேதகம் என்று இதனைக் குறிக்கின்றார்.

*செம்பு பொன்னாகுஞ் சிவாயநம வெண்ணிற் (பா. 883)*

*கறுத்த இரும்பே கனகம தானாற்*
*மறித்திடும் பாகா வகையது போல (பா. 2013)*

எனவரும் பாடற் கருத்துகள், இரும்பு, செம்பு ஆகியவற்றைப் பொன்னாக்கும் இரசவாதக்கலை பற்றிக் குறிப்பன. இவ்வாறு பொன்னாக்கும் முறைக்கு உதவிய 'பரிசனவேதி' எனும் மருந்து பற்றிப் பின்வருமாறு குறிக்கின்றார்.

*பரிசன வேதி பரிசித்த தெல்லாம்*
*வரிசை தரும்பொன் வகையாகு மாபோற் (பா. 2016)*

இவ்வாறு இரசவாதக்கலை 1500 ஆண்டுகட்கு முன்னரே மெய்ம்மைக் கலையாய் நிலவியது என்பதைத் திருமந்திரப் பாடலின் வழி அறியலாம் (தமிழ் இலக்கியத்தில் சித்த மருத்துவம், ப. 229). சித்தர்கள், உடம்பாகிய செம்பை முப்புவைக் கொண்டு தங்கமாக மாற்றும் முயற்சியில் ஈடுபட்டவர்கள். தங்கமானது அழியாதது; நிறம் மாறாதது. எனவே முப்புவினால் உடலும் தங்கத்தைப் போல் அழியாது நிலை பெறுகிறது.

## திருப்புகழ்

முருகனின் அருள்பெற்ற அருணகிரிநாதர் பல்வேறு சித்துகள் கைவரப் பெற்றவர். இதனை உறுதிப்படுத்துவது போல் அவர் எழுதிய நூல்களில் சித்து வகுப்பு என்றொரு நூல் இரசவாதக் கலை பற்றி விரிவாகவும் மறைபொருளாகவும் குறிக்கின்றது. ஐம்பதுக்கும் மேற்பட்ட மூலிகைகளைக் கொண்டு அமையும் இந்த இரசவாத முறை இக்கால அறிவியலார் ஆய்வுக்குரியது (மேற்படி. ப. 249).

## முப்பு

குரு முப்பு என்பது ஓர் அரிய மருந்து. இது தனித்தன்மை வாய்ந்த ஒப்பற்ற மருந்து. இதனை வேறு எந்த மருந்துடன் சேர்த்தாலும், அம்மருந்தின் வீரியம் பல மடங்காக அதிகமாகும். இது சாகாத் தன்மையைக் கொடுக்கும். உடலைக் கல்தூண் போன்று வலிமையுடையதாகச் செய்யும். மேலும் மேல் தோல் வழியாகவே

உடலில் கலந்து நோயைக் குணப்படுத்தும். இது கற்பமருந்து என்றும் கூறப்படும். நரை, திரை, பிணி மூப்பு ஆகியவற்றை மாற்றும். ஆயுளை நீடிக்கும். நோயின்றி நல்லறிவு பெற்று வாழ உதவும்.

பல மருந்துப் பொருள்கள் செய்யப் பயன்படும் மூலப்பொருளாக முப்பு விளங்குகிறது. சூரணம், பற்பம், செந்தூரம், லேகியம், தயிலம் முதலான மருந்துகளுக்கு இக்குரு மருந்து சேர்க்கப்படும் போது நோய்கள் குறிப்பிட்ட சில நாட்களுக்குள் குணமாகும். வீரியம் மிக்க இவற்றை மிகக் குறைந்த அளவு தக்க அனுபானத்துடன் கொடுத்தால் உடனே பலன் அளிக்கும். இதன் பலனை அளவிட்டுக் கூற முடியாது.

பாடாணங்களை எடை போடாது நீற்றுவதற்கு இக்குரு மருந்தை ஒரு குன்றியளவு பூசிப் புடமிடின் பற்பமாகவும், இதன் மெழுகைக் கவசம் செய்து நெருப்பில் வாட்ட எல்லா உயிர்ச்சரக்குகளும் மெழுகாகுமென்றும், மருந்துகளின் குணத்தை ஆயிரமாயிரம் பங்கு வலிமைப்படுத்துகிறதென்றும் சித்தர்கள் கூறியுள்ளனர். ஒரு கடுகளவு மருந்தைக் கொடுத்துத் தொழுநோய், பெருநோய் போன்றவற்றை ஒரு நொடியில் குணப்படுத்தலா மென்றும் சித்தர்கள் கூறியுள்ளனர்.

உப்பு உணவுப் பொருட்களுக்குச் சுவையைக் கொடுக்கிறது. அதோடு மட்டுமல்லாமல் உணவுப் பொருட்களை நீண்டநாள் கெடாமல் வைக்கவும் பயன்படுகிறது (ஊறுகாய், கருவாடு). இதுபோல் பூமியில் உப்பு உவர்மண் கலப்பில் காரசாரத்தின் உரங்களால் எல்லாப் பயிரினங்களையும், மூலிகைகளையும் வளர்ச்சியடையச் செய்கிறது.

இங்ஙனம் உயிரினங்கள் வாழ, உணவுப் பொருள் கெடாமல் இருக்க உப்பு பயன்படுவது போல் இவ்வுடம்பும் நீண்டநாள் வாழ உடம்பின் கண் ஏற்படும் பிணிகள் நீங்க உப்புடன் கூடிய மருந்துப் பொருட்களைச் சித்தர் கண்டறிந்தனர்.

## முப்பு – பெயர் விளக்கம்

முப்பு எனுஞ் சொல் மூன்று எழுத்துடையது. 'மு' என்னும் எழுத்து உயிர் மெய்யெழுத்து. இதில் 'உ' என்ற உயிரெழுத்தும், 'ம்' என்ற மெய்யெழுத்தும் இணைந்து உயிர்மெய்யெழுத்தாயிற்று. அனைத்து உயிரினங்களும் உடல் உயிர் கலப்பினால் தான் வாழ்ந்து வருகின்றன. தமிழ் இலக்கணப்படி உடலும் உயிருமாகி, உயிர் மெய்யெழுத்தாக தொடக்க முதன்மையாக எடுத்துக் கொள்ளப் பட்டது. உயிரெழுத்தை மட்டும் எடுப்பின் உப்பு எனும் சொல்லாகி

இரசாயன விஞ்ஞானப் பொருளாய் அமைந்து விட்டது. மெய் கலந்த 'மு' பதத்திற்கு உப்பு உயிர் சிவபதமாகும். அதனால் முப்புவிற்கு உயிர், உப்பே என்பது விளங்கும். உயிர்மெய் 'மு' என்பது மூன்று எண்ணைக் குறிப்பதாகும். இதனால் மூன்று வித உப்புகள் என்பது ஞானவெட்டியான் பாடல்வழி புலப்படுகிறது.

**முப்புவு மூன்றல்லோ காணும் - மூல -**
**வாசிசேரவு நாலு முடிவல்லோ தோணும்**
**அப்பும் உப்பும் வெடியுப்பும் - அக -**
**வானது வாயறிந்தவர் செப்பார்**

*(எஸ். கலியாணராமன், வள்ளுவர் சரித்திர மருத்துவ ஆராய்ச்சிக் கதிர், ப. 369).*

முப்பு என்பது மூன்று உப்புகளின் கூட்டைக் குறிக்கும் என்று நாராயணசாமியும் கூறுகிறார் (Introduction to the System of Siddha Medicine, p. 25).

இங்ஙனம் மூன்று வகையான உப்பு என்று சிலர் கூற, இன்னும் சிலர் மூன்று விதமான பூக்கள் என்று குறிப்பிடுகின்றனர். இவை பூப்போன்ற தன்மையுடையவை. எனவே முப்பு என்பது மூன்று விதப் பூக்கள் என்பதை,

**எண்ணவே வானத் திடியினில் ஒன்று**
**பொன்னெனப் பூத்த பூமியில் ஒன்று**
**கண்ணிய மான கடலினில் ஒன்று**
**முன்னவர் சொன்ன முப்பூ இம்மூன்றே**

என்ற பாடல் காட்டுகிறது. எனவே பூப்பதால் முப்பூ எனவும், உப்புகளாக இருப்பதால் முப்பு என்வும் பெயர் பெறுகின்றது.

முப்பு திரண்டு சேர்ந்த மருந்து முப்பத்திரண்டு என்பர். அதனால்தான் அகமருந்து 32 வகை, புற மருந்து 32 வகை என இரண்டு வகைகளும் இவ்வெண்ணிக்களைப் பெற்றன. இந்த எண்ணிக்கையானது முப்பு சேர்ந்த மருந்துகள் என்ற பொருளில் வந்தது என்று மருத்துவர் போ. பார்த்திபன் கூறுகிறார்.

வாதஉப்பு, பித்தஉப்பு, கபஉப்பு ஆகிய மூன்றும் சேர்ந்தது முப்பு என்பர்.

பிரம உப்பு, விஷ்ணு உப்பு, சிவஉப்பு ஆகிய மூன்றும் சேர்ந்தது முப்பு என்பர்.

நீர், நெருப்பு, காற்று ஆகிய மூன்றும் சேர்ந்தது முப்பு என்பர்.

முப்பு என்பது கல்லுப்பு, அண்டக்கல், பூநீறு ஆகிய மூன்றும் சேர்ந்தது. இவற்றை முறையாகச் சுத்தி செய்தால் அதுவே குரு முடித்தலாகும்.

இரவியுப்பு, மதியுப்பு, கல்லுப்பு என்ற மூன்றும் சேர்ந்தது தான் முப்பு.

அண்டத்திலிருந்து கிடைக்கும் அண்டக்கல்லைத் தூய்மையாக்கிப் பெறும்போது முப்பு கிடைக்கிறது என்றும், சுத்தி செய்யப்பட்ட பூநீறே முப்பு என்றும் கூறுவர்.

கற்ப மருந்து ஓம் எனும் பிரணவமாகிய ஒரு பொருளைக் கொண்டு செய்யப்பட்டது. இப்பிரணவத்திலிருந்து அகார, உகார, மகாரம் பிரிக்கப்படுகிறது. அவற்றை மீண்டும் ஒன்று கூட்டும் போது வகாரம் விளைகிறது. இதுவே அண்டம், நாதவிந்து, சிவசக்தி எனப்படுகிறது.

பிரணவம் என்பது, அண்டமே ஆகும். இது நெருப்புக்கும் நீருக்கும் அசையாதது. பஞ்ச பூதங்களால் பாதிக்கப்படாதது. இந்த அண்டம் என்ற பிரணவத்திலுள்ள நாதவிந்துப் பொருள்களைப் பிரித்து ஒன்று சேர்த்து அமைத்தால் முப்பு சுண்ணம் முடிவாகும்.

அகாரத்தை உகாரம் உண்ணும். உகாரத்தை மகாரம் உண்ணும். விந்துவை நாதம் உண்ணும். அதாவது நாதவிந்து பொருட்கள் ஒன்றோடொன்று சேரும் காலத்தில் அனைத்தும் உண்டாகும். அவற்றைச் சேர்த்த அன்றே அவன் சீவனாகி விடுவான். மேலும் சித்தர் கூட்டத்திலும் ஒருவனாவான்.

அகாரம் பிரணவத்தில் முதலாவதாகக் கூறப்படுகிறது. இது பாலில் ஆண் பாலாகவும், கோள்களில் சூரியனாகவும், கலைகளில் 12 கலையாகவும், தொழிலில் சிவமாகவும், பூதங்களில் அக்கினியாகவும், கரங்களில் வலக்கரமாகவும், யோக நாடிகளில் அண்ணாக்காகவும், மருந்தில் விந்தாகவும் கூறப்படுகிறது.

உகாரம் பிரணவத்தில் இரண்டாவதாகக் கூறப்படுகிறது. இது பாலில் பெண்பாலாகவும், கோள்களில் சந்திரனாகவும், கலையில் 16 கலையாகவும், பூதங்களில் நீராகவும், மருந்தில் சாரமாகவும், நாதமாகவும், கரங்களில் இடக்கரமாகவும், யோக நாடிகளில் உண்ணாக்காகவும் கூறப்படுகிறது.

அகார உகாரங்கள் முறையே சிவசக்தியாகவும், விந்து நாதமாகவும், சூரிய சந்திரனாகவும், ஆண் பெண்ணாகவும் இருக்கிறது. மருந்து கூறுமிடத்து இவை அமுரி புரியாகவும் வழங்கப்படுகிறது. அகார உகாரத்தை உணர்ந்து பக்குவப்படுத்தினால் அனைத்து மருந்துகளும் சித்தியாகும்.

அகாரம் சூரியன்; உகாரம் சந்திரன்; இரண்டும் சேர்ந்தது மகாரம். மூன்றும் சேர்ந்தது ஓங்காரம்.

சந்திர சூரியர் சேர்ந்து கல்லுப்பு உண்டாகியிருக்கிறது. சூரியன் அகாரம், உகாரம் கடல் அல்லது சந்திரன், அகாரமென்ற அக்கினியையும், உகாரமென்ற சலத்தையும் கூட்டி வாலையிட்டு வடிகட்டி எடுக்கப்படும் திரவமே விடம் நீக்கப்பட்ட அமுதமாம். இதுவே மகாரம், வாலைத்திராவகம், வாலைபூசை என்று சித்தர்கள் கூறுவது. இக்கல்பம் உடல் முழுவதும் பரவி உடலைச் சுண்ணமாக்கும் வல்லமையுடையது. அகார உகார மகாரமான இம்மூன்றும் ஒன்றுடன் ஒன்று நெருங்கிப் பிணைந்து சேர்ந்திருப்பதற்கே **ஏகவஸ்து** என்று பெயர்.

## முப்பு பற்றிய நம்நாட்டார் கருத்து

முப்பு பற்றிக் கருணாகரசாமிகள் எழுதிய **அகர ஆய்வு** எனும் நூலின் கருத்து பின்வருமாறு அமைகிறது.

முப்பு என்பது நெருப்பு, தண்ணீர், காற்று ஆகிய மூன்றையும் கல்லுப்புடன் ஒன்று சேர்ப்பது. கல்லுப்பு என்பது கடலிலுள்ள மலைகளில் கண்களுக்குத் தெரியாமல் மறைக்கப்பட்டிருக்கிற ஒரு பொருள்.

கெந்தி, இரசம், உப்பு என்ற மூன்றும் அண்டக்கல்லில் ஒன்றாக்கப்பட்டிருக்கிது இம்மூன்றும் நெருப்புக்கு ஓடக்கூடியதல்ல. இம்மூன்றையும் நெருப்பு, காற்று, தண்ணீர் அல்லது உடல், உயிர், ஆத்மாவாக மேல்நாட்டு ஞானிகள் கூறுகின்றனர்.

ஆதலால் இரசவாதத்திற்குத் தண்ணீர், திராவகம், மண் என்ற மூன்றும் தேவைப்படுகிறது. இதையேதான் நம் சித்தர்கள் நாதம் (கெந்தி), விந்து (இரசம்), தண்ணீர் (உப்பு) என்று கூறுகின்றனர். மேல்நாட்டு ஞானிகளின் கூற்றும், நம்நாட்டுச் சித்தர்கள் கருத்தும் ஒன்றேதான். நம் சித்தர்கள் அகாரம் உகாரம் என்று கூறுகின்றனர். அகாரம் என்பது கட்டிய பாகம். அதில் நெருப்பும், காற்றும் உறைந்திருக்கிறது. உகாரம் தண்ணீராக இருக்கிறது. அதில் காற்று காணப்படுகிறது. நெருப்பு, தண்ணீர், காற்று என்ற மூன்று பூதங்களை ஒன்றாக இணைப்பதே இரசவாதமாகும்.

கெந்தி, உப்பு, இரசம் அல்லது நெருப்பு, தண்ணீர், காற்று அல்லது நாதம், விந்து, அந்த நீர் அல்லது உடல், உயிர், ஆவி என்ற மூன்று பொருள்களும் Vase of philosophers என்ற ஒரு பாத்திரத்தில் உள்ளது. இந்தப் பாத்திரத்தை முதலில் கண்டறிய வேண்டும். பிறகு அதனுள்ளே அண்டக்கல்லைக் கண்டறிய வேண்டும். மேலே சொல்லிய மூன்று திராவகங்களைத் தனித்தனியே பிரித்தெடுத்து, பிறகு ஒன்று சேர்ப்பதே மகாரமென்ற திராவகமாகும். இந்தத் திராவகமே மரணமிலாப் பெருவாழ்வு அளிக்கவல்லது.

மண்ணையும் நீரையும் மேனாட்டு அறிஞர் இரசம், கெந்தி என்றனர். ஒரே ஒரு பொருளிலிருந்து உண்டாகக் கூடியது தான் நாதவிந்துப் பொருட்கள். இந்த நாத விந்துக்களைத் தனித்தனியே பிரித்துக் கூட்டுவதே முப்பு மருந்து முடிக்கும் முறையாகும். இம்முப்பு நீர், நெருப்பு, காற்று ஆகிய மூன்றினால் ஆனது. இதை நைட்ரிக் விட்டுக் கொதிக்க வைத்தால் கரையாது. ஒளி குன்றாது. இது வைரம் போல் ஒளிரும் தன்மையுடையது. பார்வைக்குக் கல்லுப்புப் போல் இருக்கும். இது நீரில் கரையாது. இதனால் அனைத்துச் சரக்குகளும் சுண்ணம் ஆகும்; களங்காகும்; செந்தூரமாகும். உபரசங்கள் உருகி விடும்.

## முப்பு பற்றிய மேனாட்டார் கருத்து

வாத, வைத்திய, யோக, ஞானத்தில் சிறந்து விளங்கிய மேல்நாட்டுச் சித்தர் பலர் முப்பு பற்றிப் பல நூல்கள் எழுதியுள்ளனர். தங்கள் மொழியில் இம்முப்புவிற்கு ஞானிக்கல் (Philosopher's Stones), கற்ப முப்பு (Elixir of Life) போன்ற பெயர்களைச் சூட்டியுள்ளனர்.

ஹெர்மஸ், பிளேடோ, மோசஸ் அவரது தங்கை மிரியம், தியோபிராஸ்டஸ், ஆஸ்டேன்ஸ், பேசில், வேலைன்டைன், கிளியபேட்ரா முதலியோர் கற்பமருந்து பற்றிய நூல்களை எழுதியுள்ளனர்.

பார்செல் என்பவர் ஜெர்மன் வேதாந்தியும், ஞானசித்தருமாவார். இவர் 400 ஆண்டுகளுக்கு முன் இருந்தவர். 1941இல் இவருக்கு 400ஆவது ஆண்டு விழா நடந்தது. இவர் காலத்தில் கோரப் பிணிகளை இந்த முப்பு என்னும் மருந்தால் வியக்கத்தக்க முறையில் குணப்படுத்தியுள்ளார். இவர் ஒரு சிடிகை மருந்தினால் நூறு பவுண்ட் எடையுள்ள பாதரசத்தைத் தங்கமாக்கியவர் (முப்பு குரு, ப. 4).

கி.மு. 144இல் சைனாவில் சிலரால் இரசவாதம் செய்யப் பட்டதாகத் தெரிகிறது. அந்நாட்டு மன்னன் சியாங் என்பவர்

கி.மு. 175இல் இரசவாதம் செய்வது சட்டவிரோதமென்று அறிவித்தார். கி.மு. 175இல் 'வெண்' என்னும் அரசர் இரசவாதம் செய்வது பெருங்குற்றமெனச் சட்டம் இயற்றினார்.

கிரிஸ், இந்தியா, எகிப்து நாடுகளிலும் அக்காலத்தில் இரசவாதம் செய்யப்பட்டதற்கான குறிப்புகள் கிடைக்கின்றன. இவர்கள் இதில் உயரிய நோக்குடன் ஈடுபட்டுப் பசி, பிணி, மூப்பு, இறப்பு போன்றவற்றைத் தவிர்க்கவே முயன்று வந்திருப்பதாகத் தெரிகிறது (மேற்படி, ப. 6). இரசவாதம் வெற்றி பெற முப்புவே முக்கியப் பொருள். எனவே முப்புவைக் கொண்டுதான் இவர்கள் இரசவாதம் செய்ய முற்பட்டிருத்தல் வேண்டும்.

டேடின் என்னும் மேனாட்டு இரசவாதி அறிஞர் "ஒரு மாதகால நோயானால் குருமருந்து ஒரு நாளில் குணப்படுத்தும். தீராத நோயாயிருப்பின் ஒரு மாதத்தில் குணப்படுத்தும். எனவே அனைவரும் இம்மருந்தைச் செய்ய முயல வேண்டும்" என்கிறார். இக்கூற்று முப்புவின் மீது அவருக்குள்ள நம்பிக்கையை வெளிப்படுத்துகின்றது. எனவே இவர்கள் முப்பு செய்யும் முயற்சியில் ஈடுபட்டு வெற்றியும் கண்டுள்ளனர் என்பது தெரிகிறது.

மெய்ஞானத்தைத் தரும் இந்தப் பொருளைத் தேடிப் பல நாட்டு நல்லறிஞர்கள் இந்தியாவிற்கு வந்து, ஆய்வு செய்து, இங்கு இருந்த மூலநூல்களை எடுத்துச் சென்று ஆய்வு செய்து பல ஆயிரம் விலையுள்ள சிறந்த நூல்களை வெளியிட்டு இருக்கிறார்கள். அதில் நமது வழிபாட்டு முறையும், யோகமுறையும் இருப்பதைக் காணலாம் (வைத்திய முப்பு, ஓலை. 6: ப. 3. மே. 1993).

## முப்புவின் ஆற்றல்

முறையாக முடிக்கப்பட்ட கற்பமருந்தை ஓர் ஊசியில் தொட்டு வாழைப்பழத்தில் குத்தினால் பழம் காயாகிவிடும். இந்தப் பழத்திற்கு மீண்டும் காயினுடைய தன்மை வந்து விடும். அதுபோல் வயதானவர் கூட மீண்டும் இளமையை அடையலாம். தொடர்ந்து சாப்பிட்டால் மரணமில்லாமல் சாகாமல் இருக்கலாம். இச்செய்தி குறித்துப் போகர் கற்பம் 300 என்ற நூல் பேசுகிறது.

## இறந்த உடல் உயிர் பெறல்

இறந்து போன உடலின் மூக்கில் இம்முப்பு மருந்தைப் பாலில் கலக்கி விட்டால் உடலானது மீண்டும் உயிர் பெறும். பெருவிரல் முதலில் ஆடும். பின் உடல் வேர்க்கும். அதன்பின் கண் இமை இலேசாகத் திறக்கும். பின் உடல் எழுந்து உட்காரும். ஒரு நாழிகை

வரை அந்த உயிரிடம் என்ன வேண்டுமானாலும் பேசலாம். ஒரு நாழிகையானதும் மீண்டும் உயிர் பிரிய உடல் கீழே விழுந்துவிடும். இச்செய்தி **அகத்தியர் இலக்க சௌமியம்** என்ற நூலில் இடம் பெற்றுள்ளது.

**கோரக்கர் நமனாசத் திறவுகோல்** என்ற நூலில் மேற்சொன்ன செய்திக்குக் கூடுதலாகப் பின்வரும் குறிப்பும் கிடைக்கிறது. அதாவது ஒரு நாழிகை உயிர் பெற்று இறந்தவனுக்கு முப்பு மருந்து இரண்டாம் முறை கொடுக்கப்படும் போது அவ்வுடல் முன்போலவே உயிர் பெற்று ஒரு நாழிகை முடிந்ததும் மீண்டும் உயிர் பிரிந்து விடுகிறது. மூன்றாம் முறை இம்மருந்தைக் கொடுத்தால் அவன் இறப்பிலிருந்து மீண்டு உயிர் பெற்று விடுவான் என்று இந்நூல் கூறுகிறது.

இதைப் பார்க்கும் போது நாம் நமக்குத் தேவையான உணவு, உடை, பொருள் போன்றவற்றைப் படைத்துக் கொள்கிறோம். அதுபோல் உயிரின் படைப்பையும் நம்மால் நீட்டிக்க முடியும் என்று தெரிய வருகிறது. உடலானது ஒற்றெழுத்து. உயிரானது அளபெடை எழுத்து. எனவே ஒற்றெழுத்து அளவு எடுக்காது. ஆயின் அளபெடை எழுத்து அதிக மாத்திரையைப் பெற்று அளபெடுத்து நிற்கும். அதுபோல்தான் இங்கு உயிரானது நீட்டிக்கப்படுகிறது.

ஒரு குழந்தை பிறக்கும் போதே கையைக் கும்பிடும்படி வைத்துக் கொண்டு பிறக்கிறது. எனவே இப்படிப் பிறக்கும் அனைத்து உயிர்களுக்கும் சாகாமெய் நிச்சியக்கப்பட்ட ஒன்று. எனவே இறப்பு என்பது மனிதனாகத் தேடிக் கொள்வது. எனவே அவன் நினைத்தால் சாகா நிலையைத் தேடிக் கொள்ளலாம். **விதியை மதியால்** வெல்லலாம் என்பது இதன்வழி தெளிவாகிறது.

## முப்புவின் பயன்பாடு

முப்பு கடுங்காரச் சுண்ணம். இதைத் தனியாக உண்ணுவதற்குப் பயன்படுத்தக் கூடாது. இது எந்த மருந்துடன் சேர்க்கப்படுகிறதோ அந்த மருந்தின் குணத்தை அதிகப் படுத்தி நிலை நிறுத்தும், தன்மையுடையது. ஆகையால் இச் சுண்ணத்தில் குறைந்த அளவை அனைத்து விதப் பற்பங்கள், செந்தூரங்கள், கட்டுகள், இளகங்கள், தயிலங்கள் முதலியவற்றில் சேர்க்க அவற்றின் குணம் மேம்படும். அதிக வீரியத்தோடு, உடலில் பணிபுரிந்து நோய்களை உடனடியாகப் போக்கும்.

மருத்துவ அறிஞர் இந்தச் சுண்ணத்தின் வழியாகப் பலவகையான பாகங்களைச் செய்து கொள்வர். இச்சுண்ணத்தின்

உதவியுடன் இரசாயன, இரசவாத பாகங்களையும், ஆராய்ச்சி யாளர்கள் நுட்பமாய் செய்து கொள்வர்.

இச்சுண்ணத்தின் போக்கை அறிந்து செய்தால் நெருப்பிற்கு ஓடும் சரக்குகள் எல்லாம் நெருப்புக்கு ஓடாமல் எதிர்த்து வெற்றி அடைந்து நிற்கும். அதிகத் தீ தேவையான கடின சரக்குகளெல்லாம் சொற்பத் தீயில் மாண்டு விடும். சிவக்காத செந்தூரங்கள் எல்லாம் நன்றாகச் சிவந்து போகும். இந்த முப்புச் சுண்ணம் தான் குரு **சுண்ணம்** என்று அழைக்கப்படுகிறது.

குருவில்லா மருந்து பாழ் என்ற பழமொழி ஒன்றுண்டு. அப்பழமொழியின்படி குரு சுண்ணமாகிய முப்பு சுண்ணத்தை முடிக்காமல் சித்த மருத்துவம் செய்தல் நன்றன்று. குரு முப்புச் சுண்ணமே முதல் மருந்து. அது இல்லையென்றால் பிற மருந்துகள் வேலை செய்யாது. குரு முப்பு சேர்க்காமல் பிற மருந்துகளைச் செய்யக் கூடாது எனத் தம் பாடல்களில் சித்தர்கள் அறிவுறுத்தியுள்ளதும் இதனால் தான் என்கிறார் எஸ். ஆர். சங்கரலிங்கனார் (முப்பு ஆய்வு, சுவடி. 2: ஓலை. பக். 2. 27-12-92).

நோயற்ற வாழ்வு, அறமொடு பொருள், அறிவோடு அருள் உண்மையான வாழ்வு கிட்ட இம்முப்பு துணைபுரிகிறது.

**மரணமிலாப் பெருவாழ்வு கண்டிடுவீர்**
**பேரின்ப வாழ்வினைக் கொண்டிடுவீர்**

என்பதற்கிணங்க ஒவ்வொருவரும் மெய்ப்பொருளை அறிந்து தன் சீவசோதியைப் பெருக்கி அருட்பெருஞ்சோதியைக் காண இம்முப்பு உறுதுணை புரியக்கூடியது.

## முப்பு கைகூடும் தகுதி

தவசிகளுக்கு, தக்கதும், மேன்மையானதும், புகழ் பெற்றதும், நிலைத்ததுமான முப்பு முடித்தல் என்பது எளிதில் கைகூடும். மற்றவர்களுக்குக் கடின முயற்சி செய்தால் மட்டுமே கைகூடும். அவர் வேறு சிந்தனையில் கவனம் செலுத்தாது முழு கவனத்தையும் இதில் செலுத்தி முயல்பவராய் இருத்தல் வேண்டும். முப்பு முடிக்கும் ஆற்றல் பெற்றவன் தன்னைப் பெருமையாக வெளிக்காட்டிக் கொள்ள மாட்டான். வாய்திறந்து தனது திறமையை வெளிக் கூற மாட்டான்.

கடவுள் தியானமும், அருளும் பெற்ற மாணவனுக்குக் குருகுலத்தின் வழி கிட்டும். அவன் குருவிடம் நம்பிக்கை வைக்க வேண்டும். குருவுக்குத் துரோகம் செய்ய நினைக்கக் கூடாது. இறை

அருள், இறையை வேண்டுதல், ஆன்மவலி, நீண்ட காலப் பயிற்சி, வாதத்திறமை போன்றவற்றை அவன் வளர்த்துக் கொள்ள வேண்டும். இடம், பொருள், ஏவல், உடல் துன்பம், ஊக்கம், விடாமுயற்சி முதலியவையும் அவனுக்கு முக்கியமானவை.

ஒன்பது கோள்களின் அமைப்பு சாதகத்தில் சாதகமாய் இருப்பதும் அவசியம். ஏனென்றால் அவனது முன் பிறப்பு முன்னோர் தொட்டகுறை விட்ட குறை போன்றவை இருக்கும் போது தான் குரு தொட்டுக் காட்டும் நிலை உருவாகும். இத்தகைய விதி சாதகமாய் இல்லாத பலர் பேரளவு முயன்றும் பயனடைய முடியா நிலையினைப் பார்க்க முடிகிறது.

தேன் போன்ற நெஞ்சம், பணிவுடன் இருத்தல், குருவைக் கடவுளாய் ஏற்றல், நேசமுடன் கனவிலும் குருவை நினைவாய் வைத்தல் போன்ற தகுதிகளைச் சீடன் பெற்றிருந்தால் குரு சொல்லித் தராமலே சீடனின் கனவில் இக்குரு வந்து தானறிந்த வித்தைகள் அனைத்தையும் சொல்லிக் கொடுத்து விடுவார்.

துலாராசிக்குச் சொல்லாமலே வாய்க்கும். கன்னி ராசிக்கு மற்றவர் சொல்லி வாய்க்கும். இடது பக்க முதுகில் மரு இருக்கும். நெற்றியில் சூலரேகை இருக்கும் என்பன போன்ற அடையாளங்கள் தேரையர் முதலான சித்தர் நூல்களில் கூறப்பட்டிருக்கின்றன.

எனவே இக்கலையின் மீது ஆழ்ந்த நம்பிக்கை வைத்து குருவைப் போற்றி, ஆண்டவனை இடைவிடாது இக்கலையை உணர்த்துமாறு வேண்டுதல் இன்றியமையாதது.

இந்த முப்பு எனும் மருந்தைச் செய்து பிறவிப் பயன் அடைய வேண்டும் என்ற எண்ணம் உடையவர்கள் ஆன்மீகச் சிந்தனையோடு முப்பு முடிக்க முனைய வேண்டும். மக்கள் உடல் நலமும், மனநலமும் பெற வேண்டும் என்ற முனைப்புடைய இவர்கள் பற்று அற்றவர்களாக இருத்தல் வேண்டும்.

**சிக்கல்**

முப்பு பற்றிய செய்திகளை நூல்வழி அறிந்து கொள்ளும்போது பலவிதமான சிக்கல்கள் ஏற்படுகின்றன. முப்பு பற்றிய ஆய்விற்கு இச்சிக்கல்கள் பெருந்தடையாக இருந்ததால் முப்புவின் பயன்பாட்டினை இன்றுவரை முழுமையாகப் பெற முடியவில்லை. இச்சிக்கல்களுக்கான காரணங்கள் சிலவற்றைக் கீழே காண்போம்.

சித்தர்கள் தங்கள் மருத்துவக் கருத்துகளை மற்றவர்களுக்கு வெளிப்படுத்தவில்லை. அவர்கள் பயன்படுத்தி வரும் போது அனுபவ வாயிலாக உடன் இருந்த சீடர் பலர் அறிந்து கொண்டனர். எனவே இவர்கள் அறிந்து கொண்டதிலும் சில தவறுகள் இருக்கலாம்.

தகுதியான சீடனுக்குக் கூறும் போது கூட உட்பொருளை மறைத்து வெளிப்படுத்தும் நிலை இருந்திருக்கிறது. இதுவும் தவறுகளை ஏற்படுத்தி இருக்கும்.

மறைபொருளாக இருந்துவிடக் கூடாது என்று எண்ணிய சிலரே பிற்காலத்திற்குப் பயன்படும் வகையில் வெளிப்படுத்தி யுள்ளனர். உபதேசித்துள்ளனர். அவை வாய் வழியே பாதுகாக்கப்பட்டுப் பின்வந்தவர்களால் எழுதி வைக்கப்பட்டன. இவர்கள் தாம் அறிந்து வைத்திருந்ததை எழுதும் போது நினைவில் இருந்த சில செய்திகளை அதுபோது நினைவுக்கு வராததால் எழுதாமல் விட்டு இருக்கலாம்.

எனவே முப்பு பற்றிய செய்தி வாய்மொழியாகப் பேசப்பட்டுப் பின் ஏட்டில் எழுதப்பட்டிருக்கும். ஏட்டில் எழுதத் தொடங்கிய சிலர் பரிபாஷைச் சொற்களுக்குத் தான் அறிந்த பொருளைச் சரியான பொருள் இதுதான் என நினைத்து அப்பரிபாஷைச் சொற்களுக்குப் பதிலாகத் தான் அறிந்த சொற்களை எழுதியிருப்பர்.

முப்பு பற்றிய சுவடிகளைப் படியெடுத்தவர்கள் முப்பு பற்றி அறிந்தவர்களாகவும் இருந்திருப்பர். இவர்கள் படி எடுக்கும் போது பரிபாஷைச் சொற்கள் சிலவற்றிற்குத் தான் அறிந்த பொருளை எழுதியிருக்கலாம். இவர்கள் சரியென நினைத்து எழுதிய பரிபாஷைச் சொற்களில் தவறுகளும் இருக்க வாய்ப்புள்ளது.

எனவே முப்பு தொடர்பாக நமக்குக் கிடைக்கும் நூல்களில் எவ்வளவோ தவறுகள் இருக்கலாம்.

மேலும் சித்தர்கள் குறிப்பிட்டுள்ள பரிபாஷைச் சொற்களைப் புரிந்து கொள்வதில் பல இடையூறுகள் உள்ளன. முப்பு என்ற ஒரு பொருளே நாத விந்து என்ற இரண்டு பொருளாக மாறுகிறது. இந்த இரண்டையும் சித்தர்கள் பல பரிபாஷைச் சொற்களால் பேசியுள்ளனர்.

முப்பு முறையானதுதான். இருப்பினும் ஒவ்வொரு நூலில் பயிற்சியுடைய ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகவே பொருள் செய்கின்றார்கள். ஒரு பண்டிதர் சொல்வதை மற்றொரு பண்டிதர் மறுக்கிறார். அதாவது அம்முறை விரிவானது, சரியானதன்று என்று

கூறித் தன் முறையே சுருக்கமானதென்றும், மறுக்க முடியாததென்றும் சொல்கின்றார். இங்ஙனம் நூல் நெறிகளும் குழப்பத்தைத் தருகின்றன.

சிவ முப்பு, சத்தி முப்பு போன்றவை முப்புவின் பரிபாசைச் சொற்கள். முப்பு செய்முறை பாடல்களிலும், சிவ முப்பு, சக்தி முப்பு என்ற பெயர்களில் வெவ்வேறு செய்முறைப் பாடல்கள் கிடைக்கின்றன. எனவே முப்பு, சிவ முப்பு, சத்தி முப்பு என்பவை ஒன்றா வெவ்வேறா என்பதிலும், அண்டக்கல், சுத்த கெங்கை, அமுரி போன்ற சொற்களுக்கான பொருளை அறிவதிலும் குழப்பமும் கருத்து வேறுபாடுகளும் இன்று வரை இருக்கத்தான் செய்கின்றன.

அமுரி, பழச்சாறு, அண்டம், மூதண்டம், பிண்டம், அகரம், உகரம், பூநீறு, பனிநீர், அப்பை, மதிப்பால், அமுதப்பால், நாதம் விந்து முதலான சொற்களின் பொருட்கள் என்றும் ஆய்விற்கும் மாற்றத்திற்கும் உரியன.

## முப்புவின் வேறுபெயர்கள்

சிங்கம், பேரண்டம், வெள்ளைச்சாரை, சிறுநாகம், பட்சிராசன், சத்துரு காலன், ஆதியுப்பு, சத்தியுப்பு, வழலையுப்பு, நாதவுப்பு (அக, பரிபூரணம் 400 பா. 60), வாலை, ஓங்காரம், ரீங்காரம், ஒருமைப்பிள்ளை, திருசெந்தீ, தீட்டுச்செல்வி, அமிர்தம், செந்தேன், விசம், பேச்சி, சிந்தூரத்திலர்தம் (பா. 61), சல்லிவேர், ஏகமூலி, உவருப்பு, வழலை, அண்டம், பிண்டம், ஆதி அந்தம், மதிரவி, கோஜபீஜம், ரோமம், சவர்க்காரம், ஏரண்டம், சிப்பி, நத்தை, கும்பிடுக்கல், யானைக்கல், வெள்ளைக்கல், பச்சைமலப்புளி, நாதம், விந்து, தலைப்பிண்டம், சிவஉப்பு, கோரை, கிளிஞ்சி, மகாமகரபூ, கன்னி, பழச்சார், திகைப்பூடு, இந்திரகோபம், பூச்சி, கருங்கோழி, ஜோதி, சுரோணிதம், திகைப்பூச்சி, கல்லுப்பு, குருவண்டு, பூநீறு, பனிக்குடம், கரியுப்பு, கொடி மூலம், கன்னிப்பெண், வாலைப் பெண், சத்திப்பெண், ஞானப்பெண்.

துருசு, காரம், கந்தம், மண், வன்மைத் தன்மை, பராசக்தி, பெருமைக்காரி ஆகியவை சத்தியுப்புவின் பெயர்களாகும் (பா. 62).

சத்தியுப்பாகிய வழலையுப்பிற்குக் கருவண்டு, கேசரி, கொடிமுடி, பொதி, குருபீடம், குருக்கள், சோதி, தீபம், அமிர்த தாச வாக்கியம், பூரணம், வழலை (பா. 63) ஆகிய பெயர்கள் உண்டு.

பிரம்மக்கல், சுக்கான்கல், மட்டிக்கல், இரத்தினக்கல், விஷபீஜக்கல், ரோமக்கல் போன்ற பெயர்கள் பிண்டக்கல்லிற்கு உண்டு.

மேற்சொன்னவை மட்டுமின்றி மெய்ப்பொருளை அடையச் செய்யும் சக்தியும், சிவமும் சேர்ந்த இம்முப்புவிற்கு நூற்றுக்கும் மேற்பட்ட பெயர்கள் சொல்லப்படுகின்றன.

## முப்புவின் வகைகள் (அகத்தியர் வாத சௌமியம்)

வைத்திய முப்பு, வாத முப்பு, யோக முப்பு, ஞானமுப்பு என்று முப்புவை வகைப்படுத்துவர். ஒன்றைவிட ஒன்று ஒரு படி மேலானது என்ற நிலையில் இவ்வகைப்பாடு அமைகிறது. அதாவது வைத்திய முப்பை விட வாத முப்பு கூடுதல் பலன் தரும். வாதமுப்புவை விட யோகமுப்பு கூடுதல் பலன் தரும். யோகமுப்பை விட ஞானமுப்பு கூடுதல் பலன் தரும். முப்பு தயாரிக்கும் போது அது கெட்டுவிட்டால் அதனையே வைத்திய முப்புவாகப் பயன்படுத்தப்படுகிறது என்றும் கூறுகின்றனர்.

வாத முப்பு, வைத்திய முப்பு, யோக முப்பு, கற்ப முப்பு, சிவ முப்பு, சக்தி முப்பு, ஞான கற்பம் என்றும் இதனை வகைப்படுத்துவர்.

## முப்பின் வகைப்பாடு

| | |
|---|---|
| அகத்திலுப்பு | மதியுப்பு |
| ஆறுப்பின் பெயர் | மதிசெயநீர் |
| ஆண் பனிநீர் | முப்புத் திராவகம் |
| இரண்ட முப்பு | முப்புச் செந்தூரம் |
| இரவி முப்பு | முப்புச் சுண்ண செயநீர் |
| உப்பின் பெயர் | முப்புச் செந்தூர பூசை |
| உப்புகல் அரிய | முப்புச் சுண்ணம் |
| சவுக்கார உப்பு | முப்புக்குரு |
| சக்தி முப்புச் சாப நிவர்த்தி | முதலுப்பு |
| சக்தி முப்புத் திராவகம் | முப்பு முறை |
| சிவ முப்பு | சத்திப்பூநீறு |
| சிவமுப்புச் சுண்ணம் | சவுக்கார பூமி |
| சிவமுப்புச் செந்தூரம் | சவுக்கார உருண்டை |
| நாதசக்தியுப்பு | சிவசத்திப் பூநீறு |
| நாத சத்தியுப்புத் திராவகம் | நாதசத்திப் பூநீறு |
| நாத சத்தி முப்பு | பூநீறு எடுக்கும் பூமி |
| நாத சத்தி முப்புச் சுண்ணம் | பூநீறு திராவகம் |
| நிலவுப்பு | பூநீறு ஆறுமாதபிண்டம் |
| இரவியுப்பு | பூநீறு நாதம் |
| மூன்றாம் முப்பு | பூ நீறு வைப்பு |

மேலும் கந்தக குரு சுண்ணம், மனோசிலை குரு சுண்ணம், கவுரி குரு சுண்ணம், தாளக குரு சுண்ணம் போன்றவை கலப்படம் அற்ற தனித்தனிச் சுண்ணங்களாகும். இவையாவும் 18 சித்தர்களின் நூல்களில் சொல்லப்படுகின்றன.

## குருவகைகள்

முப்பு எனும் குருமருந்தைச் செய்யத் தெரிந்து கொள்ள வேண்டிய முறைகள்

1. சுருக்குக் கொடுத்தல்
2. புடமிடுதல்
3. கொல்லுதல்
4. கட்டுதல்
5. செயநீர் எடுத்தல்
6. கிராசங் கொடுத்தல்
7. திராவகம் இறக்கல்
8. பதங்கம் ஏற்றல்
9. காரசாரங் கூட்டல்
10. மாற்று உயர்த்தல்
11. சாரணை தீர்த்தல்
12. ஊத்துமுறை

இந்தச் செய்முறைகளைப் பொறுமையாக ஒவ்வொன்றாகச் செய்து சித்தியடைய வேண்டும்.

செய்ய வேண்டிய குருவகைகள் பற்றிய குறிப்புகளாகப் போகர், கொங்கணவர், சட்டமுனி ஆகியோர் கூறியவை பின்வருமாறு:

## போகர்

1. இலிங்க குரு
2. இரச குரு
3. நாக குரு
4. சார குரு
5. துருசு குரு
6. உப்பு குரு
7. காந்த குரு
8. சிங்கி குரு
9. நிமிளைக் குரு
10. பூரக்குரு
11. தாளகக் குரு
12. அய குரு
13. பித்தளை குரு
14. தங்க குரு
15. வெடிப்பு குரு
16. சுக்கான் கல் குரு
17. வெள்வங்கக் குரு
18. கருவங்கக் குரு

## கொங்கணவர் வாத காவியம்

19. செம்பு குரு
20. கந்தக குரு
21. ஆறுமுக குரு
22. அங்கிசக் குரு
23. வச்சிர குரு

24. துருசு கட்டு குரு
25. தாளக குரு
26. நாக குரு
27. கந்தகச் செம்பு குரு
28. கந்தகக் குரு
29. சூத குரு
30. வெள்ளி குரு

## முப்புவின் இன்றைய நிலை

இதுகாறும் முப்பு என்றால் என்ன, அதனுடைய ஆற்றல் எப்படிப்பட்டது, அது எத்தகைய அரிய பயனை நமக்கு நல்கக் கூடியதாக இருக்கிறது என்பன போன்ற பல செய்திகள் விளக்கம் பெற்றன.

முப்பு என்பதை இன்றைய நடைமுறையில் சரியாகச் செய்து முடிக்க முடியாது என்ற நிலையும் அதில் கூறப்பட்டுள்ள அண்டம், பூநீறு, அமுரி போன்றவற்றைச் சரியான முறையில் தயாரிக்க முடியாது என்ற நிலையும் பரவலாகக் காணப்படுகிறது. இருப்பினும் முப்பு தயாரித்தல் இன்றும் பயன்பாட்டில் பலரிடம் இருந்து வருகிறது. அதுமட்டுமல்ல இதற்கெனச் சங்கங்கள் உள்ளன, இதுபற்றிக் கருத்தரங்குகளும், கூட்டங்களும் நடைபெறுகின்றன. இங்ஙனம் இன்று நடைமுறையில் இருந்து வரும் பல்வகை நிகழ்வுகள் குறித்த ஒன்றிரண்டு செய்திகளைக் காண்போம்.

## முப்புவை முடிக்கும் தகுதி

முப்பு பற்றி நம்நாட்டுச் சித்தர்களும் மேலை நாட்டு அறிஞர்களும் பலவாறாகக் கூறியுள்ளனர். இவர்கள் உண்மையைக் கண்ட ஞானிகள். பொய் கூற வேண்டும் என்ற அவசியம் இல்லாதவர்கள். எனவே முப்புவும் இரசவாதமும் உண்யையானதுதான். இருப்பினும் முப்பு முடிப்பதில் பெருந்தடையாக இருப்பது பரிபாசையே. அதுமட்டுமல்லாமல் இறையை வேண்டுதலும், இறையருளும், அவ்வருளைப் பெற்று முப்பு முடிக்கும் விதியும், குருவின் உறுதுணையும் இருப்பின் முப்பு என்பது நன்முறையில் கைகூடும். இங்கு விதி என்பது பூர்வ சென்மப் பலனைக் குறிக்கிறது. எனவே பூர்வ சென்மப் பலனால் மருத்துவனாகப் பணியாற்றுபவன் முற்பிறப்பின் விட்ட குறை, இப்பிறப்பின் தொட்ட குறை (மேற்கூறிய தகுதிகளைப் பெறுதல்) என்பதற்கேற்ப முப்புவை முடிக்க முடியும்.

## பயன்பாட்டில் முப்பு

முப்பு என்பது தயாரிக்க முடியாத ஒன்று. அதிலுள்ள பரிபாசைச் சரக்குகளைத் தெரிந்து கொள்ளுதல் இயலாது என்ற

நிலையே பரவலாகக் காணப்படுகிறது. இருப்பினும் இன்றும் நடைமுறையில் பலர் முப்புவைத் தயாரித்து மருந்துகளுடன் கலந்து கொடுத்து வருகின்றனர். இந்நூலில் கூறப்பட்டுள்ள மருத்துவர் போ. பார்த்திபனின் முப்பு செய்முறையை இதற்குக் காட்டாகக் கூறலாம். அவர் மருத்துவக் கல்வி பயின்ற போது அவருக்கு வகுப்பு எடுத்த ஆசிரியர் காலஞ்சென்ற மருத்துவர் மாண்டயன் குமார். இவர் முப்பு செய்து பயன்படுத்தி வந்தவர். தான் பயன்பாட்டில் செய்து வந்த முப்பு செய்முறையை மாணவர் அனைவருக்கும் சொல்லிக் கொடுத்தவர். எனவே அவரிடம் கற்றுக் கொண்ட மாணவர் பலர் தனியார் மருத்துவம் செய்து வருகின்ற நிலையில் முப்புவை நன்முறையில் பயன்படுத்தி வருகின்றனர். மேலும் சித்த மருத்துவர் பலர் சித்த மருத்துவம் தொடர்பான கூட்டங்களில் முப்புவைப் பற்றிய கலந்துரையாடல், விவாதம் போன்றவற்றை நடத்திக் கொண்டு தான் உள்ளனர்.

## முப்பு இதழ்கள்

சீர்மிகு சித்த மருத்துவத்தை உலகெங்கும் பரப்பும் நோக்கத்திலும், சித்த மருத்துவத்தின் சிறப்பை விளக்கிக் கூறும் வகையிலும், மூடி மறைக்கப்பட்ட நம் பாரம்பரியத் தமிழ் மருத்துவத்தை விளக்கித் தெளிவுபடுத்தும் வகையிலும் சித்த மருத்துவத்திற்கெனப் பல இதழ்கள் வெளிவந்துள்ளன. இன்றும் வந்து கொண்டிருக்கின்றன. அவற்றுள் முப்பு பற்றிய இதழ்களாக முப்பு ஆய்வு, வைத்திய முப்பு என்ற இரண்டு இதழ்கள் வெளிவந்தமை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. அவ்விதழ்களில் முப்பு செய்முறை தொடர்பான சித்தர் பாடல்களும், இப்பாடல்களின் வழி பரம்பரை மருத்துவர்கள் செய்து வந்த முப்பு முறைகளும், காரசார லவணம் பற்றிய விளக்கங்களும் இடம் பெற்றுள்ளன.

## முப்பு பற்றிய ஆய்வுக் கூட்டங்கள்

சித்த மருத்துவத்திற்கென நடத்தப்படும் மாநாடுகள், கூட்டங்கள், கருத்தரங்குகள் போன்றவற்றிலும் முப்பு பற்றிய நிகழ்வுகள் இடம் பெற்று வருகின்றன. முப்பு பற்றிய மாநாடு கூட்டம், கருத்தரங்கம் போன்றவை முப்புக்கென்றே நடைபெற்று வருவதும் சிறப்பாகச் சுட்டத் தக்கது. 20க்கும் மேற்பட்ட முப்பாய்வுச் சங்கங்கள் இத்தகைய நிகழ்வுகளை நடத்துகின்றன. இவை பராகெமி (para chemy) போன்ற அரிய முப்பாராய்ச்சி மாத இதழ்களையும் வெளியிட்டுள்ளன. மேற்சுட்டிய இதழ்களும் இத்தகைய சங்கங்களால் வெளிவந்தவையே. தமிழ் சித்தர்கள் பல்கலைக் கூடம் என்ற அமைப்பின் வழி சென்னை, அருள் முப்பு குரு ஆய்வகம் ஒன்றினை

மருத்துவர் டி. சிவக்குமார் இன்றும் நடத்தி வருவதை எடுத்துக் காட்டாகக் கூறலாம். இவர் முப்புக்கென இந்த அமைப்பின் வழி பல கூட்டங்களையும், கருத்தரங்குகளையும் நடத்தியவர். பிறர் நடத்திய முப்பு தொடர்பான கூட்டங்களில், கருத்தரங்குகளில் கலந்து கொண்டவர். இவர் தன் வாழ்நாள் முழுமையையும் முப்பு ஆராய்ச்சிக்காகச் செலவிட்டு வருகிறார். இவரது அமைப்பின் (அருள் முப்பு குரு) தொடக்க விழா 3-9-90இல் சென்னையில் நடந்தது.

1947இல் இருந்து முப்பு ஆய்வில் ஈடுபட்டு அதனைத் தொடர்ந்து செய்து வருபவர் நரசிம்மபுரம் ஜே.கே. குருவப்ப நாயுடு. இவர் பாதரசம் என்பது வெளியில் இல்லை மூலிகைக்குள்ளும் இருக்கிறது. மூலிகை இரசங்களைக் கொண்டு உப்பும் இரசமும் கந்தகமும் சேர்ந்த முப்பு செய்யப்படவேண்டும் என்பன போன்ற கருத்துகளைத் தெரிவிக்கிறார்.

1988இல் தொடங்கப்பட்ட வேலூர் தமிழகச் சித்தர் கலை ஆய்வு நற்பணி சங்கம் மாதந்தோறும் நடத்தும் கருத்தரங்குகளில் முப்பு ஆய்வுக் கருத்தரங்கினையும் நடத்தி இருக்கிறது.

முப்புக் களஞ்சியத் தொகுப்புக்கான கருத்தரங்கினை 29-4-88, 30-4-88களில் ஈரோடு அகில இந்திய முப்பு ஆய்வுக் கழகம் நடத்தியுள்ளது.

முன்னர் சுட்டிய தமிழ் சித்தர் பல்கலைக்கூடம், அருள் முப்பு குரு ஆய்வகம் கற்ப ஆராய்ச்சிக் கருத்தரங்கினை 1-10-95இலும், அருள் முப்பு குரு வர்மக்கலை கருத்தரங்கினை 24-3-91இலும் நடத்தியுள்ளது.

அண்மையில் 9-3-2003இல் சென்னையில் சித்தர்கள் கண்ட முப்பு ஆய்வு மாநில மாநாடு நடைபெற்றது. இதில் முப்பு தொடர்பான கட்டுவகை, செயநீர், சுண்ணம், செந்தூரம் போன்றவை குறித்த அனுபவ முறைகள் விளக்கப்பட்டன. குடந்தை மரு. ஆர். இராமநாதன் 'வைத்திய முப்பு' எனும் தலைப்பில் பேசினார். மதுரை மாற்று மருத்துவக் கவுன்சில் சார்பில் மரு. எ. முருகேசன் குரு முப்பு செயல்முறை விளக்கத்தைச் செய்து காட்டினார்.

இத்தகைய கூட்டங்களில் முப்பு தயாரிப்பதற்கான மூலப்பொருள்கள், உபகரணங்கள், முடிந்த, முடியும் தறுவாயில் உள்ள முப்பு, கட்டு, களங்கு போன்றவை பார்வைக்கு வைக்கப்படுகின்றன. மேலும் இவ்விடங்களில் மட்டுமன்றி இவற்றின் சங்கங்கள் உள்ள இடங்களிலும் இவை செய்து காட்டப்படுகின்றன.

வைத்திய முப்புவை நடத்தும் சித்தர் ஆசிரமத்தில் 4-7-93இல் பூநீறு சுத்திசுண்ணம், இரசமணி ஆகியவையும், 10-4-94இல் அறுவகைச் செயநீர், துருசு சுண்ணம் ஆகியவையும் செய்து காட்டப்பட்டதை இதற்குக் காட்டாகக் கூறலாம்.

எனவே முப்பு என்பது காலங்காலமாகப் பயன்பாட்டில் இருந்து வருகின்றது என்பதும், இன்னும் இதனைச் செம்மையாகப் பெற வேண்டும் எனும் விடாமுயற்சியில் இன்றும் பலர் ஈடுபட்டுள்ளனர் என்பதும் தெரியவருகிறது.

## முடிவாக

இங்ஙனம் முப்பு செய்து காட்டியவர்களும், இன்றும் முப்பு செய்பவர்களும் இருப்பதாகக் குறிப்புகள் கிடைக்கின்றன. இருப்பினும் சித்தர் நூல்களைப் பயின்ற சிலர் தத்தம் முப்பு முறைகளை ஒப்பற்றன வென்றும், அவையே சரியானவை என்றும் மற்றவை எல்லாம் எதற்கும் பயன்படாதவை என்றும் வாதாடி நிலைநிறுத்துகின்றனர். இப்படி இவர்கள் அறுதியிட்டுக் கூறுகின்றனர் என்றால் பின்வரும் ஆற்றல்களைப் பெற்றதாக இவர்களின் முப்பு இருக்கவேண்டுமல்லவா!

முப்புவினால் உலகமே வசியமாகி விடுமென்றும், கவனக் குளிகை, பரிசவேதை, கணவேதை, காயகற்பம் போன்ற பலவாறான எண்ணற்ற அதிசயங்கள் எல்லாம் உண்டாகும் என்றும் ஏட்டில் எழுதப்பட்டிருக்கிறது. எனவே முடிக்கப்பட்டதாகக் கூறப்படும் முப்புகளின் தரநிர்ணயங்கள் மேலும் ஆய்வுகுட்படுத்தப்பட வேண்டியனவாகும்.

மனசக்தி முதலிய பழக்கங்களால் எண்ண முடியாத செயல்கள் நடந்தேறி வருவதை இன்றும் நாம் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம். எனவே சித்தர்கள் அவ்வித ஆற்றல்களால் பற்பல வியப்புக்குரிய அசாதாரணமான செயல்களைச் செய்திருப்பர் என்பதில் எவ்வித மறுப்பும் இல்லை.

அவ்வித ஆற்றலுடையவர்கள் மண்ணைத் தொட்டாலும் பொன்னாவதில் தடையில்லை. ஒரு நோயைப் பார்த்துத் தீர்ந்து போக வேண்டுமெனச் சொல்லும் முன் அது பறந்து போகும் என்பதில் ஐயமில்லை. ஆயின் இவ்வித ஆற்றலுடைய மகான்களெல்லாம் மருந்து முதலியவற்றை ஒரு சாக்குப் போக்காக வைத்துக் கொண்டு செய்ததாயிருக்க வேண்டும். இருப்பினும் முப்பு எனும் பாகத்தால் மேற்கண்ட அற்புதச் செயல்கள் செய்யப்படாவிட்டாலும்

சரக்குகளைக் கட்டவும், அவை பற்பம், செந்தூரம் முதலிய பலவித முறைகள் செய்யவும் பயன்படுமென்பதில் எவ்வித ஐயமுமில்ல. (வைத்திய முப்பு, சுவடி. 2, ஓலை. 6, ப. 3, மே. 93).

முப்பு முடித்துப் பயன்படுத்தி வருவதாகக் குறிப்புகள் கிடைத்தாலும், அவை சித்தர்கள் கூறிய உயரிய முப்பின் தரத்தை உடையனவா என்பது ஐயமே. ஏனென்றால் ஒரு குடுவையில் பாதரசத்தை ஊற்றி அதில் முடிக்கப்பட்ட முப்புவைப் போட்டால் பாதரசம் தங்கமாக வேண்டும். மேலும் முப்பு முடித்தவன் வெளியே கூறமாட்டான் என்றும் சித்தர்கள் கூறுகின்றனர். ஒரு வேளை சித்தர்கள் கூறிய முப்புவை முடித்தவர் இருப்பாரேயானால் அவர் அதை வெளியே சொல்லாமல் பற்றற்ற நிலையில் பெருமையுணர்வு இன்றிப் பிறருக்குப் பயன்படுத்தி வருபவராக இருக்க வாய்ப்பு உண்டு. அவர் சித்தர் வரிசையில் இடம் பெற்ற போற்றுதலுக்கும் வழிபாட்டுக்கும் உரியவரே. இத்தகைய ஆன்மீகத்தோடு இணைந்த முப்பு பற்றி இன்றும் உலகத்தாரால் ஆய்வு நிகழ்த்தப்பட்டுக் கொண்டுதான் இருக்கிறது.

எனவே முப்பு பற்றிய ஆய்வில் ஈடுபட்டு, விரைவில் நோயைக் குணப்படுத்த, மருந்தின் செயல்திறனை அதிகரிக்கச் செய்ய முப்புவைப் பயன்படுத்தி வருகின்றனர் என்பது தெளிவாகிறது.

இதுவரை கூறியவற்றிலிருந்து பார்க்கும் போது முப்பு என்பது ஒரு பொருளை அல்லது மனிதனை அழியாது காக்கும் பொருள் என்பது தெளிவாகின்றது. அது எந்த அளவிற்கு அழியாது காக்கின்றது என்று பார்ப்போம். பாலுக்கு உணவு சோடாவான ஆப்ப சோடா போட்டுக் காய்ச்சினால் ஆறு மணி நேரத்திற்கு மேலும் பால் கெடாமல் இருக்கும். கருவாடு, ஊறுகாய் ஆகியவற்றுக்குக் கல்லுப்பு சேர்க்கப்படும் போது நீண்ட நாள் கெடாமல் இருக்கின்றன. எனவே ஆப்பசோடாவும், கல்லுப்பும் முப்புகளே. இது போலத்தான் இன்று பயன்பாட்டில் இருந்து வரும் முப்பு அவரவர் செய்முறைக்கு ஏற்பச் செயல்திறனில் வீரியம் பெற்றதாக இருக்கும். இத்தகைய முப்புவைச் செய்யும் நிலை இருப்பதால் மேலும் முப்பு முயற்சியில் ஈடுபட்டு அதன் செயல்திறனில் கூடுதல் விழுக்காட்டினைப் பெற்றுச் சமுதாயத்திற்குப் பயன் விளைவிக்கச் செய்தல் வேண்டும்.

## சித்தர்களின் முப்பு குரு செய்முறைகள்

முப்பு என்பது ஒரு முறையில் செய்யப்படும் ஒரே பொருளல்ல. முப்புவைச் செய்வதற்குப் பல வழிகள் உண்டு. ஒவ்வொரு முறையிலும் வேறுபட்ட கூட்டுப் பொருட்கள் சேருகின்றன. சித்தர்கள் வெவ்வேறான முறைகளில் முப்புவைச்

செய்திருக்கின்றனர். இவற்றின் செய்முறைகளில் மிக அதிகமாகப் பயன்படும் பொருள் பூநீறு ஆகும்.

முப்பு என்பது சாகா மருந்து என்று கூறப்படுகிறது. இங்குக் கூறப்பட்டுள்ள சில முப்பு முறைகள் குறிப்பிட்ட நோய்களைத் தீர்க்கும் அருமருந்துகளாகவும் விளங்குகின்றன.

ஒரு குரு பல சீடர்களை உருவாக்குவதைப் போல் குருமருந்து மற்றவகை மருந்துகள் எல்லாவற்றுக்கும் துணையாய் மிகச் சீக்கிரம் நோயை விரட்டும் நன்மையைத் தருகிறது.

பாதரசத்தால் மணியைச் செய்து கையாள்வதைக் குருமணி அல்லது குருகுளிகை என்று சொல்வர். உவர் நிலத்தில் விளையும் உப்பைக் கொண்டு செய்யப்படுவது முப்பு எனப்படும். முப்புகுரு என்றும் சொல்வர்.

முப்பு செய்யப்பயன்படும் அடிப்படைப்பொருட்களில் பெரும்பாலான் வேறுபாடுகள் இல்லை.செய்கின்ற முறைகளைச் சித்தர்கள் தங்கள் செய்முறை அனுபவத்தின்படி சொல்லி யிருக்கின்றனர். அவ்வகையில் சித்தர்கள் தெரிவித்துள்ள முப்பு செய்முறைகள் சில இங்கு இடம் பெற்றுள்ளன. முப்புவின் தோற்றம் ஐம்பூதங்கள் சேர்ந்தது. அவற்றில் வானம் தவிர்த்த நான்கு பூதங்கள் இயங்கிக் கொண்டுள்ளன. இந்நான்கு பூதங்களிலுள்ள கசடைத் தூயநீரினால் தீட்சை செய்து விலக்கிடில் அதுவே குருவாகிறது.

சித்தர்கள் சொல்லும் குரு செய்முறை வெவ்வேறாக இருப்பினும் அவர்கள் கையாண்ட மூலப்பொருள் ஒன்றே. சடமாயுள்ள பிண்டத்தைச் சுத்தம் செய்து சூட்சும வலிமையை ஊட்டுவதே இதன் செயல்முறையாக உள்ளது.

## தட்சிணாமூர்த்தி குருமுகம் நூறு

சடமாயுள்ள பிண்டத்தைச் சுத்தம் செய்து சூட்சும வலிமையை ஊட்டுவதே செயல்முறையாக விளங்குகிறது. அண்டத்தைத் தூள் செய்து நீரில் ஊற வைத்து ஒருநாள் சென்ற பின் நீரை வடித்து, அந்நீரை இரவியில் வைத்து உலர்ந்ததும், மறுமுறையும் நீரை ஊற்றி முன்போலவே வடித்து இரவியில் காய்ச்சி இதே போல் பத்துமுறை செய்தால் முப்பு குருவாகும் என்று பதிப்பிக்க எடுத்துக் கொண்ட இந்நூல், முப்பு பற்றிக் கூறுகிறது.

## புலிப்பாணி – முப்பு செய்முறைகள்

புலிப்பாணி முனிவரின் முப்பு செய்முறைகள் மூன்று கீழே தரப்பட்டுள்ளன.

### செய்முறை: 1

அண்டக்கல்லை நொறுக்கி அதில் பூநீறைக் கரைத்து ஊற்றிக் கலந்து குலுக்கிக் காய்ச்ச வேண்டும். பின் நீரில் கழுவி அதனைச் சூரிய ஒளியில் உலர்த்த வேண்டும். நான்கு நாழி சுண்ணக் கல்லில் நீருற்றி, நீற்றி, வெந்து ஆறிய பின் கலக்கித் தெளிய வைக்க வேண்டும்.

வேறொரு சட்டியில் தெளிவை இறுத்து அண்டத்தூளைச் சேர்த்துக் குலுக்கிக் காய்ச்ச வேண்டும். அதைக் குழிக்கல்லில் இட்டு முன்நீர் விட்டு மைபோல் அரைத்து வில்லை போல் செய்து காய்ந்த பின் உலையில் வைத்து ஊதச் சுண்ணமாகும். காரையினால் பாத்தி கட்டி அதில் வெந்நீரை வார்த்து அதை வழித்துக் கரைத்துத் தெளிவை இறுத்து ஒன்பது நாள் இரவியில் உலர வைத்துப் பூசை செய்து குப்பியில் அடைத்து வைத்து மலைச்சாம்பல், அமுரிநீர் ஆகியவற்றைச் சமமாய்ச் சேர்த்துக் கலக்கித் தெளிய வைத்து இறுத்து முன் பாத்தியில் ஒன்பது நாள் தெளித்து வர வேண்டும். இதை எடுத்துக் குப்பியில் அடைத்துப் பதனம் செய்ய வேண்டும். இதே கைமுறையில் எடுப்பதெல்லாம் உப்பாகும்.

உப்பான முப்புவைச் சமனாய்ச் சேர்த்து மாதவிடாய் நீரென்ற செயநீரில் (பனி நீர்) ஆட்டி ஒரே அளவாக வில்லை செய்து முழுப்புடமிட்டு ஆறிய பிறகு பூசிக்கவும். இதனால் தொழில்கள் சித்தியாகும் (புலிப்பாணி முனிவரின் பலதிரட்டு).

### முப்பு செய்முறை: 2

மாசி, பங்குனி, சித்திரை ஆகிய திங்களில் விளையும் காரமுள்ள பூநீற்றைப் பனிநீரில் கரைத்து வைத்து மூன்றாம் நாள் தெளிவை எடுத்து வெயிலில் உலர்த்தவும். இப்படிப் பத்துமுறை செய்யவும். பளிங்கு போன்ற கல்லுப்பை முறையே பத்து முறை கரைத்துத் தெளிவிறுத்து உலர்த்தவும்.

பூநீறையும், கற்சுண்ணத்தையும் சிறுநீரில் கரைத்து அதில் மண்டையோட்டைச் சில்லுகளாக்கிப் போட்டு நீற்றக் காய்ச்சவும். இங்ஙனம் மூன்று முறை செய்தபின் ஓட்டைத் தூளாக்கிக் கல்வத்தில் இட்டு முட்டை வெண்கருவிட்டு அரைத்து மெழுகாக்கி வில்லை தட்டி உலர்த்திச் சட்டியில் இட்டு மூடி ஏழு சீலை செய்து, உலையிலிட்டு ஊதிக் கடுங்காரச் சுண்ணமான பின் பீங்கானில் இட்டுச் சுத்தத் தண்ணீர் விட்டு மூடி வைத்திருக்க ஒரு மண்டலத்தில் உப்பு மேலே படரும்.

மேற்கூறிய மூவகை உப்பு வகைக்கு ஒரு பலம், சூடன் ஒரு பலம் கூட்டி முட்டையின் வெண்கருவால் அரைத்து வில்லை தட்டி

உலர்த்திச் சட்டியிலிட்டு மூடிச் சீலைமண் செய்து முழுப் புடமிட்டெடுத்து, வில்லையுடன் வீரம், நாபி, புனுகு, வெள்ளுரம், குருவண்டு, பச்சைக் கற்பூரம் வகைக்கு ஒரு கழஞ்சு கூட்டி, எலுமிச்சம் பழச்சாற்றில் இரண்டு நாள் அரைத்து வில்லை தட்டி உலர்த்திச் சட்டியிலிட்டு மூடி மண்சீலை செய்து சேவல் புடமிட்டெடுக்க உள்ளிருக்கும் நீற்றினமே முப்பு குரு.

## முப்பு செய்முறை: 3

வைத்திய முப்புவின் மார்க்கத்தைச் சொல்கின்றேன். பங்குனி, சித்திரை மாதங்களில் உவர் மண் நிலத்தில் விளையும் பூநீறை மண்படாமல் எடுத்து வரவும். நான்குபடி பூநீறுடன் இரண்டு படி கடலுப்பு, இரண்டு படி கற்சுண்ணம், எட்டு படி அமுரியென்னும் குழந்தைகளின் சிறுநீர் (பா. 360) அரைப்படி நல்லெண்ணெய் முதலியன ஒன்று சேர்த்துக் கலக்கிக் கொள்ளவும்.

தெளிந்த பிறகு தெளிவுநீரை எடுத்து உப்பாகும் வரை காய்ச்சவும், எட்டுபடி அமுரிநீர் விட்டு மீண்டும் தெளிவு எடுத்துக் காய்ச்சவும். இப்படிப் பத்துத் தடவை அமுரியை விட்டுக் காய்ச்சிக் குழம்பு போன்ற பக்குவத்தில் எடுத்துக் கொள்ளவும் (361).

எருவின் சாம்பல் நன்றாகப் பரப்பி மெல்லிய சல்லா போன்ற துணியை விரித்துப் போட்டு அதில் இந்தக் குழம்பை ஊற்றவும். நீர் வடிந்து இறுகிய பின்னர் துணிமேல் உள்ளதை வழித்து உருண்டையாக உருட்டிப் போடவும். உருண்டைகளை வெயிலில் காயவைத்து எடுத்துக் கொள்ளவும். நெல்லைத் தண்ணீர் விட்டுப் பிசறி ஒரு பாத்திரத்தில் பாதி அளவு எடுத்துக் கொண்டு அதன்மேல் மல்லிகை இலைகளை வைத்துப் பரப்பி அதன்மேல் உருண்டைகளை வைத்து மேலே மல்லிகை இலையால் மூடி மேலும் நெல்லைப் போட்டுச் சட்டியால் மூடி எரிக்கவும். நெல் வெந்தபின் எடுத்து, அதிலிருந்து உருண்டைகளைப் பொறுக்கி எடுத்துச் சிப்பி நீர் விட்டு அரைக்கவும். வீசம் பச்சைக் கற்பூரம் (333), பூரம், பூநீறு முதலியன வகைக்கு மூன்று வராகன் எடுத்துப் பொடியாகச் செய்து சிப்பி நீரால் அரைக்கவும்.

அடியில் துளையிட்ட சட்டியில் சிப்பியைப் போட்டு, அதன் மேல் அரைத்ததைப் பரப்பவும். செயநீர் இறங்கும். இதை எடுத்துப் பத்திரப்படுத்தவும்.

நாதமும் விந்தும் இரண்டும் சேர்ந்த அந்தச் செயநீருடன் சமஅளவு இளநீர் சேர்க்கவும். பாடு வண்டின் தலை இல்லா உடல், கருநாபி, பச்சைக் கற்பூரம் முதலியன வகைக்குப் பணவிடை வீதம் எடுத்துப் பொடியாக்கி இளநீரில் சேர்க்கவும்.

தெளிவை எடுத்து ஒரு சாமம் இளநீரால் அரைத்து வில்லை தட்டி வெயிலில் காயவைக்கவும். பேரண்டம் என்னும் மண்டை ஓட்டுப் பொடியைச் சட்டியில் பரப்பி அதன்மேல் காய்ந்த வில்லைகளை வைக்கவும். அதற்கு மேலும் பேரண்டப் பொடியைப் போடவும் (366).

சட்டியை மேலே மூடிச் சீலைமண் செய்து காய வைக்கவும். காய்ந்த பின் பத்தெருவில் புடம் போடவும். புடம் போட்ட பின்பு எடுத்து இளநீரால் அரைத்து வில்லை தட்டிப் பேரண்டப் பொடியைப் பரப்பி மீண்டும் புடம் போடவும். இப்படி மீண்டும் மீண்டும் அரைத்து மொத்தம் ஐந்து முறை புடம் போடவும். சுத்தமான சுண்ணமாகி இருக்கும். இது தவிர மண்டையோடு, சிப்பி, நண்டு ஓடு, நத்தை ஓடு முதலியவற்றைத் தனித்தனியாகக் கோழி முட்டைக் கருவால் அரைக்கவும் (357).

அரைத்ததைக் காய வைத்து மூசையிலிட்டு ஊதினால் அஞ்சு சுண்ணமாகும். தனித்தனியாகச் செய்ததைச் சமஅளவு எடுத்து முன் செய்த செயநீர் விட்டு அரைத்துக் குகை செய்து கொள்ளவும். அதிலேயே மூடியும் செய்து கொள்ளவும். முன் செய்துள்ள சுண்ணத்தைச் செயநீர் விட்டு மை போல் அரைத்து வெயிலில் காய வைக்கவும் (368).

அஞ்சு சுண்ணக் குகையில் சுண்ணத்தை வைத்துச் சுண்ணாம்புச் சீலை செய்து புடம் போடவும். புடம் போட்டு எடுத்த பிறகு மீண்டும் அரைத்துப் புடம் போடவும். இப்படி ஐந்து முறை புடம் போட்டுக் கொள்ளவும். நாதாக்களின் சாபம் தீர ஆத்தாளைப் பூசை செய்யவும் (368).

இந்தச் சுண்ணத்தால் சுண்ணமாகும். செந்தூரம். மெழுகாகும். நன்றாகச் செய்தால் உருக்கு இனமாகும். சரக்குகள் பற்பமாகும். லேகியங்கள், கிருதம், எண்ணெய், அவிழ்தம் முதலிய மருந்து வகைகளின் சக்தி அதிகரிக்க இந்தச் சுண்ணத்தில் பணவெடை சேர்க்கவும். சேர்க்காவிட்டால் மருந்து சரியாகப் பலன் கொடுக்காது (370) (புலிப்பாணி மருந்துகள், பக். 29-31).

## ஞானவெட்டி முப்பு செய்முறை

பூநீறும், கடலிலிருந்து கிடைக்கும் உப்பும், பாறையுப்பும் மூன்றும் கூட்டிச் செய்பாகங்கள் அறிந்து செய்தால் முப்பு கிடைக்கும்.

## திருவள்ளுவ நாயனார் – முப்பு செய்முறை

வெடியுப்பு, நிலஉப்பு, கடல் நீருப்பு இந்த மூன்றும் சேர்ந்தது முப்பு என்கிறார். இவற்றைக் குழிக்கல்லில் இட்டு வீரம், பூரம், புனுகு,

குருவண்டு, நாபி முதலியன வகைக்கு ஒரு கழஞ்சு சேர்த்து எலுமிச்சம் பழச்சாற்றால் அரைக்க வேண்டும்.

## அகத்தியர் முப்பு செய்முறைகள்

அகத்தியரின் முப்பு செய்முறைகள் ஐந்து கீழே விளக்கம் பெறுகின்றன.

### செய்முறை: 1

மதுரையென்ற நாட்டுக்குள்ளே மலையாய் வைரம் போல் வளர்ந்திருக்கும் சுண்ணக்கல், நாதமென்ற செயநீரால் உவருப்பு, கல்லுப்பு இரண்டையும் சுண்ணாம்புக் கல்லுடன் சேர்த்து ஒரு சாமம் (இரண்டு மணி நேரம்) ஆட்ட வேண்டும். இவ்வாறு ஆட்டியதைச் சூரிய ஒளியில் உலர விட வேண்டும். (அகத்தியர், முப்பு முப்பது, அ. கீ. சு. நூ. ஆர் 6008).

### செய்முறை: 2

அகத்தியர் அருளிய அகண்டித அகராதி (2., சுவடி எண். 324, உ.த.நி.) என்ற சுவடியில் அகத்தியர் அருளிய முப்பு முப்பதில் இச்செய்முறை இடம் பெற்றுள்ளது.

வேற்பூவைச் சுத்த நீர் விட்டுக் கலக்கித் தெளிய வைத்துக் காய்ச்சி நீரை வற்றவிட வேண்டும். மறுபடியும் சுத்தமான நீர் விட்டுக் கிண்டித் தெளிய வைத்து இறுத்துக் காய்ச்சி வைக்க வேண்டும். இப்படிப் பத்துமுறை காய்ச்ச வேண்டும். ஒவ்வொரு தடவை காய்ச்சும் போதும் சுத்தநீர் விட்டுக் கலக்கித் தெளிய வைத்து நீரை இறுத்து விட்டுக் காய்ச்ச வேண்டும்.

கறியுப்பையும் முப்புவையும் சேர்த்துச் சுத்தமான நீர்விட்டுத் தெளியவைத்துப் பத்துமுறை காய்ச்ச வேண்டும். மூதண்ட பிரம்மாவின் விந்தான பூநீறைத் தண்ணீர் விட்டுக் கலக்கித் தெளிய வைத்து இறுத்து முன்போலவே பத்துமுறை நீர்விட்டுக் கனமாக அடுப்பேற்றிக் காய்ச்ச வேண்டும். இவ்வாறு பத்துமுறை நீற்ற வேண்டும்.

நீற்றிய உப்புடன் பூநீறு சேர்த்துக் கரைக்க வேண்டும். அந்த உப்பு வெள்ளை நிறத்தில் இருக்கும்.

சுண்ணக்கல்லைத் தண்ணீரில் போட்டவுடன் சுண்ணமாகி விடும். பிரம்ம கற்பம் எனும் வெள்ளைக் கல்லை எடுத்து அமுரிக்குள்ளே உவர்மண்ணைக் கரைத்துக் கல்லுப்புடன் சேர்த்து நன்றாகக் காய்ச்ச வேண்டும். இதற்கு வேதாந்த மூர்த்தி என்று பெயர்.

தள்ளை என்ற அதனை முட்டையின் வெண்கருவால் நுண்மையாக அரைத்து வில்லை தட்டி உலர வைக்க வேண்டும்.

சுண்ணாம்பில் உள்ள நீரை எடுத்துப் பீங்கானில் வைத்து நீற்ற வேண்டும். சீலைமேல் நிறைய விட்டு 40 நாட்கள் வைத்தால் அதன் மேல் உப்பு வந்து படரும். அந்த உப்பை எடுத்து ஓட்டின் மேல் வைத்து ஓடு கொண்டு மூடி மண் செய்து குக்குடப்புடத்தில் மூன்று முறை இப்படி வைக்க வேண்டும்.

அந்தக் காடியுடன் வீரமும், பூரமும் கூட்டிச் சுண்ணம் கூட்டி, நவச்சாரமும் கூட்டி வெண்பாலால் நன்றாக மூன்று நாள் ஆட்டி, வில்லை செய்து சூரிய ஒளியில் உலரவிட வேண்டும். வில்லையைக் குகையில் வைத்து ஊத வேண்டும். அது நன்றாகச் சிவக்கும் வரை ஆனைப்பால் சொட்டுச் சொட்டாக விட வேண்டும். பின்னர் அதனை எடுத்து மூன்று சாமம் ஆட்ட வேண்டும். அதனை வில்லை தட்டி வெயிலில் உலர்த்தி, ஓட்டில் வைத்து ஓடு கொண்டு மூட வேண்டும். சுண்ணமும் அதன் எடைக்கு எடை காரமும் சாரமும் கூட்டிக் கல்வத்தில் இட்டு 4 சாமம் அரைக்க வேண்டும். பின்னர் காந்தத்தைச் சேர்த்துப் பொன்முசுட்டைச் சாற்றால் ஆட்ட வேண்டும். இதனைக் குக்குடப் புடத்தில் போட்டுச் சுண்ணம் கூட்டவேண்டும். அதனுடன் பூநீறு, ஆனைப்பால் எடைக்கு எடை சேர்த்து இருசாமம் ஆட்டி வில்லை தட்டவேண்டும். குக்குடப்புடத்தில் இருந்து எடுத்துக் கந்தகம், சுண்ணம் சேர்த்து முட்டை வெண்கருவால் ஆட்டி வில்லை தட்டிச் சூரிய ஒளியில் உலரவிட வேண்டும். பின்பு அதனை 50 எரு கொண்ட புடத்தில் போட்டு அதன் எடைக்குஎடை பொன் முசுட்டைச் சாறுவிட்டுப் பிறகு ஒரு சாமம் ஆட்டி எடுக்க வேண்டும்.

அதனுடன் ஒரு பலம் செம்பு சேர்த்து உருக்கினால் அது பத்தரை மாற்று ஆகும். வெங்கலம் பத்துக் கழஞ்சு சேர்த்துக் குகையிலிட்டு ஊத வேண்டும். வெங்கலம் துய்ய வெள்ளையாகும்.

வெள்வங்கம் அதனுடன் சேர்த்தால் அதுவும் வெள்ளையாக மாறும். பித்தளையுடன் சேர்த்து ஒரு கழஞ்சு பலம் அஞ்சு கொடுத்தால் ஏழரையாகும்.

துத்தநாகம், ஒரு பலம் சேர்த்தால் அது துய்ய வெள்ளையாகும். வெள்ளிதனில் கொடுத்தால் அதுவும் வெள்ளை நிறமாக மாறும்.

ஐந்து உலோகங்களும் அரைபலம் எடுத்து உருக்கினால் அரைகுன்றி சேர்த்தால் ஐந்தரையாகும்.

## செய்முறை: 3

உவருப்பைச் சுத்தமான நீர்விட்டு நன்றாகக் கலக்க வேண்டும். கலக்கியதைத் தெளிய வைத்து நன்றாக இறுத்துக் கொண்டு பின்பு காய்ச்சி வற்ற வைக்க வேண்டும். மீண்டும் தெளிய வைத்து இறுத்துக் கொள்ள வேண்டும்.

மீண்டும் காய்ச்சி வற்ற வைக்க வேண்டும். இவ்வாறே பத்து முறை காய்ச்ச வேண்டும். காய்ச்சும் போதெல்லாம் சுத்த நீர் விட்டுக் கலக்கித் தெளிய வைத்து இறுத்துக் காய்ச்ச வேண்டும். இவ்வாறு காய்ச்சுவதால் வரும் பூ வெண்மை நிறத்தில் இருக்கும்.

கறியுப்பை எடுத்துக் கொண்டு உவர்ப்பூவைச் சுத்தமான நீர் விட்டுக் கலக்கித் தெளிய வைத்து இறுத்துக் காய்ச்சி அது போலவே பத்துமுறை காய்ச்ச வேண்டும்.

நிலவுப்பை மூதண்ட பிரம்மாவின் விந்து என்றும், பூமியுடைய நாதம் என்றும் குறிப்பிட்டுள்ளனர். இதையே கல்லுப்பென்பர். கல்லுப்பை நீற்றினால் சுண்ணமாகும். இதனைக் காரச்சுண்ணம் என்றும் குறிப்பிடுவர். கல்லுப்பைத் தண்ணீரில் போட்டவுடன் நீறிப்போகும். இதுவே சவுக்கார குருவாகும்.

தூய வெள்ளை நிறமுடைய வெள்ளைக் கல்லை (பிரம்ம கற்பம்) எடுத்து அமுரிக்குள் நீருடன் உவர்மண்ணைக் கரைத்துக் கொள்ள வேண்டும். கரைத்த உடன் அவிந்த கல்லைப் போட்டு நன்றாகக் காய்ச்ச வேண்டும். சுண்ணக்கல் கட்டியாகிவிடும். இதனையே வேதாந்த மூர்த்தி என்பர். அதனை முட்டையின் வெண்கரு விட்டு அரைத்து வில்லை தட்ட வேண்டும். வில்லைகளை உலையில் வைத்து ஊத வேண்டும். சுண்ணாம்பு நீர் எடுக்க வேண்டும். அது கொதித்து வெந்து நீறிப் போகும். அதனைப் பீங்கானில் வைத்துத் தண்ணீர் நிறைய விட்டு 40 நாட்கள் வைத்தால் அதன்மேல் உப்பு வந்து படரும். அதுவே முப்பு.

இதனை வழித்து எடுக்க வேண்டும். இதில் ஒரு பலமும், கற்பூரத்தில் ஒரு பலமும் சேர்த்து முட்டை வெண்கரு நீர் விட்டு ஆட்டி வில்லை செய்து உலர வைக்க வேண்டும். உலர்ந்த பிறகு ஓட்டில் வைத்து மூடி, சீலைமண் சாற்றிக் கொண்டு முழுப்புடத்தில் வைத்தால் நீறிப் போகும்.

இதனுடன் வீரம் ஒரு கழஞ்சு, புனுகு ஒரு கழஞ்சு, பூரம் ஒரு கழஞ்சு சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டு ஆட்டி வில்லை தட்டிச் சூரிய ஒளியில் உலரவிட வேண்டும். சுண்ணமானது கடுங்காரமாகி விடும் (அகத்தியர் முப்பு ஐம்பது, கீ.சு.நூ.ஆர். 2670).

### செய்முறை: 4

சுத்தித்து ஊதியெடுத்து, கடல்நுரைச் சுண்ணம் பலம் - 1, பூநீறு பலம் - ½, வெடியுப்பு பலம் - ¼. இம்மூன்று சரக்குகளையும் கல்வத்தில் இட்டு அறுவகைச் செயநீர் விட்டு நன்றாய் அரைத்து வட்டுச் செய்து காய்ந்து கணீரென்று ஓசை வருமாறு காய்ந்த பின்பு எடுத்து ஐந்து எருவில் புடம் போட முப்பு சுண்ணமாகும்.

இதையெடுத்துப் பத்திரப்படுத்திக் கொண்டு அதில் சிறிது வாய்நீர் விட்டுக் குலைத்துத் தங்கத்தகட்டின் மேல் தடவி உலர்ந்த பிறகு அகலில் வைத்துச் சீலைமண் செய்து குக்குடப்புடம் போட நீற்றுப் போகும். (அகத்தியர் வாத சௌமியம்).

### செய்முறை 5 (வசிய முப்பு)

அகத்தியர் பூரண சந்திரோதய வாலை 200 (அ.கீ.சு.நூ.ஆர். 6087, டி.ஆர். 2555) என்ற நூல் வாலை என்று கூறக் கூடிய 12 அல்லது 13 வயதுள்ள அப்பொழுதுதான் பருவம் அடைந்த பெண்ணுடைய காமப்பால் கொண்டு முப்பு செய்வதைக் கூறுகின்றது.

இந்நூல் பெண்களை நான்கு வகைகளாகப் பிரித்து, முதல் மூவகைப் பெண்களின் வழி முப்பு செய்வது பற்றிக் கூறுகிறது. இதில் ஒவ்வொரு வகைப் பெண்ணுக்கும் உரிய இலக்கணம் கூறப்படுகிறது. நான்காம் வகைப் பெண் எதற்கும் ஏற்றவளல்ல என்று கூறுகிறது. சர்வ இலட்சணமும் பொருந்திய முதல்வகைப் பெண்ணை வெயில் படாமல், நல்ல உணவு ஊட்டி வளர்த்து வாரம் மூன்று முறை எண்ணெய் முழுக்காட்டி, பசு நெய், வாழைப்பழம் உண்ணக் கொடுத்து அவள் பருவம் அடையும் நேரம் பார்த்துவர வேண்டும். பூரணசந்திரன் வரும் பௌர்ணமியில் வாழைச்சாறும், சாதிக்காயும் கலந்து அவள் குறியில் சேர்க்க வேண்டும். பருவம் அடைந்த பின் ஏழாம் நாள் அவள் காமப்பாலை வாழையிலையில் எடுத்துத் துருசு சேர்த்து வெயிலில் காய வைத்து இலிங்கத்தில் பூச மெழுகாகும். இதுவே முப்புவாகும்.

இதே போல் இரண்டாம் சாதிப் பெண்ணுக்குச் சீரகம், கூவிளம் தின்னக் கொடுத்துப் பருவம் அடைந்த முதல் மூன்று நாளும் தூங்கி எழுந்தவுடன் ஊறிவரும் சுரோணிதப் பாலை முதல் நாள் பீங்கானில் வாங்கி, இரவு பனியில் வைத்தும், மறுநாள் வெயிலில் வைத்தும், ஈருள்ளிச்சாறு சேர்த்து மனோசிலை, துருசு, கந்தகம் சேர்த்தரைத்து ஏழு வறட்டியில் புடம் போட வேண்டும். இது இரண்டாம் வகை முப்பு. இம்முப்புகள் இரசவாதம், காயகற்பம் ஆகியவற்றிற்குப் பயன்படுவன.

இவை வசிய மை செய்தல், சொக்குப் பொடி தயாரித்தல், செப்பிடு வித்தை செய்தல், கருங்கோழியின் மஞ்சள் முட்டையால் வித்தை செய்தல், வசியம் செய்தல், பஞ்சபட்சி சாத்திரம் ஆகியவற்றிற்கும் பயன்படுத்தப்படுகின்றன.

பதிப்பிக்க எடுத்துக் கொண்ட **தட்சிணாமூர்த்தி குருமுகம்** என்ற இந்நூலிலும் வசியமை தயாரித்தல் கூறப்படுகிறது. சுக்கிலமும், சுரோணிதமும் கலந்து பெண் உறுப்பின் வழி வெளியே வரும் போது அக்கலவையை எடுத்து இந்த வசிய மை தயாரிக்கப்படுகிறது.

மேற்சொன்னவை போன்ற பல செய்முறைகள் தவறானவையே என்ற எண்ணத்தை வீ. பலராமய்யாவின் பின்வரும் கூற்று மெய்ப்பிக்கின்றது. பரிபாசைச் சொற்களைத் தவறாகப் புரிந்து கொண்டமையால் இத்தகைய நிலைகள் ஏற்பட்டுள்ளனவா என்பது மேலும் ஆய்விற்குரியதாகும்.

சித்தர்கள் நூல்களில் சிவப்பு நிறமுள்ள கன்னியின் யோனியில் நாக்கால் குடைந்து அதில் வரும் நாதத்தைக் கண்டால் காயசித்தி என்று எழுதப்பட்டுள்ளது. சித்தர்கள் முப்புவைப் பெண்ணாகப் பாவித்து வணங்குபவர்கள். பரிபாசையில் அவ்வாறு கூறியிருக்கின்றனர். இதற்குப் பெண்களின் சுரோணிதம் எனப் பொருள் கொண்டு அதைப் எடுத்து ஏதேதோ செய்கின்றனர். பின்வரும் பாடல் இவர்களது செய்கைக்குக் காரணமாகவும் இருக்கலாம்.

> தாக்குவது ருதுவான யேழா நாளில்
> தனபானம் பற்றிநீ தருணம் பார்த்துப்
> பாக்கிலையும் அருந்தியது படுத்துப் பாரு
> படுக்கு முன்னே வாழையிலை விரித்துக் கொள்ளு
> மூக்கிலையுஞ் செவிவெளியில் நாக்கு நாபி
> மோகனப்பெண் குறிகுடைந்து விரலை நீவி
> நாக்கைவிட்டு மணிவருடி நடத்தும் போது
> நாரி மின்னாள் காமப்பால் வடியும் பாரே

இப்பாடல் முழுமையும் பரிபாசையில் அமைந்துள்ளது (முப்பு குரு, ப. 30).

சிலர் பெண்கள் பிறவிடையாகுங் காலங்களில் வெளிப்படும் இரத்தத்தை எடுத்து அதைப் பாடாணங்களுக்குத் தடவிப் புடம் போட்டு ஏமாந்ததும் உண்டு. காரணம் நாதம் என்பது பெண்ணின் கர்ப்பப் பையிலிருந்து வரும் இரத்த நிறமென்று கருதியமையே மேற்சொன்னபடி பயன்படுத்துவதற்குக் காரணமாயிருக்கும்.

முப்பு என்பது மெய்ப்பொருள். பத்து வயதான வாலைப் பெண் என்று அழைக்கின்றனர். நாம் பெண்ணினுடைய வடிவத்தை மறந்து மெய்ப்பொருள் காண வேண்டும்.

## கொங்கணவர் – முப்பு செய்முறை

பூநீறு 1 பலம், வெடியுப்பு 2 பலம், படிகாரம் 2 பலம், கல்சுண்ணம் 2 பலம், கரியுப்பு 2 பலம் எடுத்துக் கல்வத்தில் இட்டுத் தூளாக்கிக் கோழி முட்டையின் வெண்கருவை விட்டு அரைத்து வில்லை தட்டிக் காய்ந்த பின் அகலில் இட்டு மேல் அகல் மூடி சீலைமண் செய்து குக்குடப்புடமிட்டு ஆறிய பின் பிரித்தெடுக்கக் கடுங்காரச் சண்ணமாகயிருக்கும். இதற்குத் தக்கபடி எருக்கம்பால் சேர்க்க மறுநாள் பால் செயநீராகியிருக்கும். இந்தச் செயநீர் 64 பாடாணங்களை, உபரசங்களைச் சுண்ணமாக்க வல்லது (கொங்கணவர் முப்பு - 4). இம்முப்பைக் கொண்டு துருசுபற்பம் எனும் துருசுகுரு செய்யும் முறை பின்வருமாறு அமைகிறது.

## துருசு குரு – யாகோபு குரு

துருசு சுண்ணமானால் சோதிக்கப் பத்தரையாம் இந்தப் பழமொழி துருசுக்கு மட்டுமே உண்டு. துருசு சுண்ணச் செந்தூரம், களங்கு -- செம்பு, துருசு குரு போன்றவற்றின் எண்ணற்ற செய்முறைகள் சித்தர் நூல்களில் சொல்லப்படுகின்றன.

ஒரு பலம் துருசுக் கட்டியைக் கருந்துளசிச் சாற்றில் ஒரு சாமம் ஊற விட்டு எடுத்துக் கருந்துளசி இலையை அரைத்துத் துருசு கட்டிக் கவசம் செய்து உலர்த்தி அதன்மேல் மண்சீலை ஏழு செய்து ஒரு சாண் அகல, நீள ஆழத்தில் குழிவெட்டி அதில் அடியில் இரண்டு எருவை வைத்து அதன் மேல் கவசத்தை வைத்து அதன்மேல் குழி நிறைய எருவை அடுக்கிப் புடமிடவும். ஆறியபின் பிரித்தெடுத்துத் துருசைக் கல்வத்தில் இட்டுக் கரு ஊமத்தன் சாறு விட்டு ஒரு சாமம் அரைத்து வில்லை தட்டி உலர்த்தி அதன்மேல் முன்கண்ட முப்பு குருவைப் பூசி, கரு ஊமத்தன் இலையின் விழுதினால் கவசித்து அகலில் இட்டு மேல் அகல் மூடி மூன்று சீலைமண் செய்து முழுப்புடமிட்டு ஆறிய பிறகு பிரிக்கப் பற்பமாக இருக்கும். இப்பற்பத்தைத் துருசு குரு என்று கூறுவர் (யாகோபு குரு நூல் 55).

## வேறு சில முப்பு செய்முறைகள்

### செய்முறை: 1 (குருமருந்து எனும் செயரசம்)

குரு மருந்தின் பெருமையைச் சுருங்கச் சொல்லின் இரசம், கள்ளிப்பால், எள் ஆகிய மூன்று சரக்குகளையும் முற்றின தேங்காயில்

அடைத்து முறைப்படி அமைத்துக் கொள்க. அம்மருந்து அடைத்துள்ள தேங்காயின் வாயை அரக்கினால் மூடிச் சேற்று மண்ணில் சில மாதங்கள் புதைத்துப் பிறகு எடுத்து வெள்ளை முள் முருக்கன் தயிலத்தை விட்டு இரசத்தை மட்டும் நன்கு அரைத்துக் குக்குடப்புடமிட்டெடுக்க உயர்ந்த சுண்ணமாக முடிந்து விடும். இந்த இரசச் சுண்ணம் வாதப் போக்கிற்கும், வைத்திய முறைக்கும் பயன்படும். மேற்கூறப்பட்ட இரசமே செயரசம் ஆகும்.

### குளிகை

மேற்கூறப் பெற்ற செயரசத்தை நத்தையின் உள்தசையில் பொருந்துமாறு திணித்து எருக்கிலை, முருக்கிலை, வெட்பாலை இலை ஆகியவற்றைக் கொண்டு செய்முறை தவறாமல் இரத்தின உபரசங்களைப் பெய்து உருக்கிட அது குளிகை என்ற பெருமையுடைய பெயரைப் பெறும். இக்குளிகையின் பெருமையை யாராலும் அளவிட்டுரைக்க இயலாது. இதனையே சாரணைகள் ஏற்றிக் ககனக் குளிகையாக முறைப்படி செய்ய வேண்டும் (சரபேந்திரர் சித்த மருத்துவச் சுடர், ப. 474).

### செய்முறை: 2 (துருசு குரு பற்பம்)

ஒரு பலம் மயில் துத்தம் கொண்டு வந்து சட்டியிலிட்டு அடுப்பேற்றி முப்புச் செயநீரால் ஒரு நாளைக்கு 4 நாழிகை வீதம் மூன்று நாள் சுருக்குக் கொடுத்துப் பிறகு இப்படியே நவச்சார திராவகத்தால் மூன்று நாட்கள் செய்து வெயிலில் காய வைத்து இதன் எடைக்குச் சரியாக வங்க சுண்ணம் எடுத்துச் சலம் விட்டரைத்து மேற்படி துருசுக்குக் கவசஞ்செய்து வெயிலில் ஏழு நாட்கள் உலர்த்திக் கல்சுண்ணாம்பு சீலை 3 செய்து, 5 எருவிற் புடம் போட்டு ஒரு நாள் ஆறவிட்டு மறுநாள் பிரித்துப் பார்த்தால் சுத்த வெண்மையாய் நீறிப் போகும். இதை எடுத்துப் பதனம் பண்ணி வைத்துக் கொள்ள வேண்டும். இதுவே குரு பற்பம்.

### இந்தக் குரு பற்பத்தினால் இரசபற்பம் செய்யும் முறை

ஒரு பலம் இரசத்தைச் சுத்தி பண்ணி, சுத்தி செய்த இரசம் பலம் - 1 கலவத்திலிட்டு அதில் ஒரு வராகனெடை மேற்படி குருபற்பத்தைச் சேர்த்து எச்சிலால் அரைத்துப் பில்லை செய்து வெயிலில் உலர்த்தி ஓர் அகலில் தாளிக்காத கல் சுண்ணாம்பைத் தூளாக்கி மேலும் கீழும் போட்டு நடுவில் பில்லையை வைத்துச் சீலை மண் செய்து உலர்த்திப் பத்து எருவிற் புடம் போட்டு ஒரு நாள் ஆற விட்டு மறுநாள் பிரித்துப் பார்க்கப் பற்பமாக இருக்கும். இதை எடுத்துப் புட்டியில் வைத்துக் கொள்ள வேண்டும்.

### சாப்பிடும் அளவு

ஒரு நாளைக்கு இரண்டு வேளை இரண்டு அரிசியெடை தேனிற் சாப்பிட வேண்டும்.

**தீரும் நோய்கள்:** கை, கால், முடக்கல், சூலை, சர்வாங்க வாதம், குன்மம், இசிவு, சன்னி ஆகியவை தீரும்.

**பத்தியம்:** புளி, புகையிலை, கடுகு நல்ல எண்ணெய் ஆகியவற்றை நீக்க வேண்டும்.

### செய்முறை: 3 (பூநீறு முப்புச் செந்தூரம்)

பூநீறு பலம் 5, பனித்தண்ணீர் பலம் 5, ஓர் இருப்புச் சட்டியையும், இருப்புக் கரண்டியையும் நன்றாக வெள்ளியைப் போல் துலக்கிச் சுத்தமாகத் துடைத்துப் பூநீறையும், பனித்தண்ணீரையும் கரைத்துக் காற்றடியாத மூலையில் 3 நாள் வைத்து நாலாம் நாள் காலையில் பார்க்க அதில் உப்புப் பூத்திருக்கும்.

இந்த உப்பை மேலாக 11 விராகனெடை அல்லது 11½ விராகனெடை எடுத்து முன் கரைத்து வைத்திருந்த இருப்புச் சட்டியையும், கரண்டியையும் எடுத்து முன்போலச் சுத்தமாக வெள்ளியைப் போல் துலக்கி அதிலிட்டு அப்புறம் வைத்த பின்பு சீனம் விராகனெடை¼, நல்ல அன்னபேதி விராகனெடை 1, வெடியுப்பு விராகனெடை 1, வெங்காரம் விராகனெடை 1, இரசம் விராகனெடை 1, கல்லுப்பு விராகனெடை 1,

இந்த ஆறு சரக்குகளையும் கல்வத்திட்டுச் செம்பருத்தியின் இலைச்சாற்றால் மெழுகு பதமாக அரைத்து மேற்சொல்லிய செம்பருத்தி இலையின் சாறு ஐந்து விராகனெடை நிறுத்துக் கல்வத்திட்டு நன்றாகக் கழுவி இருப்புச் சட்டியில் வார்த்து இருப்புச் சட்டியை அடுப்பிலேற்றி ஆவாரை விறகால் தீபாக்கினியாய் எரிய விடவும் (கொதித்து வரும் போது அதில் போடப்படும் மேற்சொன்ன சரக்குகளை அறிந்து கொள்ளவும்).

மக்கி விராகனெடை 1, சவ்வீரம் விராகனெடை 1, பளிங்கு நிறமாக இருக்கின்ற பச்சைக் கற்பூரம் விராகனெடை 1 இந்த மூன்று சரக்கையும் வெவ்வேறாகப் பொடி செய்து வைத்துக் கொண்டு, இருப்புச் சட்டியில் மருந்துகள் கொதிக்கும் போது முதலாவது மக்கித் தூளைப் போடவும். இரண்டாவது சவ்வீரத் தூளையும், மூன்றாவது பச்சைக் கற்பூரத் தூளையும் போடவும். இவற்றைப் போட்டுச் சுண்டி வந்த பின் எலுமிச்சம் பழச்சாறு 2¾ விராகனெடை நிறுத்திக்

கொதிக்கும் சட்டியில் விட்டுச் சுண்டினவுடனே கத்தியினால் சுரண்டி நடுச்சட்டியில் ஒன்றாகச் சேர்த்துக் கரண்டியின் பின் புறத்தால் தேய்த்துக் கொண்டே வரவும். மேற்படி சட்டியில் அடிபிடித்தால் கத்தியினால் சுரண்டி நடுச் சட்டியில் சேர்த்துக் கரண்டியினால் தேய்த்துக் கொண்டே வரவும். இப்படியாக 4 சாமம் கடாக்கினியாய் எரிப்பும் தேய்ப்புமாக இருந்தால் செந்தூரமாகும். இந்தச் செந்தூரத்தைச் சீசாவில் பதனம் செய்யவும். இதுதான் முப்புச் செந்தூரம் எனப்படும்.

### செய்முறை: 4 (முப்பு)

சலவுப்பு (பூநீறு), வாயு உப்பு (நவச்சாரம்), அக்கினியுப்பு (வெடியுப்பு) ஆகிய மூன்றும் கலந்து செய்யுமோர் உப்பு முப்பு என்று சொல்லப்படுகிறது.

மேலும் இந்திரகோபம் ஒரு விராகனெடை, துருசு 2 விராகனெடை, பூநீறு ஒரு விராகனெடை, கடல் நுரை ஐந்து விராகனெடை, நவச்சாரம் ஒரு விராகனெடை, வெடியுப்பு மூன்று விராகனெடை, தாளகம் 3 விராகனெடை, கல்நார் 2 விராகனெடை, குரு வண்டு ஒரு விராகனெடை, பொன்னம்பர் 5 விராகனெடை ஆக இவ்வனைத்தையும் சேர்த்துத் திருநீற்றுப் பச்சை இலைச்சாறு விட்டரைக்க வேண்டும்.

அதன் பின்பு கருப்பு வட்டக் கிலுகிலுப்பை, செங்கீரைச்சாறு, எருக்கம்பால், ஆண் பிள்ளைச் சிறுநீர், முலைப்பால் ஆகியவற்றில் சேர்த்து அரைத்து அம்மருந்தைப் பனியில், பூரணை தொடங்கி இரவெல்லாம் வைத்துக் கொண்டு இதுபோல் 10 நாட்கள் வரை செய்ய வேண்டும்.

கடைசியாக வெள்ளைப் புனுகைக் கரைத்து எலுமிச்சம்சாறு கலந்து 10 நாள் வரை முன் சொன்னபடி பனியில் வைத்து எடுக்கவும்.

இது தினையைப் போல் சிறிது பெரிதாகிக் கடுகளவு பிரகாசிக்கும். மருந்துகளுக்கு உயிரைப் போலவும் காயசித்திக்கும் இரசத்தைக் கட்டிக் கவுனகுளிகை செய்வதற்கும், மருந்துகளுக்கு உயிரைப் போலவும் உதவியாக உள்ளது. மருந்துகளை ஒரே புடத்தில் செந்தூரமாகவும், பற்பமாகவும் செய்யும் தன்மையுடையது. இது பதினெண்வகை குட்டரோகங்களையும் இன்னும் பல நோய்களையும் குணமாக்கும் வலிமையுடையது.

### செய்முறை: 5 (முப்பு)

காரமான பூநீறைப் பனிநீரில் கரைத்து வைத்து மூன்றாம் நாள் தெளிவெடுத்துக் கல்லுப்பு, கற்சுண்ணாம்பு, கபாலவோட்டுப்பு,

சூடன் முதலியவற்றை அண்டவெள்ளைக் கருவால் ஆட்டிப் புடமிட முப்பு கிடைக்கும்.

## செய்முறை: 6 (முப்பு குரு)

பூநீறு: பருவ காலத்து எடுத்த பூநீறு ஓர் அளவாக எடுத்துக் கொண்டு அதைப் பத்து தீட்சை செய்ய வேண்டும். ஒவ்வொரு தீட்சைக்கும் ஓர் எடை பூநீறுக்கு இரண்டு எடை பனிநீர் விட்டுக் கரைத்து இரண்டு நாள் அசையாமல் வைத்து, தெளிவை இறுத்து எடுத்துக் கொண்டு அதை அகலமான பத்திரத்தில் இட்டு வெயிலில் உலர்த்தவும். உலர்ந்த பின் எடுத்து, அந்த எடைக்கு இரண்டு எடை பனிநீர் விட்டுக் கரைத்து இரண்டு நாள் வைத்திருந்து, தெளிவை இறுத்து வெயிலில் உலர்த்தி எடுத்துக் கொண்டு, மேற்கூறிய முறைப்படி பத்து முறை செய்யவும். இதுபோல் செய்ததற்குத் தசதீட்சை என்று பெயர்.

## சோற்று உப்பு (கறியுப்பு)

சோற்றுப்பு ஓர் எடை, பனிநீர் இரண்டு எடை விட்டுக் கரைத்துத் தெளிவை இறுத்து அடுப்பிலிட்டு எரித்து உப்பாக்கவும். இதுபோல் பத்து முறை காய்ச்சி எடுக்கவும்.

## வெடியுப்பு (பொட்டிலுப்பு)

வெடியுப்பு ஓர் எடை, பனி நீர் ஓர் எடை இரண்டையும் கரைத்து வடித்து எடுத்துக் கொண்டு சிறு தீயில் எரித்து உப்பாக்கவும். இதுபோல் ஐந்து முறை காய்ச்சி எடுக்கவும். இந்த வெடி உப்பைக் காய்ச்சும் போது விழிப்புடன் இருக்க வேண்டும். இந்த மூன்று உப்புகளையும் கல்கார்க் போட்ட புட்டியில் போட்டு வைக்கவும்.

**கல்சுண்ணம்**

கல்சுண்ணம் புதியதாக வாங்கி வந்து ஓரிடத்தில், தண்ணீர் படாமல் வைத்தால் இது இரண்டு நாளில் பூத்து விடும். அவ்வாறு பூத்த சுண்ணாம்பை ஒரு பலம் எடுத்து, நவச்சாரம் ஒரு பலம் சேர்த்துக் கல்வத்தில் அரைத்துப் பனியில் வைக்கச் செயநீர் உண்டாகும். இந்தச் செயநீரில் மூன்று அவுன்ஸ் எடுத்து அதில் வீரம், பூரம் கால் வராகன் எடை எடுத்துத் தனித்தனியாகப் பொடி செய்து, கலந்து செயநீரில் இட்டு 3 நாள் வைத்து அந்த நீரில் முன் தயாரித்து வைத்திருக்கும் பூநீறு, சோற்றுப்பு, வெடியுப்பு ஆகியவற்றில் வகைக்கு ஒரு பலம் எடுத்துக் கல்வத்திலிட்டுச் செயநீர் இட்டு ஒரு சாமம் அரைக்க வேண்டும். அரைத்து வில்லை தட்டிக் காய்ந்த பிறகு அகலில்

இட்டுச் சீலைமண் ஐந்து முறை செய்து, உலர்த்தி எடுத்துப் பத்து எருவில் புடம் இட்டு எடுக்க, தூய நிறச் சுண்ணமாக இருக்கும். இதுவே முப்பு குரு ஆகும். இதற்குக் குருவண்டு என்ற பெயரும் உண்டு. இந்த முப்புவினால் புகையாகிப் போகும் சரக்குகளைக் கட்டிச் சுண்ணமாக்கலாம் (முப்பு ஆய்வு, சுவடி 1; ஓலை. 6. ப. 1. 25.5.92).

## செய்முறை: 7 (முப்பு குருசுண்ணம்)

இந்த முப்பு முறை நாம் செய்யும் மருந்துக்கு உயிர் உண்டாக்கும் தன்மையானது. இதனால் அனைத்துவிதமான வியாதிகளும் நீங்கும்.

தை, மாசி, பங்குனி இந்த மாதங்கள் மூன்றில் விளைகின்ற காரமான பூநீறைக் கொண்டு வந்து ஓர் எடை பூநீறுக்கு 4 எடை பனிநீர் விட்டு வைத்து இரண்டு நாள் சென்ற தெளிவை இறுத்து இரவியில் காய வைக்க வேண்டும். காய்ந்த பின் அளந்து அதற்கு இரண்டு அளவுப் பனிநீர் விட்டுக் கலக்கி இரண்டு நாள் வைத்துத் தெளிவை இறுத்து இரவியில் காய வைத்து எடுக்க வேண்டும். இதுபோல் பூநீறை 10 முறை பனிநீரில் கரைத்து இரவியில் காயவைத்து எடுத்துக் கொண்டு, இதுபோல் கரியுப்பு 1 - எடைக்கு இரண்டு எடை பனிநீர் விட்டுக் கரைத்துத் தெளிவை இரவியில் காய வைத்து இதுபோல் 10 முறை செய்து எடுக்கச் சுத்தியாகும். 3வது பாறை உப்பை வாங்கி வந்து அதைப் பாக்கு அளவாக உடைத்துக் கொண்டு அதை ஒரு பாண்டத்தில் இட்டு அதில் பூநீறு கொஞ்சம் போட்டு அமுறி விட்டுக் கரைத்துக் காய்ச்சி வற்ற வைத்து எடுத்து, பாறையுப்பைத் தண்ணீரில் கழுவி உலர்த்திக் கல்வத்தில் இட்டு, அண்ட வெள்ளைக் கருவால் மெழுகு பதமாக அரைத்துக் காசு போல் வில்லை தட்டிக் காய்ந்த பிறகு ஓட்டில் இட்டு மேல் ஓடு மூடி சீலைமண் ஏழு செய்து காய்ந்த பிறகு உலையில் வைத்து ஊதச் சுண்ணமாகும்.

இதை எடுத்துப் பீங்கான் பாத்திரத்தில் வைத்துச் சுத்த சலம் விட்டு வைக்க 40 நாள் ஆனதும் உப்பு பூத்திருக்கும். அதை எடுத்து வைத்துக் கொண்டு இதில் ஒரு பலம் எடுத்து 1 பலம் பச்சைக் கற்பூரம் எடுத்துக் கலந்து கல்வத்தில் இட்டு ஓட்டில் வைத்து ஓடு மூடி 7 சீலை மண் செய்து 50 எருவில் புடம் போட்டு எடுத்து இதில் வீரம், பூரம், புனுகு, குருவண்டு, நாபி ஆகியவற்றை வகைக்கு ஒரு கழஞ்சு சேர்த்துக் கல்வத்தில் இட்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டு, இரண்டு நாள் அரைத்து வில்லை செய்து காய வைத்து ஓட்டில் வைத்து ஏழு சீலை செய்து காய்ந்தபின் கோழிப்புடம் போட்டு எடுக்க வேண்டும். இதுவே முப்பு சுண்ணம். இதை வெள்வங்கத்துக்கு வாய் நீரில்

குழைத்துப் பூசி அதன் மேல் ஆகாசத் தாமரையைக் கவசம் செய்து 10 எருவில் புடமிடச் சுண்ணமாகும் (ஆத்துமாச்சாமிர்தம்).

**செய்முறை: 8 (முப்பு சுண்ணம்)**

வெங்காரச் சுண்ணம், கற்பூரச் சுண்ணம், துருசுச்சுண்ணம், வீரச் சுண்ணம், வெடியுப்புச் சுண்ணம் ஆகியவற்றை வகைக்குப் பத்து கிராம் எடுத்துக் கொள்ள வேண்டும். இவற்றைக் கல்வத்திலிட்டு, பன்னீர் விட்டு நன்கு நெகிழ ஆறு மணி நேரம் அரைத்து வில்லை தட்டி வெயிலில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல் மூடி சீலை செய்ய வேண்டும்.

ஒரு பெரிய சட்டியின் அடியில் ஒரு படி உப்பைக் கொட்டி அதன் நடுவில் அகலை வைத்து மேலும் ஒரு படி உப்பைக் கொட்டி மேல் சட்டி மூடி ஏழு சீலை செய்து காய வைத்து அடுப்பேற்றி 12 மணிநேரம் எரித்து ஆறவிட்டு ஆண்டவனை வணங்கிச் சட்டியைப் பிரித்துப் பார்க்க வேண்டும் உள்ளே வில்லையானது தங்கத்தைப் போல ஒளியுடன் கூடி உருகிக் கட்டி நிற்கும். இதை எடுத்துக் குழியம்மியிலிட்டு மேற்படி பன்னீர் விட்டு நன்கு அரைத்து வில்லை தட்டிக் காய வைத்து அகலிட்டுச் சீலை செய்து சீலை உலர்ந்தபின் பத்து எருவில் புடம் போடவும். இவ்வாறு ஐந்து முறை புடம் போட்டு எடுக்க உயர்ந்த கடுங்காரச் சுண்ணமாகும்.

**அளவு:** அரிசியெடை (காலையில் மட்டும்)

**அனுபானம்:** வெண்ணெய், நெய், தேன்

**தீரும் நோய்கள்:** புற்று நோய் முதலிய கொடிய நோய்கள் குணமாகும்.

இது புற்று நோயிற்கு மிகச்சிறந்த மருந்தாகும் (ஸ்ரீ சரபேந்திரர் சித்த மருத்துவச் சுடர், பக். 297, 298).

**செய்முறை: 9 (வழலை முப்பு – கட்டுவகை நீர்)**

நாலாங் காய்ச்சல் வெடியுப்பை ஒரு பாத்திரத்தில் வைத்துக் கொளுத்தி விட்டால், அது எரிந்து சிட்டமாகி நிற்கும். அந்தச் சிட்டத்திற்குச் சமனெடை கற்சுண்ணாம்பைச் சேர்த்துச் சுத்தநீர் விட்டரைத்து உலர்த்திக் கொள்ள வேண்டும். பிறகு ஓர் ஓட்டில் கற்சுண்ணாம்பைப் போட்டு, அதன் மேல் முன் பில்லையை வைத்துப் பில்லை மறையும் படியாக மேலே சுண்ணாம்பைக் கொட்டி மேலோடு மூடி சீலை மண் செய்து, கவசத்திற்கு நான்கு பங்கு எடை வறட்டியில் புடமிட வேண்டும். ஆறிய பின் பில்லையை எடுத்துக் கல்வத்தில்

இட்டுப் பொடித்து முன்போல நீர்விட்டு அரைத்து, முன் போலவே பில்லை செய்து உலர்த்தி முன் போலவே புடமிட வேண்டும். ஆனால் ஒரு பங்கு வறட்டியை அதிகப்படுத்த வேண்டும். இவ்வாறு மடக்கி மடக்கிப் பத்து முறை புடமிட வேண்டும். ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு பங்கு வறட்டியை அதிகப்படுத்திக் கொண்டே போக வேண்டும். இவ்விதம் பத்துப் புடமிட்டால் வெடியுப்புச் சுண்ணமாய் இருக்கும்.

இச்சுண்ணம் பலம் - 4 (140 கிராம்) சுத்தி செய்த பூநீறு பலம் - 4. இவ்விரண்டையுஞ் சேர்த்துப் பொடித்து அயச்சட்டியில் வைத்தெரிக்க வேண்டும். இரண்டும் உருகும் போது 2 பலம் வெண்காரத்தைப் பொடித்துப் போட்டு எரிக்க எல்லாஞ் சேர்ந்து உருகி நீர் போல இருக்கும். அந்தத் திரவத்தில் வீரம், பூரம், பாடாணம் முதலிய சரக்குகளைப் போட்டுப் பின்வருமாறு வறுத்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

ஒரே கட்டியாகவுள்ள 35 கிராம் வீரத்தை மேற்கண்ட திரவத்துள் போட்டுத் தீயை மெதுவாய் எரித்து அந்தத் திரவமெல்லாம் சுண்டுகிற வரையில் அந்தக் கட்டியைப் புரட்டிக் கொடுக்க வேண்டும். இவ்விதம் செய்து வருவதால் திரவமெல்லாம் சுண்டி கட்டியின் மீது கவசம் போலப் பிடித்திருக்கும் குளிர ஆறியபின் கத்தியால் மெதுவாகச் சீவி மருந்தை எடுத்துக் கொள்ள வேண்டும். இவ்விதமே மற்ற சரக்குகளை எல்லாம் செய்து கொள்ளலாம். இவ்விதம் செய்தால் அவை நெருப்பிற்கு ஓடாமல் கட்டுப்பட்டுப் போகும். இவ்விதம் கட்டியதை நெருப்பின் மீது வைத்துச் சோதிக்கச் சோதனைக்கு ஒத்திருந்தால் உத்தமம். இல்லையெனில் இன்னொரு முறை மடக்கிச் செய்து கொள்ளப் பூரணக் கட்டாகிவிடும்.

நெருப்பிற்கு ஓடும் சரக்குகளை இவ்விதம் செய்வதால் அந்தச் சரக்குகள் தூய்மையாவதுடன் கட்டுப்பட்டுச் சிறந்த குணத்தையும் தரும் (வைத்திய முப்பு சுவடி. 4; ஓலை. 7; ப. 1, ஜூன் 95).

## செய்முறை: 10 (வழலை முப்பு - கந்திதாரச் செந்தூரம்)

நெல்லிக்காய் கந்தி பலம் 1, வீரம் பலம் 1. இந்த இரண்டையும் கல்வத்தில் பொடித்து வெடியுப்புத் திராவகத்தைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமம் அரைத்து வில்லை செய்து உலர்த்தி, ஓட்டிலிட்டு மூடி மேல் ஓடு மூடி, ஏழு சீலை மண் செய்து உலர்த்தி ஒரு குழியில் நாலங்குல மணலைப் பரப்பி அதன்மேல் கவசத்தை வைத்து, அதன்மேல் நாலங்குலம் மணலைக் கொட்டிப் பரப்பிச்

கவசத்தின் சம பங்கெடை வறட்டியில் புடமிடவேண்டும். புடமிட்டு ஆறிய பின் எடுத்துக் கல்வத்திலிட்டுப் பொடித்து முன்போல் வெடியுப்புத் திராவகத்தைச் சிறுகச் சிறுக வார்த்து, அரைத்து முன்போலவே புடமிட்டு ஆறியபின் எடுத்துப் பார்க்கக் கந்தியானது வெளுத்துப் போய் இருக்கும். இதனைக் கல்வத்திலிட்டு இதனுடன் ஒரு பலம் கந்தகுத்தையும், தூய்மை செய்த நாலு பலம் அரிதாரத்தையும் பொடித்துச் சேர்த்து எடுக்க வேண்டும். அதில் சிறுகச் சிறுகப் பால்விட்டு நான்கு சாமம் அரைத்து வில்லை செய்து வெயிலில் உலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும்.

கிளிஞ்சல் சுண்ணாம்பு ஒரு படி, வெண்காரம். 4 பலம் நவச்சாரம் 4 பலம். இவ்விரண்டையும் பொடித்து வைத்துக் கொள்க. 1/2 படி சுண்ணாம்பை ஒரு பானையில் பரப்பி அதன்மேல் இரண்டு பலம் நவச்சாரப் பொடியைப் பரப்பி அதன்மேல் முன்பு சுத்தப்படுத்தி வைத்துள்ள பில்லையை வைத்து அதன் மேல் இரண்டு பலம் வெண்காரப் பொடியைப் பரப்பி அதன்மேல் 1/2 படி சுண்ணாம்பு நீரைக் கொட்டி அழுத்தி விட்டுப் பானை வாயை மண்தாலத்தால் மூடி, மூன்று சீலை மண் செய்து அடுப்பேற்றிக் கமலாக்கினியாக ஆறுமணி நேரம் எரித்து ஆறவிட்டு எடுக்கச் செந்தூரம் ஆகியிருக்கும்.

செம்பு 2 பங்கு மேற்படி செந்தூரம் 1 பங்கு, செம்பை உருக்கி உருக்கு முகத்தில் கொடுத்து ஆறின பின் எடுத்துச் சர உலையில் வைத்து ஊறி எடுக்கச் செம்பு தூய்மையாகிவிடும். வெள்ளி-8, மேற்படி செம்பு 2. இரண்டையும் சேர்த்து உருக்கி ஊதி தூய்மை செய்து, சமனெடை தங்கத்தைச் சேர்த்துருக்க இரசவாதப் பொன்னாகும்.

### தீரும்நோய்

மேற்படி செந்தூரத்தில் ஒரு குன்றி எடையைத் தேனில் அல்லது நெய்யில் கலந்து உட்கொண்டுவர சயம், காசம், எலிக்கடியினால் ஏற்படும் ஈளை, மேகவகைகள், குன்மவகைகள், வாதநோய்கள், சூலைநோய்கள், கிராணி வகைகள், கன்னப் புற்று பிடிப்பு நோய் ஆகியவை தீரும்.

### செய்முறை: 11 (வழலை முப்பு - குரு சுண்ணம்)

சுத்தியான நாலாங் காய்ச்சல் வெடியுப்பு பங்கு-4, பாகப்படுத்தின பூநீறு பங்கு 2 இவ்விரண்டையுஞ் சேர்த்து இரும்புச் சட்டியில் போட்டு அடுப்பேற்றித் தீயெரித்தால், இரண்டும் உருகி நீர்போலாகி இருக்கும் பிறகு இதனை மெதுவாக எரித்துக் கொண்டு வந்தால் இறுகிக் கெட்டியாகிவிடும். இதனைக் கீழே இறக்கி ஆறின

பின் உளியால் உடைத்து எடுக்க வேண்டும். பிறகு இதைக் கல்வத்திலிட்டு ஒரு பங்கு சுத்தி செய்த வீரத்தைச் சேர்த்துப் பொடித்து வெள்ளெருக்கம் பாலைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமம் அரைக்க வேண்டும். பின் அரைத்ததை வில்லை தட்டிக் காய வைத்து ஓட்டிலிட்டு மேலோடு மூடி ஏழு சீலைமண் செய்து இக்கவசத்தின் எடைக்குப் பத்துப் பங்கு எடை வறட்டியில் புடமிட வேண்டும். ஆறிய பின் எடுத்துப் பார்க்க, சுத்த வெண்மையான சுண்ணமாய் இருந்தால் பதம். அப்படியில்லாமல் கருத்திருந்தால் முன்போல் வெள்ளெருக்கன் பாலைவிட்டு முன்போலவே புடமிட வேண்டும். அப்போது சுத்த வெண்மையான சுண்ணம் ஆகி விடும். இதுவே வெடியுப்புச் சுண்ணம் என வழங்கப்படும்.

இந்தச் சுண்ணத்தினால் நெருப்பில் புகைந்து விடும்படியான தாளகம், இலிங்கம், இரசம், பூரம், வீரம், பாடாணம் முதலிய சரக்குகளை நெருப்புக்கு ஓடாமல் நிறுத்தி நீற்றிக் கொள்ளலாம். மேலும் இந்த வெடியுப்புச் சுண்ணத்தை அதிகக் கருங்காரச் சுண்ணமாக்கிக் கொள்ளலாம். இதனை இரசவாதத்திற்குப் பயன்படுத்தலாம். இந்தக் சுண்ணத்தினால் தாளகத்தை மருந்தாகச் செய்யலாம்.

### தாளக கருப்பு

சுத்தி செய்த தாளகம் ஒரு பங்கு, மேற்படி வெடியுப்புச் சுண்ணம் ஒரு பங்கு, பூவரசங்கொழுந்து அல்லது வெண்தாமரை பூவிதழ் எட்டுப்பங்கு.

### செய்முறை

முன் சுத்தி செய்த தாளகத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்துப் பிறகு சுண்ணத்தைச் சேர்த்து அரைத்துப் பிறகு இரண்டு சாமம் அரைத்துப் பூவரசங் கொழுந்து அல்லது வெண்தாமரையின் பூவிதழ் சேர்த்து மேலோடு மூடி ஐந்து சீலைமண் செய்து கவசத்தின் எடைக்கு எட்டுப்பங்கு எடை வறட்டியில் புடம்போட்டு ஆறிய பின் எடுத்துக் கொள்ள வேண்டும். இதன் நிறம் கருப்பாகத்தான் இருக்கும். ஆனால் இதனுடைய குணம் வியப்பைத் தரத்தக்கது. தாளகச் சுண்ணம், தாளகச் செந்தூரம் ஆகியவை பயன்படும் நோய்களுக்கு எல்லாம் இதனை அறிந்து மருத்துவர் பயன்படுத்தலாம்.

**அளவு:** குன்றியெடை 1/2, 1, 1-1/2.

**துணைமருந்து:** நெய், தேன், மதுரக்குடி நீர், சிறுகாஞ்சொறி வேர்க்குடிநீர், கூழ்பாண்டகிருதம் முதலியன.

### தீரும் நோய்

சுரம், முறைச்சுரங்கள், சயம், காசம், இருமல், இரைப்பு, மந்தார காசம், ஆறாத ரணங்கள், குட்ட நோய் முதலிய நோய்கள் தீரும் (வைத்திய முப்பு, சுவடி 4; ஓலை 6; ப.1. மே. 95).

## செய்முறை: 12 (வைத்திய முப்பு அல்லது குரு சுண்ணம்)

சுத்தி செய்த பூநீறு பங்கு 1, தாளிக்காத கற்சுண்ணாம்பு பங்கு 1, பனி நீர் அல்லது அல்லது சுத்த நீர் பங்கு 4. ஒரு மண்பாண்டத்தில் முன்னர் பூநீறைப் போட்டு, பிறகு கற்சுண்ணத்தைப் போட்டு ஒரு பங்கு நீர் விட்டு மூடி வைக்க வேண்டும். பத்து நிமிடம் சென்ற பின் மற்ற மூன்று பங்கு நீரையும் விட்டு நன்றாகக் கலக்கி அடுப்பின் மீதேற்றி சிறுதீயாக எரித்து இரண்டு கொதி வருகிற வரையில் கொதிக்க வைத்து எப்போதும் வெயிற்படும்படியான இடத்தில் வைத்து மூங்கில் தட்டால் மூடி வைக்க வேண்டும். மூன்றாம் நாள் வரையில் இதனை நாள்தோறும் காலையில் இரண்டொரு தடவை மூங்கிற் குச்சியால் கலக்கியும் வர வேண்டும். பிறகு கலக்க வேண்டியதில்லை. நாலாம் நாள் மாலையில் பார்த்தால் அந்த நீரின் மீது நுரையைப் போல் ஒரு விதச் சத்து படிந்திருக்கும். அதனை வழிப்பாக பனையோலைத் துண்டினால் அல்லது தந்தப் பலகையால் வழித்து வேறொரு பீங்கான் பாத்திரத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். இவ்விதம் ஒரு வாரம் அல்லது பத்து நாள் வரையில் அல்லது அதில் சத்துப் பூத்துக் கொண்டிருக்கிற வரையில் முன்போல் வழித்தெடுத்து வெயிலில் உலர்த்திக் கொள்ள வேண்டும். இதுவே குருசுண்ணம். இதற்கு **வைத்திய முப்பு** என்று மறுபெயருமுண்டு.

### இதன் பயன்

இச்சுண்ணத்தை, அதனதன் பிரமாணத்திற்குத் தகுந்த அளவு வேறு லேகியங்கள், சூரணங்கள், தயிலங்கள் ஆகியவற்றில் கலந்து பயன்படுத்துவதால் அந்தந்த மருந்துகளிற் சொல்லிய குணங்களைத் தவறாமல் கொடுக்கும். வேறு பற்பங்கள், செந்தூரங்கள் ஆகியவற்றுடன் சேர்த்தால் மிகுந்த சிறப்பான குணத்தைத் தரும். இதன் வழி பாடாணம், வீரம், பூரம் முதலிய சரக்குகளை நெருப்பிற்கு ஓடாமல் நிறுத்தி நீற்றிக் கொள்ளலாம் (வைத்திய முப்பு, சுவடி 2: ஓலை. 4, பக். 2-3, 29-3-93).

### முப்பு செய்முறை பற்றிய கருத்துகள்

சித்தர்கள் கூறிய முப்பு செய்முறைகளைச் சரியாகவும் தவறாகவும் பின்பற்றியவர்கள் பலராவர். அம்முறைகள் வழி அறியலாகும் செய்திகள் இங்குத் தரப்படுகின்றன.

1. சவுட்டு மண்ணில் பூக்கும் பொருளைப் பூநீறு என்று கருதி அதை எடுத்துப் பனிநீரால் சிலரும், குழந்தைகளின் சிறுநீரால் சிலரும் கரைத்து வடித்து உலர்த்தி தசதீட்சை செய்து அதனை முப்பு என்பர்.

2. கோவானூருக்குச் சென்று இரவு கண்விழித்து விடியற் காலையில் அங்குப் பூக்கும் சவுட்டு மண்ணை முப்பு என்பர்.

3. சிலர் தங்கள் மலத்தையும், சிறுநீரையும் பிடித்துக் கலந்து உட்கொள்வது கற்பமருந்தென்பர். சிறுநீரை வெயிலில் காயவைத்துப் படியும் உப்பை முப்பென்பர்.

4. சவுட்டு பூமியில் தோண்டி எடுக்கக் கூடிய சுண்ணாம்புக்கல்லை, **அண்டக்கல்** என்றும் கூறுவர். அக்கல்லைத் தூள் செய்து தண்ணீரில் அல்லது மழைநீரில் கரைத்துத் தெளிவித்துக் காய்ச்சி அந்தச் சுண்ணாம்பை முப்பு என்று கூறுவர். இக்கற்சுண்ணாம்பில் தண்ணீர் ஊற்றிக் கலக்கி, அதன் தெளிவு நீரின் மேல் படரும் உப்புதான் முப்பு என்பர்.

முட்டைக்கு அண்டம் என்ற பரிபாசைச் சொல் உண்டு. அதிலுள்ள வெள்ளைக் கரு சந்திரன் என்றும், மஞ்சட் கரு சூரியன் என்றும் கூறப்படுவதால் இதற்கு இப்பெயர் உண்டாயிற்று என்பர். மயில் முட்டையை அண்டம் என நினைத்து முப்பு செய்தவர்களும் உண்டு.

5. குழந்தை மண்டை ஓட்டைக் கொண்டு வந்து உரலில் இடித்துத் தண்ணீரில் கலக்கித் தெளிவிறுத்துச் சூரியனில் காய்ச்சி எடுத்த உப்பே முப்பு.

6. பெண்கள் பிரசவிக்கும் போது வெளிவரும் கசடு நீரான பனிக்குடநீரைச் சவுட்டு மண்ணில் கலக்கித் தெளிவிறுத்துக் காய்ச்சி இதில் வரும் உப்பே முப்பு.

7. கும்பிடுகல் சிப்பி எனும் பூச்சிகளைக் கொண்டு வந்து அவற்றின் சிப்பிகளில் தமர் அடித்து நவச்சாரம் போட்டு வைத்து அப்பூச்சிகள் இறந்து அவற்றிலிருந்து வரும் நீரில் வெடியுப்புச் சேர்த்துக் காரசார செயநீர் என்று பயன்படுத்துகின்றனர். ஆயின் முப்பு என்பது இந்தச் சிப்பியல்ல.

8. சோற்றுப்பைப் பனிநீரில் கரைத்து வடிகட்டி, இரவியில் காய வைத்து, பத்து முறை இப்படிக் காய்ச்சி வரும் உப்பே முப்பு. கல்லுப்பு என்ற பரிபாசைச் சொல்லிற்குச் சோற்றுப்பு என்று பொருள் கொண்டமையே இதற்குக் காரணம்.

9. கருக்குருவை அரிசியில் தண்ணீர்விட்டு வேகவைத்து அதைப் பானையில் ஏடுகட்டி இரவியில் வைத்து ஆறு மாதங்கள் வரை புளிக்க வைக்கக் கிடைக்கும் காடி நீரே கற்பநீர் என்பர். இது மருத்துவத்திற்கு உதவலாம். ஆயின் கற்ப மருந்து என்பது ஏற்புடைத்தன்று.

10. கல்லுப்பைக் கடல் நுரை என்றும், இராமேசுவரம் கல் என்றும் கூறுவர். இக் கல்லுப்பை ஊதினால் சுண்ணாம்பாகும். இந்தச் சுண்ணத்தை முப்பு என்பர். ஆயின் இது வாதத்துக்கோ கற்பத்துக்கோ பயன்படக்கூடிய முப்பு அன்று. மேற்சொன்ன கல்லுப்பு தண்ணீரில் கரைந்து விடும். ஆயின் சித்தர் சொல்லும் கல்லுப்பு தண்ணீரில் கரையாது. இச்சுண்ணத்துடன் சாரம் சேர்த்துச் செயநீர் எடுத்தால் சில பாடாணங்களை நீற்றலாம். அந்த அளவிற்குத்தான் இது பயன்படும்.

11. குருவண்டு என்ற பரிபாசைப் பெயரும் முப்புவிற்கு உண்டு. குருவண்டு என்பது ஒரு பூச்சி. அதற்கு ஆறுபுள்ளிகள் மேலே இருக்கும் என்று சிலர் கூறுவர். இவர்கள் இப்பூச்சியைப் பிடித்து இடித்துக் குருமருந்து செய்வர். பூச்சிவண்டல்ல என்பதை அகத்தியரின், **பாரப்பா பலசீவ செந்துமில்லை** என்ற அடி உணர்த்துகிறது.

12. சவுக்காரம் என்னும் சோப்பைக் கடையில் வாங்கி அதன் எண்ணெயைக் கழட்டி முப்பு என்பர்.

மேற்கூறிய முறைகள் தவறானவை என்று வி. பலராமையா (முப்பு குரு. பக். 43-47) கூறுகிறார்.

அனுபவத்தில் முப்புவைச் சரியாகச் செய்து பயன்படுத்தி வந்தவர்கள் பற்றிய பின்வரும் சில குறிப்புகளும் நமக்குக் கிடைக்கின்றன. இம்முப்புகளின் தரத்தில் குறைவு இருக்கலாமே ஒழிய தவறான செய்முறை என்று உறுதியாகக் கூறமுடியாது.

## பரம்பரை மருத்துவர்களின் முப்பு பற்றிய அனுபவம்

மருத்துவரும், ஓய்வு பெற்ற நீதிபதியுமான வி. பலராமய்யா உடல்நிலை சரியில்லாத போது, ஓய்வுக்காகச் சென்னை, மயிலாப்பூரில் தங்கியிருந்தார். அவரது பக்கத்து வீட்டில் தங்கியிருந்த ஒரு சாமியார், ஒரு சிறு குடுவையில் பாதரசத்தை ஊற்றி மருந்தைப் போட்டுத் தங்கமாக ஆக்கிக் காட்டியிருக்கிறார். அச்சாமியார் ஏழையாகவே பாண்டியில் முப்பது ஆண்டு காலம் வாழ்ந்தார் என்பது குறிப்பிடத்தக்கது. ஏனென்றால் அவருடைய குறிக்கோள் தங்கம்

செய்வதன்று. "கற்ப சாதனை செய்ய வேண்டுமென்ற ஆர்வத்தில் தான் இம் மருந்தைக் கண்டுபிடித்தேன் என்றும், ஆனால் 60 வயதுக்குப்பின் தான் இம்மருந்தை உட்கொள்ள வேண்டும் என்ற கருத்து தன்னுள் புகுந்ததென்றும், அதிலும் சில இடையூறுகள் நேர்ந்ததென்றும் அவர் பலராமய்யாவிடம் சிலமுறை சொல்லி வந்திருக்கிறார் (முப்பு குரு, ப. 6).

25 ஆண்டுகளுக்கு முன் சென்னையில் இருந்த கிருஷ்ணசாமி நாயுடு ஒரு சிடிகைப் பொடியைத் தூவி நூறு சவரன் எடையுள்ள தூய தங்கத்தைச் செய்வதைப் பலராமய்யா நேரில் கண்டிருக்கிறார். இந்நாயுடு இந்தக் கலையைப் பலர் அறியக் காட்டி வந்தார். ஒரு முறை ஒரு சமீன்தாருக்குச் செய்து காட்டினார். இவர் தங்கம் செய்யும் பற்பத்தைத் தன் ஜிப்பா பாக்கெட்டில் வைத்து இருப்பார். நாயுடு கார் விபத்தில் இறந்து போனார். இச்சமீன்தார் தான், பற்பத்தைக் கைப்பற்ற இவ்வாறு செய்தார் என்பது பின்னர் தெரிய வந்தது என்கிறார் பலராமையா (மேற்படி 42, 43).

திருப்பாதிரிப்புலியூரில் (கடலூரில்) தங்கம் செய்யும் ஒரு சாமியார் இருந்தார். இவரது சீடர்கள் சிலர் இவரை இரசவாத முறையைச் சொல்லிக் கொடுக்கும்படி வற்புறுத்தினர். இவர் சாக்குப் போக்குச் சொல்லி வந்ததால் அவரை உயிரோடு கட்டி வாயில் துணியடைத்துச் சமாதி செய்துவிட்டனர். ஆகையால் இக்கலைக்கு உயிர்க்கொல்லி என்ற பெயருமுண்டு.

முப்பு தயாரித்துப் பற்பம், லேகியம் போன்ற மருந்துகளுடன் சேர்த்துப் பயன்படுத்தி வருவதாகக் கூறும் பெரிய குளத்தைச் சேர்ந்த மருத்துவர் போ. பார்த்திபன் கூறியவற்றைக் கொண்டு பின்வரும் செய்திகளைப் பெறமுடிந்தது.

முப்பு தொடர்பான அகத்தியரின் பல சுவடிகளைப் படித்து ஆய்ந்து முப்பு செய்து பயன்படுத்தி வந்தவர் காலஞ்சென்ற டாக்டர் மாண்டயன் குமார். இம்முப்பு செய்முறையினை இவரிடமிருந்து கற்றுக் கொண்டு வேறு பல மருத்துவர்களும் செய்து வந்திருக்கின்றனர். அவர்களுள் ஒருவரே போ. பார்த்திபன்.

### பயன்பாட்டில் உள்ள மாண்டயன் குமாரின் முப்பு செய்முறை

களர்நிலத்தில் விளையக் கூடிய உப்பு பூநீறு. இந்தப் பூநீறே சிவன் உப்பு என்று அழைக்கப்படுகிறது. விஷ்ணு உப்பு என்பது கடலுக்குள் விளையக் கூடிய ஒருவகையான பச்சை நிற உப்பாகும்.

பிரம உப்பு என்பது கடலினுடைய கரைகளில் அதாவது நீருக்கும், நிலத்திற்கும் இடைப்பட்ட பகுதியில் உருவாகக் கூடிய ஒரு வகை உப்பு.

இம் மூன்று உப்புகளையும் சமபங்கு எடுத்து அமுரி விட்டு (துருசு வைத்து எடுக்கப்பட்ட வாழைத்தண்டின் சாறு) நன்றாக அரைத்து வில்லை தட்டி மருந்தின் அளவுக்குத் தகுந்த புடம் போட்டு எடுக்கக் கிடைப்பது சுண்ணமாகும். சுண்ணம் ஆகவில்லையெனில் ஆகும் வரை புடமிட வேண்டும். இச்சுண்ணத்தை நெடுநாட்கள் வைத்துக் கொள்ளலாம். உப்பு போல இதன் தன்மையும் கெடாது.

100 கிராம் மருந்துக்கு 2 கிராமிலிருந்து 5 கிராம் வரை முப்புவைக் கலந்து கொடுக்க வேண்டும். சூரணம், லேகியம் போன்ற மூலிகை மருந்துகளுக்கு 5 கிராம் முதல் 8 கிராம் வரை கூடக் கலக்கலாம்.

## கைமுறை நோட்டுக்குறிப்பு

பூநீறு, வெடியுப்பு, சோற்றுப்பு, கல்லுப்பு, இந்துப்பு இந்த ஐந்தையும் ஒவ்வொரு பலமாக எடுத்து, பனிநீர் காய்ச்சி அது சுண்ணமாகும் வரை வறுக்கவும். இது செந்தூரமாக வரும். இதைப் பத்திரப்படுத்திக் கொண்டால் சரக்குகளைக் கட்டவும், நீத்தவும் உதவும். தாம்பிரத்தை உருக்கி 4க்கு 1 செந்தூரம் கொடுக்கத் தாம்பிரம் சுத்தியாகும். இந்த எடைக்குத் தாய் சேர்க்க வயது 8 ஆகும். (முப்பு ஆய்வு இதழ், சுவடி:1, ஓலை:8, ப.3. 27-7-92).

## சரக்குகளின் பிரிப்பு முறை

சித்தர் நூல்களில் முப்பு தயாரிப்பு பற்றிப் பலவாறு கூறப்படுகிறது. இம்முப்புவைச் செந்தூரம் பற்பம் போன்றவற்றிற்குப் பயன்படுத்துகின்றனர். எனவே இவற்றிற்குப் பயன்படும் சரக்குகள் எங்ஙனம் வகைப்படுத்தப்படுகின்றன, செந்தூர, பற்ப, சுண்ணம் எப்படித் தயாரிக்கப்படுகின்றன போன்ற அடிப்படைச் செய்திகள் இங்கு விளக்கம் பெறுகின்றன. இப்பகுதியானது உள்ளே கூறப்படும் செய்திகளின் தெளிவாக, சாரமாக அமைக்கப்பட்டுள்ளது.இங்குச் சொல்லப்பட்டுள்ள மருந்துகள் அனைத்திலும் முப்பு சேர்க்கப்படும் போது அதன் ஆற்றல் மிகுதியான நிறைவான பலனைத் தரும்.

ஒவ்வொரு சரக்குக்கும் ஒருவிதமான தன்மை இருக்கிறது. இந்தத் தன்மையை வைத்துத்தான் சரக்குகளை இனம் பிரித்து இருக்கின்றனர். நீர், நெருப்பு, காற்று, மண், விண் ஆகியவற்றை முதன்மையாக வைத்துத்தான் இவை பிரிக்கப்படுகின்றன. உலோகம் நெருப்பில் உருகும். நீரில் கரையாது. எனவே உலோகங்களை உலோக

வகையாகப் பிரித்தனர். தண்ணீரில் கரைந்து, நெருப்பில் வெடிக்கும் உப்பை, உப்பு வகையாகப் பிரித்தனர். தண்ணீரில் கரையாது நெருப்பிற்குப் புகையும் தன்மையுள்ளதைப் பாடாண வகையாகப் பிரித்தனர். நெருப்பிலும், நீரிலும் போட்டால் அப்படியே இருப்பதை உபரச (நவரத்தினங்கள்) மாகப் பிரித்தனர்.

### காரசார சரக்குகள்

காரம் 13, சாரம் 12. இந்தக் காரசாரமென்பது 25 உப்புகள். விளைவு வகைகள் 32. கூட்டுச் சரக்குகள் 32. ஆக 64 பாடாணங்கள். உபசரக்குகள் 120. மொத்தம் 209 சரக்குகள்.

காரசாரம், அண்டம், பிண்டம் ஆகியவற்றின் சிறப்பினைப் பின்வரும் பாடல் காட்டுகின்றது.

**அகிலத்தின் அண்டபிண்டம் அதுவாகு நாதவிந்து**
**சகலத் தினுக்குமது தானாதி - புகலும்**
**அண்டபிண்ட நாதவிந்து ஆகுங் காரசாரம்**
**கண்டவர்க ளேயோ கிகள்**

### சரக்குகளின் வகைகள்

இந்தச் சரக்குகளைப் பற்பம், செந்தூரம், சுண்ணம் எனப் பல வகையாகப் பிரிக்கின்றனர். இவை ஒன்றைவிட ஒன்று வீரியம் மிக்கவை. அதாவது பற்பத்தை விடச் செந்தூரமும், செந்தூரத்தை விடச் சுண்ணமும் வீரியம் மிக்கவை. எனவே பற்பத்தை 60 ஆண்டுகள் பயன்படுத்த முடியுமென்றால், செந்தூரத்தை 100 முதல் 300 ஆண்டுகள் வரையும், சுண்ணத்தை 500 முதல் 600 ஆண்டுகள் வரையும் பயன்படுத்த முடியும். இன்னும் இது போன்ற பல மருந்துகள் பல ஆண்டுகள் நிலைபெற்று இருந்து வருகின்றன. காட்டாகப் பழநி ஆண்டவர் நவபாசாணச் சிலையைக் குறிப்பிடலாம்.

### பற்பம்

ஓர் உலோகத்தைப் பற்பமாக்குவதற்குத் தாவர வகைகளும் மற்ற சரக்குகளும் பயன்படுகின்றன. காரீயத்தை உருக்கி மருதம் பட்டையினால் கிண்டிக் கொண்டே வந்தால் காரீயம் பற்பமாகும். ஓர் உலோகத்தைப் பற்பமாக்கியபின் அதனைத் தண்ணீரில் போட்டால் நீரின் மேல் மூழ்கினால் சரியான முறையில் உலோகம் பற்பமாக்கப்பட்டிருக்கிறது என அறியலாம். இங்ஙனம் செந்தூரம், சுண்ணம் ஆகியவற்றையும் சோதித்தறிய வழிமுறைகள் பல உள்ளன.

## செந்தூரம்

தாளகம், துருசு, கந்தகம், மனோசிலை, லிங்கம் போன்ற சரக்குகள் செந்தூரம் செய்யப் பயன்படுகின்றன. சோற்றுப்பைச் சுத்தி செய்து 4க்கு ஒன்று என்ற அளவில் மேற்கண்ட சரக்குகளில் ஏதாவது ஒன்றை அல்லது அனைத்தையும் சேர்த்து அரைத்துக் காய வைத்துப் புடமிடச் சிவப்பான செந்தூரம் கிடைக்கும்.

## சுண்ணம்

வீரம், பூரம், குருவண்டு, உரம், சூதம் போன்ற பரிபாசைச் சரக்குகள் சுண்ணம் செய்யப் பயன்படுகின்றன. சுண்ணம் செய்ய வேண்டிய சரக்கை மேற்சொன்னவாறு சுத்தி செய்து, அரைத்துப் புடமிடச் சுண்ணம் கிடைக்கும். இச்சுண்ணம் ஆதி, சுழி, ஜீரோ, குரு, நீறு, பற்பம் போன்ற பல பெயர்களில் அழைக்கப்படுகிறது.

## சத்து

மேற்சொன்னவாறு தயாரிக்கப்பட்ட சுண்ணத்தோடு வெள்ளைப் பாடாணம், வெங்காரம், காட்டாமணக்குப் பால் போன்ற சரக்குகளைச் சேர்த்து அரைத்துக் காய வைத்துப் புடமிடக் கிடைக்கும் பொருள் சத்து எனப்படும். ஒவ்வொரு சத்துக்கும் ஒரு தன்மை உண்டு. அதாவது உப்பு என்றால் நெருப்பில் வெடிக்கும் தன்மையுடையது. ஆனால் அது சத்தாக மாறிய பின் நெருப்பில் வெடிக்காமல், நெருப்பிற்கு உருகி மணி போல் திரண்டு நிற்கும்.

## செயநீர்

மேற்சொன்ன முறையில் தயாரித்த சுண்ணத்தை எடுத்துச் சம அளவில் நவச்சாரம் சேர்த்துப் பனியில் வைத்து விட்டால் நீராகி விடும். இதற்குச் செயநீர் என்று பெயர். இப்படிப் பலவகையான செயநீர் வகைகள் உண்டு. செயநீரானது மருத்துவத்தில் பல பாகங்களுக்கும் கொண்டு செல்லப்படுகிறது. இதனை மூன்று நாட்கள் அனுபானத்தோடு உட்கொண்டால் உடல் காயகற்பமாகும். மேலும் வெடியுப்புச் செயநீரைப் போர்க்காலத்தில் ஈட்டி, வில், அம்பு போன்ற போர்க்கருவிகளில் தடவுவதற்குப் பயன்படுத்தியிருக்கின்றனர்.

## திராவகம்

காரசார உப்புகளைச் சேர்த்துத் தண்ணீரில் கலக்கி அதன் தெளிவை இறுத்து, வாலை அடுப்பில் வைத்துக் காய்ச்சி, குளிர வைத்துக் கிடைக்கும் நீர் திராவகம் அல்லது தீநீர் எனப்படும்.

இத்திராவகம் உலோகங்களைச் சுண்ணம், பற்பம் செய்வதற்கும், சரக்குகளைச் சுத்தி செய்வதற்கும் பயன்படுகிறது.

## திராவகத்தின் பெயர்கள்

சொல்லவே யிந்தநீர்க்குப் பேரே தென்னில்
சிறப்பாக அண்டநீர் வாலை நீராம்
நல்லிடவே வாய்நீராம் குமரி நீராம்
நலமான ஆகாச கங்கை நீராம்
வல்லிடவே யிந்நீரை வாங்கிக் கொண்டு
வளமான வீரரச பற்பத் திட்டு
எல்லிடவே மிதப்பாக விட்டுக் கேளு
இதமாகப் பீங்கானில் வைத்துக் கொள்ளே.

## சுத்தி செய்தல் (தூய்மையாக்குதல்)

சுண்ணமாகவோ, பற்பமாகவோ, செந்தூரமாகவோ செய்வதற்குமுன் அந்தச் சரக்குகளை முறையாகச் சுத்தி செய்ய வேண்டும். அந்த வகையில் மருந்துப் பொருட்களிலுள்ள அழுக்குகளை எண்ணெய்களை நீக்கித் தூய்மையாக்குதலே சுத்தி செய்தல் எனப்படுகிறது.

### கட்டு

ஒன்றினுடைய தன்மையினை மாற்றி இறுகச் செய்வது கட்டு எனப்படும். அதாவது உப்பு, உலோகம், பாடாணம் ஆகியவற்றைக் கட்டிவிட்டால் தண்ணீரில் கரையும் தன்மையுடைய உப்பு தண்ணீரில் கரையாது. நெருப்புக்கு உருகும் உலோகம் நெருப்புக்கு உருகாது, நெருப்புக்குப் புகையும் பாடாணம் நெருப்புக்குப் புகையாது. பாடாணம் போன்றவற்றைத் தூய்மை செய்து, அதன் தரத்தை உயர்த்திக் கட்டுப்படுத்தி மருந்தாக்குவது. நீர், நெருப்பு காற்று ஆகியவற்றுக்கு அசையாமல் தன்நிலை மாறாமல் கட்டுப்படுத்துவது கட்டு ஆகும்.

இங்ஙனம் கட்டப்படும் போது இச்சரக்குகளின் அடர்த்தி அதிகப் படுத்தப்படுகிறது. இதனால் இவற்றை நீண்ட நாட்களுக்கு வைத்துப் பயன்படுத்த முடியும்.

### அண்டக்கல்

ஒரு காலத்தில் கடலில் இருந்து உயிரினங்கள் பூமியின் மாறுபாடு காரணமாக உறைந்து கல்லாகி இருக்கின்றன. அம்மாதிரி இடங்களில் கிடைக்கக் கூடிய கற்களை அண்டக்கல் (பிளாசில்),

வழலை, பிரமகற்பம் என்று வழங்குவர். இது சாதாரணக்கல் போல் இருக்கும். இதனை உடைத்தால் உட்பகுதியில் வெண்மை நிறத்தில் படிகம் போன்ற பல கீற்றுகள் ஒளி ஊடுருவும் தன்மையுடன் இருக்கும். இந்த அண்டக்கல்லில் இரசம், கந்தகம், உப்பு என்ற மூன்றும் இருக்கிறது. அதாவது இம்மூன்றும் சேர்ந்து அண்டக்கல்லாக உருவாகியிருக்கிறது. இது மூன்று விதமான பொருள்களின் கூட்டாக இருப்பதால் முப்பு என்று சொல்லப்பட்டது.

மேலே இருந்து கிடைக்கும் சத்துப் பொருளுக்குப் பூநீறு என்று பெயர். உள் ஆழத்தில் இருந்து எடுக்கப்படும் பொருளுக்கு அண்டக்கல் என்று பெயர். அதில் உறைந்திருக்கும் நீர்த்தன்மையைப் பிரித்தெடுத்தால் அதற்கு அமுரி என்று பெயர். இதன்படி பார்த்தால் கடல்நீரை அமுரி என்று கொள்ளலாம். இதனைப் பூமியில் பாய்ச்சி மேலே நீராகப் பூத்து வருவதைப் பூநீறு என்று கொள்ளலாம். அதற்குக் கீழே பலகாலம் சோற்றுப்பு படிந்து ஆழத்தில் கல்லாய் உறைந்து கிடப்பதை அண்டக்கல் என்று கொள்ளலாம்.

அண்டக்கல்லின் தோற்றம் குறித்துப் பலவாறான கருத்துகள் கிடைக்கின்றன. இதற்குக் காரணம் அண்டக்கல், பூநீறு, அமுரி போன்றவை பற்றிப் பரிபாசையாகச் சித்தர் நூல்களில் பலவாறாகக் கூறப்பட்டுள்ளமையே.

### காரசார லவண வகைகள்

மரம், செடி, கொடி, புல் ஆகியவற்றில் அடங்கிய வேர், பட்டை, கட்டை, இரசம், இலை, பூ, விதை ஆகியவை மூலவர்க்கம் எனப்படும்.

மக்கள், விலங்கு, புல், ஊர்வன, நீர்வாழ்வன ஆகியன சீவவர்க்கம் எனப்படும்.

மேற்கண்ட இரண்டு வர்க்கங்களுக்கு ஆதாரமாக உள்ள உலோகம், பாடாணம், நவரத்தினம், காரசார லவணம், உபரசம் ஆகியவற்றைக் குறிப்பிடுவது தாதுவர்க்கமாகும். இவற்றின் உற்பத்திக் குணங்களையும் செயல்பயன்களையும் அறிதல் முப்பு செய்முறைக்குத் தேவையானதாகும்.

வழலை, பூநீறு, நவச்சாரம், எவாச்சாரம், வளையலுப்பு, கந்தி உப்பு, வெங்காரம், ஏகம்பச்சாரம், கடல்நுரை, அமுரி உப்பு, கற்பூரம், பச்சைக் கற்பூரம், சத்திசாரம், வெடியுப்பு, மீன் அம்பர், பொன் அம்பர், சவுட்டுப்பு, திலாலவணம், இந்துப்பு, சிந்துப்பு, கல்லுப்பு, காசிசாரம், பிடா லவணம், அட்டுப்பு, சீனம் ஆகிய 25ம் காரசார லவண வகைகளென்று கூறப்படுகின்றன.

இவை இயற்கையாகக் கிடைப்பதும் உண்டு. இவற்றை இயற்கை முறையில் எடுப்பது கடினம் என்ற நிலைகளில் சில சரக்குகளைச் சேர்த்து இயற்கை முறையில் கிடைப்பதற்கு இணையான காரசார லவணங்களை செயற்கை முறையில் தயாரித்துக் கொள்வர். இவை ஒவ்வொன்றின் செய்முறை விளக்கமும் ஒன்றிற்கு மேற்பட்ட முறைகளைப் பெற்று விளங்குகின்றன. அவையனைத்தையும் விரிவு கருதித் தர இயலாது என்பதால் ஒரு காரசார லவணத்திற்கு ஒரு செய்முறை இங்குத் தரப்படுகிறது. இம்முறையில் மட்டுமே இதனைப் பெறுதல் இயலும் என்பது பொருளல்ல.

முப்பு தயாரிப்பில் அண்டக்கல், அமுரி, பூநீறு ஆகியவை மிகவும் முக்கியம் என்பதாலும் அவை எது எது என்பது பற்றிய கருத்து வேறுபாடு இருப்பதாலும், அவை சற்று விரிவாகப் பேசப்படுகின்றன. காரசாரங்களைப் பற்றிய விரிவினைச் சித்தர் நூல்களின் வழி கண்டு தெளியவும். சரக்குகளை முன்பெல்லாம் வைப்பு வைத்து அவரவர்களே தயாரித்தார்கள். இப்பொழுது பலரும் கடைகளில் கிடைக்கக் கூடிய சரக்குகளை வைத்துச் செய்கின்றார்கள். சுத்தமானதை, தரமானதை வைத்துச் செய்யும்போது தான் கொடிய நோய்களும் தீரும் அளவிற்குத் தரமான செய்முறை மருந்து கிடைக்கும்.

### *1. அண்டக்கல் வழலையென்னும் சுண்ணக்கல்* **(Calcium Carbonate)**

வழலை அறிந்தால் வகைதுகை வேண்டாம்
பழைய நூல் வேண்டாம் படிக்கவும் வேண்டாம்
தழவிடு பஞ்சம் தரிக்குமோ பூமியில் (ரோமரிஷி பரிபாஷை)

பூநீறு உற்பத்தியாகின்ற இடத்தில் மார்கழி மாதம் பௌர்ணமிக்குப் பின் பள்ளந்தோண்டி அடியில் சோதித்துப் பார்க்க உருண்டை வடிவமான கற்கள் கிடைக்கும். இதனை அண்டக்கல் என்றும், எட்டாம் மாதத்தின் பிண்டம் என்றும், வழலை என்றும் சுண்ணம் என்றும் பெரியோர் கூறுவர். புதிய கர்ப்பமாகிய கற்கள் உருண்டை வடிவத்தில் சற்று நீளமாகவும், பளுவாகவும், பளிங்கு நிறத்தை உடையதாகவும் தோன்றும். இவையே சிறந்த கற்கள். கட்டையாகவும், ஒழுங்கற்ற வடிவத்துடனும், ஓட்டைகள் விழுந்தும் இருப்பின் அதனை ஓடக்கல் என்று கூறுவர். இப்படியிருப்பின் இதன் சக்தியானது ஒரு காலத்தில் வெளியாகி விட்டது என்று அறிய வேண்டும்.

மேற்கூறிய சுத்தமான கற்களைக் கொண்டு வந்து மாவுபோல் இடித்துச் சீலையில் முடிச்சில் கட்டி, வெடியுப்பையும் பூநீறையும்

பனி சலத்தில் கரைத்து வடிகட்டி எடுத்த சலத்தில் கழிகட்டி எரித்தெடுக்கக் காரமிகும். இதைச் சாரச் செயநீர் விட்டு அரைத்து வில்லை தட்டிக் காய வைத்து, மூசையில் இட்டுக் கண்ணார் உலையில் வைத்து மூசை அழுக ஊதி எடுத்து, ஆறவிட்டுப் பார்க்கக் கடுங்காரம் சுண்ணமாகும்.

இந்தச் சுண்ணத்தில் (மஞ்சள் புகை அடங்களாகிய சத்து) பூரணமாக அடங்கி இருக்கும். இதுவே வாதத் தொழிலில் அதிக நன்மை பயக்கும். அப்படி அல்லாத கற்களைச் சுண்ணம் செய்தால் அமில உப்பாகிறது. இது மேற்கூறிய சுண்ணத்தைப்போல் குணம் கொடுக்காது.

கற்சுண்ணத்தில் 4 மடங்கு பனிசலம் விட்டுக் கரைத்து 3 நாள் வரையிலும் அடிக்கடி கலக்கி 2, 3 நாள் அசையாமல் வைத்துத் தெளிந்த நீரை வடித்து எடுக்கக் கடுங்காரச் சுண்ண நீராகும். இதில் வீரம், கற்பூரம் கூட்டி வைத்துக் கொள்ள சரக்குகளுக்குக் காரமேற்ற உயர்தரமான செயநீராகும். கற்சுண்ணம் - ஆண் சரக்கு. இதற்குப் பெண் சரக்கு - கல்லுப்பு. கற்சுண்ணம் பெண் சரக்கு. இதற்கு ஆண் சரக்கு கடல்நுரை.

இது எவ்வாறு எனில் சூரியனுக்குச் சந்திரன் மனைவியாய் இருக்க, அச்சந்திரன் அல்லிபுஷ்பத்திற்கு நாயகனான வேதாந்த இரகசியத்தைப் பொருந்தும் எனக் கருதலாம் (முப்பு ஆய்வு, சுவடி: 1. ஓலை: 10, ப. 3, 27-9-92).

## அண்டக்கல் அல்லது ஞானிக்கல் பற்றிய மேனாட்டார் கருத்து

### அரேபிய நாட்டு ஞானி

பூமி, கடல், வீடு, கடைத்தெரு, நகர், வழிபாதை என எல்லா இடங்களிலும் உள்ள அண்டக்கல் ஒரு கல்லின் உட்பகுதியில் மறைக்கப்பட்டிருக்கிறது. இருப்பினும் நாம் நாளும் பார்க்கக் கூடிய கல்தான்.

### தாமஸ்வாகன்

இது இலையையும், கனியையும் கொடுக்கக்கூடிய ஒரு தாவரப் பொருள். நம் கண்களுக்கு அடிக்கடி காணப்படுகின்ற, கால்களில் மிதிபடுகின்ற பொருள். நமக்குக் கிடைத்தாலும் அதனைப் பயனற்ற பொருளாகச் செய்து விடுகிறோம். இது உலோகத்தின் உள்ளே மறைக்கப்பட்டிருக்கிறது. அதில் வெண்மையாகவும், சிவப்பாகவும்

இரண்டு கற்கள் இருக்கின்றன. இரண்டும் ஒன்று பட்டுச் சமைக்கப்பட்டிருக்கிறது.

பேசில்வாலண்டை

அந்தக் கல் தசையுள்ள பொருளல்ல. ஆனால் அதிலிருந்து நெருப்பையும், திராவகத்தையும் வடிக்கலாம்.

பெரிசியன் இரசவாதி ரசிடிபி

அக்கல்லின் மேல்பாகம் குளிர்ந்த, ஈரமான தன்மையுடையது. ஆனால் அதன் உட்பாகம் காய்ந்ததாகவும், நெருப்புத் தன்மையுடையதாகவும் இருக்கிறது.

ரோடியன்

வெண்மையான இத்திராவகம் சிவப்பாக உருப்பெறுகிறது. நகரக்கூடியது. காற்றுத் தன்மையும் ஆவியாகும் தன்மையும் உடையது. அதன் உட்பகுதியில் ஒரு சக்தியும், வெளிப்புறத்தில் ஒரு சக்தியும் உள்ளன.

ரோசி குருசியன்

தண்ணீராக மாறக் கூடியது. மற்ற பொருள்களில் ஊடுருவிப் பாயக் கூடியதாக இருந்தாலும். அது எங்கும் கட்டியப் பொருளாக இருக்கிறது. அற்பப் பொருள். வெறுக்கக் கூடியது. உதாசீனப்படுத்தப்படுவது.

பேரறிஞர் பராசல்ஸ்

பூதங்களில் ஒரு குழந்தை. பரிசுத்தமான கன்னிப் பெண்ணான இது அவள் கணவனான நெருப்புடன் உறவு பெற்றுக் கருவடைகிறாள். அவளும் ஒரு நெருப்பே. மிருக குணத்தை, தாவர குணத்தை, கனிம இனத்தைச் சேர்ந்தவளில்லை. அவள் இதயத்திலிருந்து வெண்மையான ஒரு தண்ணீரையும் சிறப்பான இரத்தத்தையும் வடிக்கலாம். அவள் ஒன்றே. ஆனால் மூன்று. பிறகு நான்கு ஐந்து பூதமாக உருப்பெறுகிறாள். அது காற்றுடன் சேர்ந்த பொருள். கண்ட கண்ட இடங்களில் காணக் கூடியது. இது ஓர் அற்பக்கல்.

ஆம்நெல்

இந்த ஞானிக்கல் என்பது தண்ணீரே உறைந்து சூரியன், சந்திரனாக உருப்பெற்றது. அந்தக் கல் வெண்மை, சிவப்பு என

இரண்டாக உள்ளது. இரண்டும் ஒன்றாகத் திருமண உறவினால் பிணைக்கப்பட்டிருக்கிறது.

*பராசல்ஸ்*

இந்தத் திராவகம் ஆகாயத்தைக் காட்டிலும் சக்தி வாய்ந்தது. இது உடல் நலத்தையும், இன்பத்தையும், மன அமைதியையும், நீண்ட ஆயுளையும் தரும். துன்பத்தையும், வறுமையையும் விரட்டும்.

மேல்நாட்டு ஞானிகள் கூறிய கருத்துக்கு ஒப்ப கருணாகர சாமிகள் **அகரஆய்வு** எனும் நூலில் பின்வருமாறு கூறுகிறார்.

ஆணுக்கும் பெண்ணுக்கும் அறிவு ஒன்று தான். ஆனால் ஆண்களைவிடப் பெண்களுக்கு அன்றாட வாழ்க்கையில் இந்த அண்டக்கல்லிடம் அதிகத் தொடர்பு உள்ளது. இதைக் குழந்தைகள் விளையாட்டுப் பொருளாகக் கருதி விளையாடுகின்றனர். இது கண்ட கண்ட இடங்களில் இருக்கிறது.

மூன்றும் ஒரு பொருளில் இருக்கிறது. ஒன்றிலேயே மூன்றும் இருக்கிறது என்ற கருத்தில் நம் நாட்டாரும், மேலை நாட்டாரும் ஒன்றுபடுகின்றனர்.

## 2. பூநீறு

முப்பு என்ற மருந்து செய்ய மிக அதிகமாகப் பயன்படுவது பூநீறு. அது எத்தகையது, எங்குக் கிடைக்கும் என்பது பற்றிப் பல வகையான குறிப்புகள் கிடைக்கின்றன. பிற நூல்கள் வழி அதன் நிறம், அது கிடைக்கும் இடம், விளையும் காலம், திரட்டும் முறை பற்றி அறிய முடிகிறது. இது பாவிகளுக்கும், தோசிகளுக்கும் தெரியாது.

*நிறம்*

பூநீறு என்பது துய்ய பாலாடையின் சங்கு வெண்ணிறம் போலிருக்கும் (எஸ். கலியாணராமன், ப. 319). பூநீறு நீலநிறம் என்று ஞானவெட்டி கூறுகிறது (மேற்படி. ப. 326).

*இடம்*

பூநீறு விளையும் இடமும் அது விளைவது பற்றிய செய்தியும் நவரத்தின வைத்திய சிந்தாமணியில் பின்வருமாறு கூறப்படுகிறது.

பூநீறு, காரசார கலப்புடைய உவர் பூமியில் விளையும். திருக்குறுங்குடி, ஆலயப் பக்கம், பொதிகை மலைச்சாரல் சார்ந்த

கடலோரம், சித்தர்கள் கூடி நடமாடுமிடங்கள், இமய மலைச் சாரல், சிந்துதேசம், மலைநாடு, காசிப்பக்கம், தாம்பரபரணி நதிக்கரையோரம் ஆகிய இடங்களில் இப்பூநீறு விளையும்.

ஈசனது விந்தாகிய காரம் பூமியினது சாரத்தின் சம்யோகத்தால் காரசார நஞ்சாக உதித்து ஐந்து பூதக் கலப்பால் உப்புச் சத்து அடங்கிய உவர்மண் படர்ந்து தை, மாசி, பங்குனி ஆகிய மாதங்களில் சூரியன் வெப்பக்கதிர் விந்து பூமியாகிய புளி மண்ணில் பட்டுச் சந்திரனின் குளிர் கதிரால் கசிந்து வெளிவரும். இது காலம் செல்லச்செல்ல உப்பாக உருப்பெற்று ஆங்காங்கு கிடைக்கிறது. மண்நீர்க் கலப்பால் உவர்க்காரம் ஏறிப் பனி விழுந்து பரவி நனைந்து கசிந்து இருக்கும். இதில் சூரியனின் கலைபட்டுப் பூவாகப் பூரித்து எழும்பும். இதன்மேல் வசந்தகாலச் சந்திரனின் அருள் குளிர்மதக் கொழுப்பு, நீர் மாசி மாதத்தில் வெகு காரத்தோடு உற்பத்தியாகும் (மேற்படி. ப. 323).

## பூநீறு திரட்டும் காலம்

முப்புவுக்கு மூலப் பொருளான பூநீறு திரட்டும் காலம் பற்றி ஞானவெட்டி கூறுகிறது. சித்திரை, மாசி, பங்குனி ஆகிய மாதங்களில் பூமண்டலத்தில் சில இடங்களில் சந்திரனின் சீதக்கதிர் பட்டுச் சேனன், சோனைகளாக அதீதமாக இராசயனக் கலப்பு நீர் கசிந்து ஓடும்போது, சூரியக் கனல் தாக்குதலால் வெண்மை நிறமாக மாறிப் பூமியின் உரச்சத்து நாதமாக எழும்புகிறது. இதுதான் பூநீறு.

பூநீறு எனும் விந்துவை எடுக்க உகந்த காலமான மாசி பங்குனிகளில் நடுயாமம் அல்லது இரவின் பிற்பகுதியில் உவர்மண் பூமியில் பூத்து நீராகிப் பின் இறுகிக் கல்லாகிறது. இதனை நீர்த்த தன்மையில் எடுப்பதே, மருத்துவத்திற்கும், முப்பு ஆய்விற்கும் முழுமையாகப் பயன்படும். மற்றபடி அதன் படிமம் விழுந்த மண்ணை அலசி அதன்வழி கிடைக்கின்ற பொருளுக்கு அவ்வளவாகப் பலன் கிடைக்காதென்றும் அறியப்படுகிறது.

## தேக்கநிலை

இப்பெருமை வாய்ந்த பூநீறை எடுப்பதில் சில அச்ச உணர்வுகளும் சித்த மருத்துவர்களிடையே நிலவி வந்துள்ளது. நாகம் புநீறைக் காக்கிறது. தேவதைகள் அந்த் இடங்களில் உலா வருகின்றன என்பன போன்ற அச்சத்தை அடிப்படையாக்க் கொண்டே இந்தப் பூநீறு எடுக்கும் ஆய்வு முறை தேக்க நிலையை அடைந்து விட்டது. பூநீறு பற்றிய குழப்பமும் தேக்க நிலைக்கு ஒரு காரணம். பூமியில்

பூப்பது பூநீறு, பூவிலிருந்து கிடைக்கும் தேன் தான் பூநீறு, பனைமரத்தினுடைய பாளையிலிருந்து கிடைக்கக்கூடிய கள் பூநீறு, பெண்கள் பூப்படைந்து வரும் நீர்தான் பூநீறு என்பன போன்ற பல கருத்துகளும் இது போன்ற குழப்பங்களுக்குக் காரணமாகின்றன.

### பூநீறின் பயன்பாடு

கிராமங்களில் ஆடைகளைச் சுத்தி செய்து வெளுக்கும் பொருட்டு வண்ணான் பயன்படுத்தும் உவர்மண் வெள்ளை நிறத்திலிருக்கும். மாசி, பங்குனி, சித்திரை ஆகிய மாதங்களில் மண்பூரித்துப் பூரிப்பாகி வெள்ளை நிறமாய்த் தோற்றமளிக்கும். இந்த உவர்மண்ணைத் தண்ணீரில் கரைத்து, ஆவியாகத் துணியில் பட்டவுடன் அதிலுள்ள அழுக்கு அனைத்தும் நீங்கித் துணி சுத்தமாகிறது. இதற்குக் காரணம் உவர் மண்ணில் அடங்கியிருக்கும் காரசாரத் தன்மையே. அதுபோல் மனித உடலில் இருக்கும் அழுக்கு, பிணிகளைப் போக்கவும் இத்தகைய பூநீறுகளால் முடியும். இந்த அடிப்படையில்தான் மனிதனின் நோய் நீக்கப் பூநீறைப் பயன்படுத்தினர் (மேற்படி. ப. 328).

### பூநீறு எடுக்கும் முறை: 1

குறிப்பிட்ட நாட்களில் பூநீறு உற்பத்தியாகும் இடமறிந்து சுற்றிலும் வேலிகட்டி, வேறு தண்ணீர் கலக்கா வண்ணம் பாத்தி கட்டிச் சாண் உயரம் மண்வெட்டிச் சித்தப்படுத்திக் கொள்வர். சந்திரனின் சீதக்கதிர் மண்ணில் விழுந்து நனையும்படி கிளறிக் கொண்டே பனிநீர் ஊறிப் போகும் வரை நாளுக்குநாள் பதம் பார்த்து மூன்று நாள் கிளறிக் கொடுத்துப் பக்குவம் செய்து கொள்வர். சந்திரனின் விந்து நீர் நன்றாய் ஊறிப் படிந்து விடும்படி செய்ய வேண்டும்.

3 நாள்வ ரை முளை தெரியாது. 4ஆம் நாளிலிருந்து முச்சாண் உயரம் வரை நீலவர்ணக் கம்பிபோல் எரிந்து எழும்பிவிடும். 10 ஆண்டுகள் கற்பங் கொள்வதற்குச் செய்து கொள்ள வேண்டிப் புளி சுண்ணத்திற்கு வேண்டிய இரசாயனப் பூநீறு இதுவாகும். சந்திரனின் பனிநீர் விழுந்த உவர் மண்ணை மீண்டும் கிளறிச் சாண் வெட்டி, மேலும் வெப்பக் கதிரில் எரித்து மறுபடியும் இரவு பனிநீர் விழவிட்டு, மறுநாள் திரும்பவும் மண்ணை ஒரு சாண் கிளறிவிட்டு வெயில் வெப்பத்தில் எரியிடல் வேண்டும். இப்படிப் பனிநீர் விழவும், வெயிலில் எரிந்திடவும் 3 நாள் கிளறிவிட்டு நாலாம் நாள் பார்த்தால் கம்பி கம்பியாகக் கதிர் கிளம்பும். 3 நாள் விட்டுப் பார்த்தால் கம்பியாக ஓடி வளர்ந்து இருக்கும். பின்னும் மூன்று நாள் சூரியக் கதிரின் எரிப்பு

வேகத்தால் பேதித்துப் பொரிந்து பூக்கும். ஓர் அங்குலம் (விரற்கடை) வரை பொங்கும் நீர் பொரிந்து மலரும்.

இதனைக் கிளிஞ்சலால் எடுத்துக் குருசுண்ணம் பண்ண இதனுடன் நான்கு இராசாயனப் பொருள்கள் கூட்டிப் பதமாய்க் கல்வத்தில் ஆட்டி 50 எருவில் புடம் போட்டு நீற்ற வேண்டும். சுண்ண குருவாக்கிக் கற்ப சிகிச்சைக்குப் பயன்படுத்த வேண்டும் (மேற்படி, ப. 326, 327).

## பூநீறு எடுக்கும் முறை: 2

உவர்மண் நிலத்தில் ஆண்டுதோறும் தை, மாசி, பங்குனி, சித்திரை மாதங்களில் பனி அதிகரிக்கும் போது பூமியிலிருந்து இரவுக் காலத்தில் ஒரு விதமான பூமியின் நாதம் ஆங்காங்கு வெளிப்படும். இது பௌர்ணமி காலத்தில் அதிகமாகப் பூரித்து வெளியாகும். நடு இரவில் மிகவும் கவனத்துடன் இந்த நாதத்தைச் சேகரித்துக் குப்பிகளில் அடைத்து வைத்துக் கொள்ள வேண்டும். முடியாவிட்டால் சூரிய உதயத்திற்கு 2, 3 நாழிகைக்கு முன் அவ்விடம் சென்று முற்றிலும் ஈரம் வற்றாமல் தயிர் போல் இருப்பதைக் கிளிஞ்சல் கொண்டு வாரி அகலக் கோப்பைத் தட்டுக்களில் போட்டுக் கடைந்து குழம்புப் பதமாகக் குப்பிகளில் அடைத்து வைத்துக் கொள்வர்.

இந்தக் குப்பிகளைச் சூரிய ஒளியில் வைக்க உருகும். இரவுக் காலத்தில் கற்கண்டு போல உறையும். இதுவே சரியானது. இப்படிச் சேகரம் செய்த பூமிநாதத்தை 3 தினம் கடும் இரவியில் வைத்துப் பிழிந்து எடுக்க வந்த சலம் விந்துவாகும். அதில் ஏற்பட்ட வண்டல் நாதம் ஆகும்.

இதனை அறியாதவர்கள் களர்நிலத்தில் காலை நேரத்தில் சூரிய உதயத்திற்குப் பின் சென்று பூத்திருக்கும் பூநீறைக் கொண்டு வருவது வழக்கம். இப்பூநீறைக் கொண்டு வந்து செய்யும்படியான தொழிலுக்குச் சிவனும் சக்தியும் இருக்க வேண்டும். அப்படியில்லாமல் சிவன் என்று சொல்லப்பட்ட விந்தானது மண்ணில் கலந்து கொண்ட பின்பு சத்தியாகிய நாதமென்ற பூநீறு பெரிதும் பயன்படாது.

பக்குவம் அறிந்து திரட்டிய பூநீறு ஓர் எடைக்கு 4 எடை பனி சலம் விட்டுக் கரைத்து 2, 3 மடிப்பு உள்ள சுத்தமான சீலையில் வடிகட்டிப் பீங்கான் தட்டுகளில் அல்லது 3/4 அங்கலம் ஆழம் இருக்கும்படியாக விட்டுக் காலை 7, 8 மணிக்கு இரவியில் வைத்து விட மாலை உறைந்து கட்டியிருக்கும். இவற்றையெல்லாம் மீண்டும்

உப்பில் எடைக்கு நான்கு மடங்குப் பனிசலம் விட்டுக் கரைத்து முன்போல் 4, 5 மடிப்பு உள்ள சுத்தமான சீலையில் வடிகட்டித் தட்டுக்களில் விட்டு வைக்க உறைந்து உப்பாகும். இப்படிப் பத்துமுறை செய்யச் சுத்தமான பூநீறு கிடைக்கும். இதனையே முப்பு செய்யப் பயன்படுத்துவர் (முப்பு ஆய்வு, சுவடி 1, ஓலை: 11, ப. 3, 27-10-92).

இப்பூநீறு கதிர்போலப் பூக்கும். பூநீறு பூத்திருக்கும் போது குச்சியைப் போலும், கொக்கைப் போலவும், ஒருவகையாய் இருக்குமென்றும், அவற்றுள் முன்னது ஆண்பூ நீறென்றும், பின்னது பெண்பூ நீறென்றும் கூறப்படுகின்றன.

பூநீறு பெண்சரக்கு. இதற்கு ஆண் சரக்கு இதிலிருந்து பிரிக்கப்பட்ட நீரே.

**பூநீறின் வேறு பெயர்கள்**

பூமிநாதம், மாது நாதம், சக்தி நாதம், கருமதி யுப்பு, வழலை, சுத்த கங்கை, பிரம்ம கற்பம், சாகா மூலி, சவுக்காரம், நாதம், நிலவுப்பு, மன்னுப்பு, ஆயினாதம், அன்னையுமை நாதம், சுயம்புநீறு, பிறப்பகற்று மூலி, கோவானூர்மண் என்பன போன்ற பல பெயர்களால் சித்தர் நூல்களில் மறைப்பாகக் கூறப்பட்டுள்ளது. அகத்தியர் பரிபாசைத் திரட்டு,

கூறுவார் முதல்வழலை நிலஉப் பாச்சு
குறிப்பறிய வேண்டுமெனில் பூமி நாதம்
மாறுவார் காய்ச்சுவார் வழலை செய்வார்
மதியுப்புப் பிண்டமென்பார் ஆயி நாதம்
தேறுவார் இதைத்தாமே சிவமா மென்று
செப்பியுந்தா வறியாக்கால் திறந்து சொல்வேன்
பேறுபெற நிலவுப்பே பூநீ றென்று
பேரிட்ட வகைபிரித்துப் பேசு வேனே

என்று பூநீறின் வேறுபெயர்களைக் குறிப்பிடுகிறது.

திருவள்ளுவர் காயம், கற்பம், குளிகை, கரு, புளி, விந்து, மூலப்புளி, சத்திநாதம், கருவண்டு, நேயமுப்பு, பூரணம், கற்பலேகியம், நாதம் போன்ற சொல்லாட்சிகளைப் பூநீறுக்குக் கையாளுகின்றார்.

பூநீறு உவர்மண்ணுள்ள சிறப்பு நிலத்தில் விளையும் என்பதை வள்ளுவர் சிந்தாமணியில்,

நானிலத்தில் நாடெல்லா மூவர்கடால்
காணிற்பூடு காடெல்லாம் நீற்றதே

என்று கூறுகிறது.

உற்றுப்பார் சிவனிருந்த பூமிதனில்
ஒருபூண்டு முழையாது உவருப்பாலே
அற்றுப்போ மருதநிலை மயானருத்தன்
ஆவலுடனே சக்தியடுத் திருந்த தாலே
முத்துபோல் கொஞ்சனசஞ் சலமுண் டாச்சு
சித்திக்கும் பசுந்தமண்ணுத் தண்ணீர் கண்டால்
சிவலுப்பு நிலமுவராந் தெளிந்து பாரே

என்ற பாடலும் பூநீறு பூக்கக் கூடிய நிலம் உவர்மண் நிலம் என உணர்த்துகிறது. இதில் பூண்டு முளைக்காது எனவும் அவ்விடத்தில் மயானருத்திரத்துடன் சக்தி கூடியதால் மிகச் சிறிய அளவில் நீர்சுண்டு சதுப்பாய் இருக்குமிடமே பூநீறு விளையும் இடம் எனவும் தெரியவருகிறது.

## பூநீறின் சுத்திமுறை

பனி அதிகமில்லாமலும், வெயில் அதிகமில்லாமலும் உள்ள சமநிலை காலத்தில் பூநீறைச் சுத்தி செய்ய வேண்டும்.

வேண்டிய பனிநீர் 8 படி. முதலில் நன்றாக வெந்த கல் சுண்ணாம்பு 1 படி எடுத்து, இதை வாய் குறுகலான பானையில் போட்டு அதில் 1 படி பனிநீர் விடவும். வாயை மூடி வைக்க வேண்டும். இவை இரண்டும் சேர்ந்த போது ஒருவித இரைச்சல் உண்டாகும். இவை அடங்கிய பிறகு மீதியுள்ள பனிநீரைக் கல் சுண்ணாம்பில் விட்டு ஒரு மூங்கில் குச்சியினால் நன்றாகக் கலக்கி வாயை மூடிப் பத்திரமாக வைக்கவும். மறுநாள் காலையில் முன்போல் மூங்கில் குச்சியினால் கலக்கி விடவும். இதுபோல் தொடர்ந்து மூன்று நாள் கலக்கி விடவும். பிறகு 4ஆம் நாள் காலையில் அதிலுள்ள தெளிந்த நீரை இறுத்து வாய் அகன்ற பீங்கானில் விட்டுப் பௌர்ணமி இரவு அன்று சந்திரனின் ஒளிபடும்படியான இடத்தில் வைக்கவும்.

மறுநாள் காலையில் போய்ப் பார்க்கப் பீங்கானிலுள்ள நீரின் மேல் அடைபோல் படிந்திருக்கும் மாசுக்களை எடுத்து விட்டு நீரைத் தனியாகத் தட்டுப் போட்டு மூடித் தூசி படியாமல் சேர்த்து 5 நாட்கள் வரை சந்திரனின் ஒளியில் வைத்துக் காலையில் முன் செய்தது போல் நீரிலுள்ள மாசுக்களை எடுத்து விடவும். இதில் மாசுக்கள்

இருக்குமாயின் அடுத்து வரும் பௌர்ணமிகளில் மீண்டும் வைத்து நீரைச் சுத்தி செய்யவும் இதுவே பனிநீர் சுத்தி செய்யும் முறையாகும்.

இதுவே சுத்த ஜலம், சுத்த கங்கை, சுத்த அமுரி என்ற பெயர்களில் வழங்கப்படுகிறது (வைத்திய முப்பு, சுவடி:2, ஓலை:8, ப. 3, ஜூலை 93).

**கடல் நீர் சுத்தி முறை**

பூநீறு பாகத்தில் கடல் நீர் சேர்க்கப்படுகிறது. எனவே அதன் சுத்தி முறை இங்குத் தரப்படுகிறது.

கடல் நீருக்குப் பெருநீர், முந்நீர், ஊழிநீர் போன்ற பல பெயர்களுண்டு.

சமுத்திரமானது அகத்தியர் சிறுநீரெனப்படுவதால் அத்ற்குத்தான் அமுரி என்ற பெயர் என்பது சிலர் கருத்து.

இந்தக் கடல்நீரில் காந்த மண் சத்து, சவட்டுப்புச் சத்து, சுண்ணாம்புச் சத்து போன்ற உப்புகளும், கடற்பாசி யுப்பு, உவருப்பு என்ற பொருள்களும் இருக்கின்றன. இதில் தங்கமிருப்பதாகவும் சிலர் கூறுவர்.

இந்தக் கடல்நீரை ஒரு பாத்திரத்தில் ஊற்றி அசையாமல் 3 அல்லது 4 நாட்கள் வைத்து அடுத்த நாள் கலங்காமல் மெதுவாக இறுத்து உரத்த துணியால் வடிகட்டிக் கொள்ள கடல் நீர் தூய்மையாகும்.

சிலர் இவ்விதம் தூய்மை செய்யப்பட்ட சமுத்திர நீரைச் சந்திரனொளியில் வைத்துச் சாரமேற்றித் தூய்மை செய்தும் பயன்படுத்துகின்றனர். இதுவே கடல்நீர் சுத்தி முறையாகும் (வைத்திய முப்பு, சுவடி. 2, ஓலை. 9, ப. 3, ஆகஸ்டு 93).

கடல் நீரை ஆவியாக்கி மீண்டும் குளிர வைத்துக் கிடைக்கும் திராவகமே சுத்தி செய்த கடல்நீர். அப்படிப் பார்க்கும் போது மழைநீர் இம்முறையில் இயற்கையாகவே கிடைக்கிறது. எனவே மழை நீரும் முப்பு செய்யப் பயன்படும் பொருளே என்றும் கூறுவர்.

## 3. நவச்சாரம் (Ammonium Chloride)

குதிரை, யானை, எருமை, மாடு, வெள்ளாடு, செம்மறியாடு, கழுதை, பன்றி, ஒட்டை முதலியவற்றை அடைத்து வைத்துள்ள கொட்டகையை அப்போதைக்கப்போது சுத்தி செய்து மலசல

முட்படக் குப்பைகளைக் கொட்டி வருகின்ற குப்பை மேடுகளிலும், அக்கம் பக்கத்திலுள்ள மண் தரைகளிலும் மழை பெய்த காலத்தில் சலம் ஊறி வடிந்து பக்கங்களிலுள்ள சாலகங்களிலும், பள்ளங்களிலும் நிறைந்து வெயில் காலத்தில் படைபடையாகவும் கம்பிகம்பிகளாகவும் உப்பு பூத்திருக்கும். இவற்றைச் சுரண்டி எடுத்துச் சாடிகளில் பத்திரப்படுத்துவதுண்டு. மேற்கூறப்பட்ட ஒன்பது விலங்குகளின் மந்தைகளின் சார்பாகத் தனித்தனியே எடுத்த உப்புகளையெல்லாம் ஒருமிக்கக் கூட்டி, சிறப்பாகக் கிடைக்கக் கூடிய ஏதேனும் ஒரு விலங்கின் சிறுநீர் விட்டுக் கரைத்துத் தெளிய வைத்து ஏழு மடிப்புள்ள சீலையில் வடிகட்டிப் பாண்டங்களில் விட்டு அடுப்பிலேற்றி வைத்துச் சுண்டி வரும் போது அதிக ஆழமில்லாத அகன்ற சட்டிகளில் விட்டு இரவியில் வைத்து உலர்த்தி எடுக்கும் சரக்கிற்கு நவச்சாரம் என்றும் சட்டிச் சாரமென்றும் பெயர். இது அழுக்குப் படிந்த நிறமாகவும் அல்லது கபில நிறமாகவும், புளிப்புச் சுவையுடன் கசப்பாகவும் மூத்திர வெகுட்டலுடையதாகவும் இருக்கும்.

## 4. எவாச்சாரம் (Potassium Carbonas Impura)

கோதுமைத் தாளை உலர்த்தி நன்றாய் எரித்துச் சாம்பலாக்கி அதன் எடைக்கு நான்கு மடங்குச் சுத்த சலம் விட்டுக் கலக்கிக் கலக்கி 3 நாள் சென்ற பின் கலங்காமல் தெளிவு நீரை வடித்து மண் பாண்டத்திலிட்டுச் சிறு தீயாக எரித்துக் குழம்புப் பதமாக வரும் போது பீங்கான் தட்டுகளில் விட்டு இரவியில் உலர்த்தி எடுத்துக் கொள்ள இதுவே எவாச்சாரம்.

## 5. வளையலுப்பு (Valayaluppu)

தேவையான பூநீற்றைக் கொண்டு வந்து மண், கல் முதலியவை இல்லாமல் சுத்தப்படுத்திச் சலம் தெளித்து 2, 3 நாள் மிதியல் கொடுத்தாவது அல்லது கருங்கல்லினால் சந்தில்லாமல் இணைக்கப்பட்ட உரலைப் போன்ற ஒரு பள்ளத்தில் கொட்டிச் சிறிது நீர் தெளித்துப் பூணில்லாத இரண்டொரு மர உலக்கைகளைக் கொண்டு ஒரு சாமம் இடித்து ஆற விட்டு நான்காவது நாள் மெழுகு பதத்தில் திரட்டி ஓர் அடி கனத்த மட்பாண்டத்தில் அரைப்பாகத்தில் அடங்கும் வண்ணம் போட்டு, விட்டமாக உள்ள அடுப்பில் கால்பாகம் மட்பாண்டம் அடுப்பில் புதையும் படியாக அமைத்துச் சந்து வாய்க்கு மண்பூசித் தீயிட்டுக் காடாக்கினியாக எரிக்கச் சில சாமத்திற்குப் பூநீறானது உருகி நுரையோடு அழுக்குத் தள்ளும். ஓர் இரும்புக்கரண்டி கொண்டு சுத்தமாக வழித்து யார் கண்களுக்கும் புலப்படாமல் புதைத்து விடுவதுண்டு. இதுவே வளையல் நஞ்சாகும்.

இப்படி உருகியாறவிட்ட உப்பு இரண்டு விதமான வேறுபாடு அடையும். உடைத்துப் பார்க்க உட்புறத்தில் பளிங்கு நிறத்தை யொத்த கறுப்பு நிறமான கல்லாகவும் மேற்புறத்தில் வெண்மை நிறமான உப்பாகவும் இருக்கும். மேற்புறத்தில் உள்ள உப்பே வளையலுப்பு. உள்ளிருக்கப்பட்ட பளிங்குக் கல்லை உருட்டி வளையலாகச் செய்வது வழக்கம். வளையல் செய்வதற்காகக் காய்ச்சும் நிமித்தம் இந்த உப்பு ஏற்பட்ட படியால் வளையலுப்பு எனப் பெயர் பெற்றது.

## 6. கெந்தி உப்பு (Kenthi uppu)

இது வைப்புச் சரக்குகளில் ஒன்று. இதன் வைப்பைப் பலவிதமாகக் கூறியிருக்கின்றனர்.

காட்டு: கடல்நீரைக் காய்ச்சி உப்பாக எடுத்தது பலம் 20. இதை ஓர் அடிகனத்த குடவான சட்டியில் போட்டு வட்டாகாரமான பெரிய அடுப்பில் வைத்து எரிக்க உப்பு உருகும். அப்போது படிகாரம், வெடியுப்பு, வர்ண கந்தகம், பூநீலம் வகைக்குப் பலம் ஒன்றாகத் தூள் செய்து கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கிண்டி ஆற விட்டுப் பாண்டத்தை உடைத்து எடுக்கக் கெந்தி உப்பு கிடைக்கும்.

## 7. வெங்காரம் (Sodi Bi Boras)

சுத்தமான பூநீறு படி ஒன்றை ஒரு மட்பாண்டத்தில் போட்டு 8 படி நீர் விட்டுக் கரைத்து வடிகட்டி வேறு மட்பாண்டத்திலிட்டு, அதில் சிறு துண்டுகளாக நறுக்கிய சீனம் பலம் 100, வெடியுப்பு 6 1/4 போட்டு, 15 நாள் வரையில் இரவி முகத்தில் வைத்து வரக் கறுப்பு நிறமாகச் சுண்டும். இதில் கள்ளிச் சாம்பல் படி 1, குன்றி இலைச்சாறு படி 1, சிற்றாமணக்கெண்ணெய் படி 1/2 விட்டுக் கலக்கி அடுப்பிலேற்றிச் சிறு தீயாகப் பொங்காமல் 4 நாழிகை எரித்து மேலழுக்கு நீக்கி வாயகன்ற பாத்திரத்தில் மாற்றி 15 நாள் இரவி முகத்தில் வைக்க வெங்காரமாகும்.

## 8. ஏகம்பச்சாரம் (VOL Canic Ammonia)

சுத்தி செய்த பூநீறு, கம்பி உப்பு, வெங்காரம், படிகாரம், கல்லுப்பு, சாரம் ஆகியவற்றை வகைக்கு இரண்டு சேர் எடுத்துக் கல்வத்திலிட்டு மிருதுவாக அரைத்து உறவான பதத்தில் வெடியுப்பு செயநீர் கொஞ்சம் கொஞ்சமாக விட்டு 4 சாமம் அரைத்து மெழுகு பதத்தில் அகலப் பீங்கான் தட்டில் வில்லை தட்டிக் கடும் வெயிலில் 15 நாள் வைக்கவும் அப்பால் சுத்தி செய்த பேரண்டத்தை நன்கு இடித்துத் தூள் செய்து 2 சேர் அளவிற்கு எடுத்து அதனில்

பாதித்தூளை ஒரு குடவான சட்டியில் போட்டுப் பரப்பி அதன் மீது முன் உலர வைத்த வில்லையைத் துண்டுதுண்டாக உடைத்துப் போட்டு மிகுதியுள்ள பேரண்டத் தூளை மேலே கொட்டிப் பரப்பிச் சட்டியின் உட்புறத்தில் ஊமத்தையிலைச் சாறை அல்லது கல்யாண முருங்கனிலைச் சாறைச் சந்தில்லாமல் பூசி உலர்த்திக் கவிழ்த்துச் சந்துக்கு மண்பூசி மண் சீலை ஏழு செய்து உலரவிட்டு அடுப்பிலேற்றி முத்தீயாக 4 சாமம் எரித்து ஆற விட்டு அசையாமல் சீலையை நீக்கிப் பார்க்க மேல் சட்டியில் பதங்கம் ஏறி நிற்கும். இதுவே ஏகம்பச்சாரம்.

### 9. கடல் நுரை (Spray)

சமுத்திரத்தில் கிளம்பும் நுரையிலுள்ள சில சத்துக்களைக் காற்று ஒருங்கு சேர்க்க அது இரவியின் தீட்சண்யத்தால் உறைந்து உலர்ந்து கட்டிகளாகின்றன. இதுவே கடல்நுரை. கடல்நுரை ஆண்சரக்கு. இதற்குக் கற்சுண்ணம் பெண் சரக்கு.

### 10. அமுரி உப்பு (Urine Salt)

சில அவிழ்தங்களில் அமுரி யுப்பைக் கூட்டும் படியாகச் சொல்லும் காலத்தில் சிறுநீரைக் காய்ச்சி அடியில் உள்ள உப்பைக் கூட்டிக் கொள்வது வழக்கம். இதில் சில குற்றங்கள் உண்டு. எனவே தசதீட்சை செய்து பயன்படுத்தும் வழக்கம் உண்டு.

பன்னிரண்டு வயதிற்கு உட்பட்ட குழந்தையின் சிறுநீரை எட்டுப்படி ஒரு மண்குடத்தில் அரைபாகத்தில் அடங்கும் படியாக விட்டுப் பொருத்தமான வாலையைச் சொருக வேண்டும். பொருத்து வாய்க்கு ஈரத்துணியைச் சுற்றி மேலே குளிர்ந்த நீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்துக் கொண்டு வர வேண்டும். அப்போது ஆவி நீர் துளித்துளியாகச் சொட்டும். அப்போது 20 அல்லது 25 நிமிடத்திற்குப் பின் சொட்டுகின்ற நீரை மஞ்சள் தூளில் கலந்து பார்க்க வேண்டும். அது சிவப்பாக இருந்தால் சரியானது என்று பொருள். அப்படியில்லாவிட்டால் மீண்டும் முன்போலவே சொட்டும் நீரை எடுத்து முன்போல் சோதித்துப் பார்க்க வேண்டும். எப்பொழுது மஞ்சள் கலந்த ஆவி நீர் சிவப்பாக மாறுகிறதோ அப்போது அந்த நீரை எடுத்து வெண்மை நிறமுடைய குப்பிகளில் அடைத்து வைத்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு நமக்கு வேண்டிய அளவு ஆவி நீரை எடுத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு எடுக்கப்பட்ட நீர் கலங்கல் இல்லாமல் சுத்தமானதாக இருக்க வேண்டும்.

எரிப்பின் பேதத்தினால் கலங்களாகவும், அழுக்கு நிறமாக்வும், மஞ்சள் நிறமாகவும் கிடைத்தால், மீண்டும் அதனை மண்குடத்தில் மடக்கி ஆவிநீராக வடித்தல் வேண்டும்.

இதுவே சுத்த கெங்கை (சுத்தமானநீர்) என்றும், விந்து என்றும் பிண்ட முப்பு பாகத்தில் கூறப்பட்டுள்ளது. இவ்வாவி நீரைத் திரட்டிய பின் அடிக்குடத்தில் சிவந்த நிற வண்டல் இருக்கும். இதற்கு நாதம் என்றும், சுரோணிதம் என்றும் பெயர்.

மூத்திரம் படியாறு முறிவான
குமரியிடு முனிந்து வாங்கிக்
காத்திரமா யெண்ணை யுப்பு
கனிவாக அடியில்நிற்கும் கண்டுபாரு
சூத்திரமாய்ச் சவுக்காரம் சுண்ணமதாய்
கடுங்காரம் சூதஞ் சாகும்
கோத்திரமெல் லாம்பிழைக்க ஒருவேலை
காயசித்தி கொள்கை தானே.

இச்செய்யுளில் இரண்டாவது அடி அமுரி பற்றிய இரகசியத்தை தெளிவாக வெளிப்படுத்துகிறது. அடி மண்குடத்தில் நாதம் என்று சொல்லபட்ட எண்ணையோடு உப்பு கலந்து வண்டல் இருக்கும். இதைப் பீங்கான் தட்டுகளில் வெயிலில் வைக்க உலர்ந்து பழம் புளி போலாகும். இந்தப் புளிக்கு நான்கு எடை மேலே கூறிய சுத்த கங்கையை விட்டுக் கரைக்க வேண்டும். பின் நான்கு மடிப்பு உள்ள சீலையில் (வடிப்பான்) வடிகட்டி அகலப் பீங்கான் தட்டுகளில் ஓரங்குலம் ஆழம் இருக்கும் படி ஒவ்வொன்றிலும் விட வேண்டும். விட்டுக் காலை எட்டு மணிக்கு வெயிலில் வைத்து விடப் பகல் நான்கு மணிக்குள், அதில் உள்ள உப்பானது ஆடை கட்டி உறைந்து இருக்கும்.

இவ்வாடையின் ஓரத்தில் ஒரு சிறு துளையிட்டு வேறு தட்டில் சாய்க்க அடியில் தங்கி உள்ள நீரானது கருப்பு நிறத்துடன் வடியும், நீர் முற்றிலும் வடியவடிய உப்பானது கோப்பைத் தட்டோடு சேர்ந்து பிடித்துக் கொள்ளும். இந்த உப்பை எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

மறுபடியும் முன் வடித்த நீரைப் பீங்கான் தட்டுகளில் முன் போல விட்டு, மீண்டும் மேற் சொன்னது போலவே செய்து கிடைக்கும் உப்பை முன் கிடைத்த உப்புடன் சேர்த்துக் கொள்ள வேண்டும். இப்படி கிடைக்கும் வரையில் உப்பை எடுத்துக்கொண்டு அடியில் இருக்கும் எண்ணெயைத் தள்ளிவிட வேண்டும். இந்த

உப்பிற்கு ஒரு தீட்சை என்று பெயர். இப்படி இந்த உப்பை பத்து முறை சுத்த கங்கையில் விட்டு, கரைத்துக் கரைத்து உப்பாக்கியது பளிங்கு நிறமாக இருக்கும் இதுவே சுத்தமான அமுரி உப்பு.

அவிழ்த பாகங்களில் கூட்டுவதற்கு இந்த உப்பு மிகவும் சிறந்தது. அவ்வுப்பைச் சேர்த்துக் காரமேற்றிச் சுண்ணம் செய்து பல மருந்து செய்முறைகளுக்குப் பயன்படுத்துவர்.

கன்னி நீர், இளநீர், மதநீர், வாளைநீர், நண்டு நீர், காடி நீர், பிரமநீர், தேசிநீர், பழரசம், பனிநீர், கடல்நீர், மழைநீர் என்ற வேறு பெயர்களும் அமுரிக்கு உண்டு. அதாவது பலவாறான நீர்த்தன்மை வாய்ந்த பொருள்களுக்கு அமுரி என்ற பெயரை வழங்குவர்.

அமுரியின் செய்முறை பற்றிப் பின்வருமாறு டாக்டர் வீ. நாராயணசாமி கூறுகிறார்.

ஒரு மண் பாத்திரத்தில் நல்ல உடல் நிலை உள்ள ஒருவரின் சிறு நீர் எட்டுப் பங்கும், ஒரு பங்கு பூநீறும், கால் பங்குச் சுண்ணாம்புக் கல்லும் போட்டு அதனை மூடி அந்தக் கலவையை ஐந்து நாட்கள் வைத்திருக்க வேண்டும். புறப்பரப்பில் மிதக்கும் நீரை இறுத்து எடுத்து விட்டு எஞ்சி இருப்பதைப் பயன்படுத்த வேண்டும்.

சிறுநீர் மிகுந்த அளவு இருக்கும் போது அதனை ஆவியாக்கி விட்டு எஞ்சி இருப்பவற்றை (சிறுநீர் உப்பு) எடுப்பர். இதுவே அமுரி யுப்பு எனப்படும். (V. Narayanasamy, Intruduction to the Siddha System of Medicine, P. 24).

## அமுரி – மூலிகைச் சாறு

அமுரி என்பது மூலிகையில் இருந்து எடுக்கப்படும் ஒரு சாறு என்று கூறுகிறார் பெரியகுளத்தைச் சேர்ந்த மருத்துவர் போ. பார்த்திபன் அமுரியின் செய்முறை பற்றிப் பின்வருமாறு அவர் கூறுகிறார்.

பௌர்ணமி நாளில் இருந்து ஐந்து நாள் கழித்து ஒரு வாழை மரத்தை வெட்டி, மரத்தின் அடிப்பகுதியில் நிற்கும் பெரிய தண்டில் பள்ளம் தோண்டி, அதில் துருசு சுண்ணத்தை வைக்க வேண்டும். ஐந்தாம் நாள் பள்ளத்தில் வடிந்து தேங்கியிருக்கும் நீரே அமுரியாகும்.

அமுரி என்பது சமுத்திர நீர் என்பதைப் பின்வரும் பாடல் காட்டுகின்றது.

**தானேதா னமுரியென்று மூத்திரத்தை விட்டுத்**
**தாட்டிகமாய்ச் சொன்னார்கள் பெரியோர் தாமும்**

காணேதான் பொய்பேசு மாண்பர் தன்னைக்
கட்டியே யடித்தக்கால் பாவ மில்லை
வாதமேதான் மூத்திரம்தான் சமுத்திர நீராம்
வகையாகப் பார்த்தாக்கால் தோனும் தோனும்

திருவள்ளுவர் இயற்றிய ஞானவெட்டி, நவரத்ன சிந்தாமணி 800, பஞ்சரத்தினம் 500, காயகற்பம் 300 முதலிய நூல்களிலும் அமுரி பற்றிக் கூறப்பட்டுள்ளது.

அமுரி உப்பு பெண் சரக்கு; இதற்கு ஆண் சரக்கு சுத்த கங்கை.

## 11. கற்பூரம் (Camphora officinarum)

சப்பான், சைனா, கொச்சி, ஸ்வீடன், போர்னியா போன்ற நாடுகளில் கடற்கரை ஓரங்களில் கற்பூரச் சத்து அடங்கலாகிய ஒருவித மரமுண்டு. இவற்றின் மரப்பட்டை வேர், கிளை முதலியவற்றைத் துண்டுதுண்டாக நறுக்கி இடித்து ஒரு பெரிய மட்பாண்டத்தில் போட்டு எண் மடங்கு நீர் விட்டு வாய் மூடி அடுப்பிலேற்றி எரிக்கக் குழம்பு போலாகும். இதை வடித்துப் பீங்கான் தட்டுகளில் விட்டு இரவியில் வைக்க உறைந்து உப்பு போலாகும். இதைப் பொடி செய்து இரண்டு மடங்கு மணலுடன் உப்பு வாய் குறுகிய மட்பாண்டத்தில் போட்டு, அத்தகைய மற்றோர் மட்பாண்டத்தைக் கவிழ்த்துக் கந்து வாய்க்கு மண்பூசி சீலை செய்து உலர வைத்து அடுப்பில் வைத்துச் சிறுதீயாக எரிக்கக் கற்பூர சத்தானது புகைந்து மேலெழும்பிப் பதங்கிக்கும். இது வெண்மை நிறமாகவும் கரகரப்பாகவும் இருக்கும்.

## 12. பச்சைக் கற்பூரம் (Borneol or Boro camphor)

இது தற்போது சப்பான் போன்ற நாடுகளில் இருந்து சுத்த வெண்மை நிறமாகவும், பழுப்பு நிறமாகவும் வியாபாரத்திற்காக வருகின்றது. இவை நவீன முறைப்படி செய்யப்பட்டு அதிக மணமுள்ளதாகக் குறைந்த விலைக்குக் கிடைக்கின்றன. ஆனால் சித்தர்கள் கை முறையாக வைப்பு வைத்து எடுக்கும் முறை விலை அதிகமாகும் அம்முறைகளில் ஒன்று.

கற்பூரம், படிகாரம், உயர்ந்த சாம்பிராணி, இந்துப்பு, பூநீறு, தாழையுப்பு, கோரைக் கிழங்கு ஆகியவற்றை வகைக்குப் பலம் காலும் (1/4) புனுகு, கஸ்தூரி, மஞ்சள், ஏலக்காய் வித்து, மலாக்கா சந்தனம், கிளியூரம் பட்டை, பச்சை கிச்சிலிக்கிழங்கு ஆகியவற்றை வகைக்கு ஒரு விராகன் எடையும் எடுத்துக் கொள்ள வேண்டும். புனுகு நீங்கலாக மற்றவற்றை மாவுபோல் இடித்துச் சிறிது பசுவின் நெய் விட்டு நான்கு சாமம் மெழுகு பதத்தில் அரைத்து ஒரே வில்லையாகத் தட்டிக்

கொள்ள வேண்டும். ஒரு கோப்பையினுள் வில்லையை வைத்து மற்றோர் கோப்பையின் உட்பக்கத்தில் புனுகைத் தடவி மேல் மூடி சந்து வாய்க்கு உளுந்து சீலை ஏழு செய்து நன்றாய் நிழலில் உலர்த்தி, ஒரு சட்டியில் இரண்டு மூன்று விரற் கடை பெருமணல் கொட்டிப் பரப்பி நடுவில் கோப்பையை வைத்து, சுற்றுப்புறம் முக்கால் பாகம் அடி கோப்பை மறையும்படி மணல் கொட்டிப் பரப்பி அடுப்பில் ஏற்றிச் சிறு தீயாக மூன்று சாமம் எரித்து எடுக்க மேற்கோப்பையில் பதங்கம் ஏறி நிற்கும். இது அதிகப் பரிமளம் உடையதாகவும், பளிங்கு வண்ணமாகவும் இருக்கும். இதனையே பச்சைக் கற்பூரம் என்பர்.

பச்சைக் கற்பூரம் ஆண் சரக்கு. இதற்குப் பெண்சரக்கு இந்துப்பு.

## 13. சத்தி சாரம் (sathicharam)

இது வைப்புச் சரக்குகளில் ஒன்று. இது தற்காலத்தில் சரியான சரக்காகக் கிடைப்பதில்லை.

### வைப்பு விளக்கம் – போகர்

குதிர் போன்ற பெரிய பானையின் அடியில் 5, 6 துளைகள் இட்டு வைக்கோல் செருகி முக்கோண வடிவத்தைப் போன்ற மூங்கில் கால்களால் இணைக்கப்பட்ட ஒரு பீடத்தின் மேல் வைக்க வேண்டும். அதில் பூநீறு படி - 50, சுண்ண நீறு படி - 25 எடுத்து இரண்டையும் ஒன்றாகக் கலந்து போட வேண்டும். பிறகு சுவர் உளுத்த மண் படி - 10 கூட்டி மொத்த எடைக்கு நான்கு மடங்கு சுத்த சலம் விட்டுக் கலக்கி விட்டு வைக்க, வைக்கோல் வாயிலாக நீர் சொட்டும்.

இதைச் சாடிகளில் பத்திரப் படுத்த வேண்டும். இவ்வாறு நீரெல்லாம் சொட்டியபின் அந்நீரைப் பெரிய வாயகன்ற மட்பாண்டத்திலிட்டு அடுப்பிலேற்றி எரித்துக் குழம்பு பதத்தில் ஆறவிட்டு வில்லை வில்லையாக ஓலைப் பாய்களின் மீது விட்டு இரவியில் வைத்து உலர்த்த சத்தி சாரம் கிடைக்கும். இது எந்தச் செயல்பாட்டிற்கும் சிறந்தது.

## 14. வெடியுப்பு (Potassium Nitras)

சுவர்களால் கட்டப்பட்ட பல குடிசைகள் உண்டு. அவற்றின் மேல் வழலை என்னும் உப்புக் காற்று நாளுக்கு நாள் மோதிக் கொண்டிருக்கும். சில காலத்திற்குப் பின் அச்சுவற்றின் மண்ணானது உளுத்து மிருதுவாகச் சரிந்து கொண்டு வரும். இவற்றை வாரிச் சேர்த்து ஒரு பாண்டத்தில் இட்டு நான்கு மடங்கு சலம் விட்டுக் கரைத்துக் கரைத்து மூன்று நாள் அசையாமல் விட்டு வைத்துக்

கலங்காமல் தெளிந்துள்ள நீரை வடிக்க வேண்டும். அல்லது முத்தி சாரத்திற்குக் கூறியது போல் செய்து நீரைக் காய்ச்சி ஓலையில் விட்டால் உறையும் பதத்தில் தட்டுகளில் விட்டு வைக்கக் கம்பி கம்பிகளாக உப்பு உறைந்து இருக்கும். இதுவே வெடியுப்பு ஆகும்.

வெடியுப்பு ஆண் சரக்கு, இதற்குப் பெண் சரக்கு படிகாரம்.

## 15. மீன் அம்பர் (Ambra Grsea - fish)

இவை மத்திய தரைக் கடலிலும், ஆப்பிரிக்கக் கடலோரங் களிலும் அபூர்வமாகக் கிடைக்கின்ற கட்டிகள். இது மதங்கொண்ட திமிங்கலத்தினால் வெளியிடப்பட்ட விந்து; கறுப்பு, கறுஞ்சிவப்பு நிறமுடையது. கஸ்தூரிக்குடைய நறுமணத்தைப் பெற்றிருக்கும். எந்தப் பாரிச் சத்தில் கத்தி கொண்டு துண்டித்துப் பார்த்தாலும் ஊசி முனைகளை யொத்த சிறு புள்ளிகள் தோன்றும். இதற்குச் சுவை கிடையாது. குளிர்ந்த நீரில் கரையாது. வெந்நீர், சூடான சாராயம், சில எண்ணெய் முதலியவற்றில் கரையும். இந்தக் கட்டியின் மேல் இரண்டு, விரலைக் கொண்டு தேய்க்க மின்சார சக்தி உண்டாகி விரல்களை அப்புறப்படுத்தும். சிறிது நேரம் விரல்களில் துடிப்பு இருக்கும். இது அதிக விலையுள்ளது.

## 16. பொன் அம்பர் (Ambra Grsea - Bird)

மத்தியதரைக் கடலின் சில பாகங்களில் உள்ள கற்பாறைகளில் அண்ட பேரண்ட பட்சி என்ற ஒருவகை பெரிய பறவை உண்டு. ஆணும் பெண்ணும் மதமுற்ற காலத்தில் வெளியாகும் ஒரு விதமான எச்சம் பாறைகளின் மீது தெறிபட்டுக் காய்ந்து முடிவில் சமுத்திரத்தில் அகப்பட்டுக் கரைகளில் வந்து மிதப்பது உண்டு.

இது பொன் நிறமும், சுகந்த வாசனையும் உடையது. இதை விரலால் அழுத்த மிருதுவாகவும், மின்சார சக்தியுடையதாகவும் இருக்கும். இது அதிகமாகக் கிடைப்பது அரிது. மீன் அம்பரை விட இதற்கு விலையதிகம்.

## 17. சவுட்டுப்பு (Soda Earth Impura)

களர்நிலத்தில் மழைபெய்த பொழுது அந்த நிலத்தின் சாரமெல்லாம் மழைநீரோடு கலந்து ஆங்காங்கு குட்டை குட்டையாகத் தேங்கி வெயில் படக் காய்ந்து உப்பாகப் பூக்கும். இதுவே உயர்தரமான சவுட்டுப்பாகும். இதைப் பகல் 12 மணி முதல் 2 மணிக்குள்ளாக ஓலையால் சுரண்டி வாரி எடுத்துக் கொள்ள

வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் மீண்டும் உப்பானது கசிவு தோன்றி அம்மண்ணிலேயே கலந்து கொள்ளும்.

இது சிரமமாக இருப்பின் களர்நிலத்தில் உப்பு சாரம் அதிகமாய் இருக்கும் இடத்திலுள்ள மண்ணை எடுத்து எடைக்கு நான்கு எடை நீர் விட்டுக் கரைத்து அசையாமல் 3 நாள் வரையில் வைத்து நான்காவது நாள் கலங்காமல் தெளிவு நீரை வடித்து மீண்டு இதை மை ஒத்தும் தாளில் போட்டு நிதானமாக வடிகட்டிக் காய்ச்சி எடுக்க உப்பாகும். இது சிறிது பழுப்பு நிறமாக இருக்கும். ஆயின் குற்றமில்லை. அவிழ்தங்களில் கூட்டிக் கொள்ளலாம்.

## 18. திலாலவணம் (Thela Lavanam)

இது கடைகளில் கிடைக்காது. இதைப் பின்வருமாறு வைப்பு வைத்துக் கொள்ள வேண்டும்.

எள்ளுச் செடியின் சமூலத்தை நன்றாய் உலர்த்தித் தீயிட்டு எரித்து எடுத்த சாம்பல் 32 படி அளவிற்கு ஒரு பெரிய மட்பாண்டத்தில் போட வேண்டும். அதில் 4 மடங்கு சுத்த நீர் விட்டுக் கரைத்து அசையாமல் மூன்று நாள் வைத்து நான்காம் நாள் தெளிந்த நீரை வேறு பாண்டத்தில் வடித்து அடுப்பில் ஏற்ற வேண்டும். அதில் பூநீறு, கல்லுப்பு, வெடியுப்பு, வகைக்கு படி மூன்று வீதம் பொடித்துப் போட்டுக் கலக்கி எரித்துக் குழம்பான பதத்தில் அகலப் பீங்கான் தட்டுகளில் விட்டு இரவியில் உலர்த்த உப்பாகும். அழுக்குப் படிந்த சிவப்பு நிறமாக இந்தத் திலாலவணம் இருக்கும்.

## 19. இந்துப்பு (Sodium Chloride Impura)

சிந்து நாடு, வடமேற்கு போன்ற இடங்களில் பூமிக்கடியில் இருந்து இவ்வுப்பை வெட்டி எடுப்பர். இது பார்வைக்கு அழுக்கு நிறமாகவும், உள்ளே பளிங்கு வண்ணமாகவும் இருக்கும். வாயிலிட்டால் உப்புச் சுவையோடு இருக்கும். இது தற்காலத்தில் எங்கும் கிடைக்கக் கூடியது.

### வைப்பு முறை – போகர்

சமுத்திர நீரிலிருந்து காய்ச்சி எடுக்கப்பட்ட 100 பலம் உப்பை ஓர் அடி கனத்த மட்பாண்டத்தில் போட்டு ஆலை அடுப்பின் மேல் ஏற்றிக் காடாக்கினியாக எரிக்க உப்பு உருகும். அப்போது கம்பி உப்பு பலம் - 5, படிகாரம் பலம் - 5, பூநிறு பலம் - 1 ஆக இம்மூன்றையும் இடித்துத் தூவி எல்லாம் கலந்து உறவான போது கீழ் இறக்கி ஆறவிட்டு உடைத்து உப்புக் கட்டிகளை எடுக்கப் பளிங்கு வண்ணமாக இருக்கும்.

இந்துப்பு பெண்சரக்கு. இதற்கு ஆண் சரக்கு பச்சைக் கற்பூரம்.

## 20. சிந்துப்பு (Sodium Chloride Impura Red)

இது சிவந்த உப்பு எனப்படும். இந்துப்பு வெட்டி எடுக்கும் சுரங்கங்களில் சில பாரிசத்தில் சூரிய வெப்பத்தால் தனக்குத்தானே சிவந்து பக்குவம் அடைவதுண்டு.

### வைப்பு முறை - போகர்

மலைகளில் உருவாகின்ற உப்பைத் திரட்டி ஒரு பெரிய மட்பாண்டத்தில் போட்டு உப்பின் எடைக்கு நான்கு மடங்கு நீர் விட்டுக் கரைக்க வேண்டும். 5-6 மடிப்புள்ள சீலையில் வடிகட்டி அடுப்பில் வைத்துக் காய்ச்சிக் குழம்புப் பதத்தில் பீங்கான் தட்டுகளில் விட்டு இரவியில் அரைபாகம் ஓர் அடி கனத்த சட்டியில் போட்டுப் பரப்பி முன் தயாரித்த உப்பில் 100 பலம் நடுவில் வைத்து அதன் மேல் மிகுதியுள்ள மான்கொம்புச் சீவலைப் போட்டுப் பரப்ப வேண்டும். பின் சட்டியின் வாய்க்குப் பொருத்தமான மேல் சட்டி மூடி மண்சீலை ஏழு செய்து காயவிட்டு அடுப்பில் ஏற்றிக் காடார்க்கினியாக நான்கு சாமம் எரித்து ஒருநாள் ஆற விட வேண்டும். மறுநாள் அதிலுள்ள உப்பைக் கல்வத்தில் இட்டு நன்கு அரைத்து ஒரு மண்சட்டியில் போட்டு உப்பின் எடைக்கு நான்கு எடை பனி நீர் விட்டுக் கரைத்து மூன்று நாள் வரையில் அசையாமல் வைத்துத் தெளிந்துள்ள நீரை வடித்து ஒரு சட்டியில் இட்டு அடுப்பில் ஏற்றிக் குளம்புப் பதமாகக் காய்ச்சிப் பீங்கான் தட்டுகளில் விட்டு இரவியில் வைக்க உறைந்து உப்பாகும்.

## 21. கல்லுப்பு (Sodium chloridum Impura)

சமுத்திர கரையைச் சார்ந்த சில நாடுகளில் பூமியின் கீழ் கடல் நீரூற்றுண்டாகி அங்குள்ள மண்ணை நாளுக்கு நாள் உலுக்கும்படி செய்து உப்புச் சாரம் மிகுந்து வரும். இந்த மண் மழைக்காலத்திலும், பனிக்காலத்திலும் கசிவுற்று வெயிலின் வெப்பத்தால் உப்புக் காற்றுகளாக மாறுதல் அடையும். இதைக் காலமறிந்து, பூமியை வெட்டி எடுப்பதுண்டு.

## 22. காசிசாரம் (Kasisaram)

போகர் பஞ்ச காவிய நிகண்டில் காசிசாரம், கார சாரலவணம் இருபத்தைந்தில் ஒன்றாகக் கூறப்பட்டிருக்கிறது. இது தற்காலத்தில் கிடைப்பது அரிது. இதன் பயனைப் பற்றியாவது, வைப்பு முறையைப் பற்றியாவது ஆராய்ச்சியில் கிடைக்கவில்லை.

## 23. பிடாலவணம் (Eida Lavanam)

45 பலம் சோற்றுப்புடன் ஒரு பலம் நெல்லிக்காய் வற்றல் சூரணம் கூட்டி நன்றாய் கலந்து நான்கு பங்காக வைத்துக் கொள்ளவும். பிறகு வாய் குழியான மட்கலத்தில் ஒரு பாகத்தைப் போட்டு அடுப்பிலேற்றி காடக்கினியாக எரித்து உப்பு நெருப்பைப் போல் சிவந்த போது, மற்றொரு பாகத்தைப் போட்டு எரிக்கவும். இப்படியே மற்ற இருபாகத்தையும் போட்டு எரித்து உப்பு உருகின பதத்தில் கீழிறக்கி ஆறவிட்டு மறுநாள் மட்கலத்தை உடைத்து உப்பை எடுக்கக் கருஞ்சிவப்பாக இருக்கும். இதுவே பிடாலவணம்.

## 24. அட்டுப்பு (Attuppu)

உலுத்த உவர் மண்ணை நீர் விட்டுக் கரைத்து வெடியுப்பிற்காகக் காய்ச்சித் தட்டுக்களில் விட்டு வைத்து, பின்பு கம்பி கம்பிகளாக வெடியுப்பு உறைந்து விடும். அதில் நீர் தங்கும். இதைச் சிறிது காய்ச்சி வைக்கக் கம்பி கம்பிகளாக உப்பு ஏற்படாவிடில் அந்த நீரைப் பின்னும் சிறிது நீர் விட்டுக் கலக்கி வடிகட்டி, ஒரு மட்பாண்டத்தில் விட்டுக் காய்ச்சி எடுக்கக் கட்டியாக இறுகிவிடும். இதுவே அட்டுப்பு என்றும் காய்ச்சுலவணம் என்றும் கூறப்படுகிறது.

## 25. படிகாரம் (Alumen)

இத்தாலிய நாட்டில் எரிமலைகளின் அடிவாரத்தில் படிகாரச் சத்து அடங்கலாகிய கற்கள் கிடைக்கும். இவற்றைக் கொண்டு வந்து இடித்துத் தூள் செய்து ஒரு பெரிய பாண்டத்திலிட்டு நீர் விட்டுக் கரைத்து இரண்டொரு நாள் சென்றபின் தெளிந்த நீரை வடித்துக் காய்ச்சிப் பீங்கான் தட்டுகளில் விட்டு இரவியில் வைக்க உறைந்து உப்பாகக் கட்டும். இது பார்வைக்குப் பழுப்பு நிறமாக இருக்கும், இது படிகார இனத்தில் சிறந்ததாகும். இன்னும் நேபால், பீஹார், கச்சி முதலிய நாடுகளில் உள்ள மலையடிவாரங்களில் படிகார சத்துள்ள கற்கள் சிறப்பாகக் கிடைக்கும். வெண்மை நிறமும், துவருடன் புளிப்பும் இருக்கும்.

## 26. அப்பளக்காரம் (Soda Earth - Extract)

களர் நிலத்தில் இருந்து கொண்டு வந்த உழமண்ணைக் கரைத்து இரண்டொரு நாள் தெளிய விட்டுக் காய்ச்சிக் குழம்பு பதமாகத் தட்டுகளில் விட்டு இரவியில் வைக்க உறைந்து கட்டும். அப்போது கத்தி கொண்டு குறுக்கு நெடுக்காய்ச் சதுரமாக இருக்கும்படிக் கீறிக் காய்ந்த பதத்தில் பேர்த்து எடுப்பதுண்டு. இது வெண்பழுப்பு நிறமாகவும் இலேசாகவும் நெருப்பனலில் வெதுப்பி

மஞ்சளிலிடச் சிவக்கும் காரமுடையதாகவும் இருக்கும். இதுவே தற்காலம் நமது நாட்டில் எங்கும் கிடைக்கக் கூடியது.

## 27. கறியுப்பு (Sodium Chloridum)

கடலோரங்களிலுள்ள உப்பு மண் வளப்பமுள்ள நிலத்தைச் சீர்படுத்திப் பாத்தி கட்டிக் கடல்நீரைச் சிறுவாய்க்கால் வழியாகக் கொண்டு போய் ஓர் இடத்தில் இருப்பாக வைத்துக் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக இரசாயன விதிப்படி பாய்ச்சுவர். அப்போது சூரிய வெப்பத்தினால் பாய்ச்சிய நீர் சுண்டச் சுண்ட நீரிலுள்ள உப்பானது நிலத்தில் உறைந்து உப்பாகும். மேலும்மேலும் கடல்நீரைப் பாய்ச்ச, உப்பின் சத்து மிகுந்து ஒழுங்கான பட்டைகள் மிகுந்து சிறு பளிங்குக் கற்களாகத் தோன்றும். இதிலிருந்து பக்குவமான உப்பை மட்டும் எடுத்துப் பயன்படுத்திக் கொள்வர்.

### வைப்பு முறை

தேவையான நீரைப் பெரிய மட்பாண்டத்தில் விட்டுக் காய்ச்சி குழம்புப் பதத்தில் தட்டுகளில் விட்டு வைக்க உப்பாக உறையும்.

## 28. திராட்சை உப்பு (Potassae Tartras Acida)

நன்றாகக் கனிந்த திராட்சைப் பழங்களிலிருந்து பிழிந்து எடுத்த இரசத்தைச் சுத்தமாக வடிகட்டிச் சாடிகளிலிட்டுப் புளிக்க வைப்பர். இது சில நாட்களில் கடினத் தன்மை அடையும். இதை வாலையிலிட்டுச் சாராயமாகக் காய்ச்சுவதற்கு முன் தெளிவாகத் திராட்சை இரசத்தை எடுப்பர். அப்போது அதனடியில் வண்டல் மிகுந்து வெண்மை நிறமான உப்பாகப் படிந்திருக்கும். இதைத் தட்டுகளில் இரவியில் வைக்க வெளுப்பாக நறநறவென்று இருக்கும். இது புளிப்புச் சுவையுடையது; நீரில் எளிதில் கரையாது.

## 29. சீமை இந்துப்பு (Magnesaei Sulphas)

ஆங்கில இராசயன விதிப்படி சமுத்திர நீரிலிருந்து கறியுப்பை எடுத்துக் கொண்ட பிறகு நிற்கின்ற நீரைச் சுண்டக் காய்ச்சி இந்த உப்பை எடுப்பர்.

காந்தச் சுண்ணாம்போடு காந்தத் திராவகம் சேர்த்து எடுப்பதும் ஒரு முறை.

இந்த உப்பு ஊசிக் கம்பிகளைப் போன்று நீண்டு, வெளுத்து இருக்கும். உப்பும் கசப்பும் கலந்த சுவையுடையது.

## 30. சவ்வர்ச்சல லவணம் (Sauvachla Lavana)

சௌராஷ்டிராவில் கிடைக்கும் ஒருவித மண்ணை நீரில் கரைத்துத் தெளிவு நீரை எடுத்துக் காய்ச்சிப் பீங்கான் தட்டுகளில்

விட்டு இரவியில் உலர்த்த உப்பாகும். வடநாட்டு, ஆந்திர நாட்டு மருத்துவர் இவ்வுப்பை அதிகமாகப் பயன்படுத்துகின்றனர்.

## 31. உமிலிச்சாரம் (Woomili Charam)

உமிலி என்னும் பூண்டை உலர்த்திச் சாம்பலாக்கி நீரில் கரைத்துத் தெளிவு நீரை எடுத்துக் குழம்பில் பதமாகக் காய்ச்சித் தட்டுகளில் விட்டு உலர்த்த உப்பாகும்.

தஞ்சாவூரிலுள்ள முத்துப்பட்டணம் கடற்கரையில் இந்தப் பூண்டு சிறப்பாகக் கிடைக்கும். இந்த உப்பு அவிழ்தத்திற்கும் சாயமிடுவதற்கும் பயன்படும்.

## செயநீர்

முப்பு செய்முறையில் அறுவகைச் செயநீர், அண்ட நீர், வெடியுப்புத் திராவகம் போன்றவை பயன்படுத்தப் படுவதால் அவை பற்றிய விளக்கங்கள் கீழே தரப்படுகின்றன.

## அறுவகை செயநீர்

கட்டிகளாகக் கடல் நுரையை வாங்கித் துண்டுதுண்டுகளாக உடைத்து நீர்விட்டுச் சுத்தி செய்து நெருப்பிலிட்டு ஊதின கடல் நுரை சுண்ணம் எனப்படும். இந்தச் சுண்ணத்தின் ஒரு பலத்துடன் சோற்று உப்பு, வெடியுப்பு, படிகாரம், மயில் துத்தம், பூநீறு வகைக்கு ஒரு பலமெடுத்து இந்த ஆறு சரக்கையும் கல்வத்தில் இட்டு இரண்டு சாமம் (3 மணி நேரம்) அரைத்தெடுக்க இவை இளகி மெழுகு போல் ஆகும். அதை எடுத்து ஒரு கோப்பையில் இட்டு ஒரு பக்கமாய் அப்பி, பனியில் வைக்க அது பொங்கிச் செயநீர் ஆகும். இதை ஒரு கல்கார்க்குப் போட்டுக் கெட்டியான புட்டியில் அடைத்து வைத்துக் கொள்ள இதுவே அறுவகை செயநீர் எனப்படும்.

இச்செயநீர் பாடாணங்களைக் கட்ட உதவும். இந்த நீர் விட்டு அரைத்துப் புடம் இடப் பற்ப செந்தூரங்கள் சுத்தமாக முடியும் என்கிறார் எஸ். ஆர். சங்கரலிங்கனார் (முப்பு ஆய்வு, சுவடி. 2: ஓலை. 2, ப. 3, 30-1-1993).

## அண்டச் செயநீர்

குஞ்சு பொரிக்கப்பட்ட கோழி முட்டைத் தோல் பலம் - 1. கோழி முட்டையில் ஓடுகளை அப்பளக் காரத்தைக் கரைத்த நீரிலிட்டு வேக வைத்து எடுத்துக் கொள்ளவும். பின்பு உலர்த்திக் கொள்ள வேண்டும். பின்பு இதைக் கல்வத்திலிட்டுக் கோழி முட்டை வெள்ளைக் கருவைச் சிறுகச் சிறுக வாட்டி 4 சாமமரைத்து வில்லை செய்து வெயிலில் நன்றாக உலர்த்தி உள்ளீரமில்லாமல் பார்த்து ஓட்டில் இட்டு மேலோடு மூடி 3 சீலை மண் செய்து ஒரு முழம் சதுரப் புடமிடச் சுண்ணமாகும்.

இந்த அண்ட சுண்ணம், கட்டின வெடியுப்பு, பாகப்படுத்தின பூநீறு ஆகியவற்றை வகைக்கு ஒரு பலம் எடுத்துக் கல்வத்தில் இட்டுக் கோழி முட்டை வெண்கருவை நாலு சாமமரைத்து வில்லை தட்டிக் காய வைத்து ஓட்டிலிட்டு மேலோடு மூடி 5 சீலை மண் செய்து 20 வறட்டியில் புடமிட்டுக் குளிர ஆற விட்டு எடுக்கச் சுண்ணம்.

இந்தச் சுண்ணத்துடன் கட்டின வீரம் 1 பங்கு (35 கிராம்). கட்டின நவச்சாரம் 4½ பலம் (17 கிராம்). பாகப்படுத்தின வெடியுப்பு 35 கிராம். இம்மூன்றையும் சேர்த்துக் கல்வத்தில் போட்டு 2 சாமம் அரைத்துச் செயநீர்க் குப்பியில் விட்டு வாய்ப்பகுதியை மூடிச் செயநீர்க் குழியில் பாகப்படி செய்து, 30 அல்லது 40 நாள் வைத்தெடுக்க நீராகி விடும். பின்பதனை வேறு குப்பியில் விட்டு வாய்க்கு மூடியிட்டுச் சந்திற்கு அரக்கு முதலியவற்றால் மூடி 40 நாள் வெயிலில் வைக்க வேண்டும். நாள்தோறும் 4 அல்லது 5 முறை நன்றாய் குலுக்கியும் வர வேண்டும். இவ்விதம் மேற்கண்டபடி நாற்பது நாட்கள் செய்யின் கடுங்காரச் செயநீராகும். இதற்கு அண்டச் செயநிர் என்று பெயர்.

## அண்ட நீர்

குஞ்சு பொரித்த கோழிமுட்டையின் ஓடுகளை அப்பளக் காரத்தைக் கரைத்த நீரிலிட்டு வேக வைத்து ஓடுகளில் ஒட்டிக் கொண்டிருக்கும் சவ்வுகளைப் போக்கி வேறுநீர் விட்டு நன்றாய்க் கழுவிச் சுத்தி செய்து வெயிலில் உலர்த்தி எடுத்துத் தூள் செய்து துணியால் சலித்துக் கொள்ளவும். இந்தத் தூள் 1 பங்கு, நவச்சாரம் ½ பங்கு, இந்துப்பு ¼ பங்கு ஆகிய இம்மூன்றையும் கல்வத்தில் இட்டு முன் சொல்லப்பட்ட சாரவீரிய நீரைவிட்டு 4 சாமமரைத்து ஒரு கண்ணாடிக் குப்பியில் ஊற்றிச் செயநீர்க் குடுவையில் முறைப்படி வைத்துச் செயநீராக்கிக் கொள்ள வேண்டும். இந்த நீர் சரக்குகளைக் கட்டவும் பயன்படுகிறது (முப்பு ஆய்வு, சுவடி 1. ஓலை. 6, ப. 2, 25-5-92).

## காரச் செயநீர்

இது கந்தகத்தைத் தூய்மைப் படுத்தவும், கட்டவும் பயன்படுகிறது.

பாகப்படுத்தின பூநீறு 24 பலம் (840 கிராம்), தண்ணீர் தெளிக்கப்படாத கற்சுண்ணாம்பு 12 பலம் (420 கிராம்) இவை இரண்டையும் பீங்கான் பாண்டத்தில் போட்டு அதில் 4 படி தண்ணீர் விட்டு 3 நாள் ஊற வைக்கவும். நாள்தோறும் 2 அல்லது 3 முறை ஒரு மூங்கில் குச்சியில் நன்றாகக் கலக்கி வர வேண்டும். 4ஆம் நாள் தெளிவை இறுத்து அளந்து எவ்வளவு நீர் முன் அளவிற்குக் குறைகிறதோ அவ்வளவு நீரும் அதற்குத் தகுந்த புதுநீரும் கல்சுண்ணத்தில் சேர்க்க வேண்டும். அதாவது ஒரு படி தண்ணீர் குறைந்தால் ஒரு பலம் தண்ணீரும், 6 பலம் பூநீறும் (210 கிராம்),

3 பலம் சுண்ண உப்பும் (105 கிராம்) சேர்க்க வேண்டும். இக்கணக்கின் படி முன் தெளிவுடன் சேர்த்து மறுபடியும் மூன்று நாள் வைத்து முன்போலவே நாள் தோறும் கலக்கி வர வேண்டும். பிறகு நாலாம் நாள் தெளிவை இறுத்து அளந்து முன் கணக்கின் படியே முன் நான்குபடிக் குறைந்த அளவு தண்ணீரையும் அதற்கான பூநீறு, சுண்ணாம்பு ஆகியவற்றையும் அத்தெளிவுடன் சேர்த்துக் கரைத்து 3 நாள் தெளிவை இறுத்துக் கொள்ள வேண்டும். இவ்விதம் 3, 4 முறை செய்து அந்தத் தெளிவில் கோழி இறகைத் துவைத்தால் அந்த இறகிலுள்ள முடி உதிர்ந்து விடும். இவ்விதம் ஆகாவிட்டால் மறுபடியும் முன்போலவே ஒன்றிரண்டு முறைகள் செய்து கொள்ள வேண்டும். இவ்விதம் தயார்படுத்திய நீருக்குக் காரச் செயநீர் என்று பெயர். இந்த நீரானது கந்தகத்தைத் தூய்மை செய்யவும், அதைக் கட்டுப்படுத்தவும் பயன்படுகிறது.

தற்காலத்தில் ஆங்கில மருந்துக் கடையில் உயர்தரமான பீங்கானை வாங்கி அந்தக் கிண்ணத்தில் தேவையான அளவு நெல்லிக்காய் கந்தகத்தை வைத்து அதன் மேல் நாலங்குலம் நிற்கும்படி மேற்படி காரநீரை விட்டு அதனுடன் கொஞ்சம் கறியுப்பையும் போட்டுக் கரிநெருப்பின் மீது இந்தக் கிண்ணத்தை வைக்க வேண்டும். இந்த நெருப்பானது அதிக வெண்மையுடன் வெயிலைப் போல் இருக்க வேண்டும். மேலும் அதன் வேகமானது கொதிக்கும்படியான அவ்வளவு வெம்மையானதாகவும் இருக்கலாகாது. கொதி கண்டால் உடன் நெருப்பிலிருந்து எடுத்து விட வேண்டும்.

இவ்விதம் முறைப்படி சில நாட்கள் செய்து வந்தால் அதிலுள்ள நீரெல்லாம் சுண்டிப் போகும். பிறகு கந்தகத்தை எடுத்துத் தண்ணீரில் கழுவித் தூய்மை செய்து கொள்ள வேண்டும். இரண்டாம் முறையும் முன்போலவே முன்நீர் விட்டுச் சிறிதளவு உப்பும் கூடச் சேர்த்துத் நீர்சுவர வைத்துக் கழுவித் தூய்மை செய்து எடுத்துக் கொள்ள வேண்டும். கந்தகமானது அதிக வெண்மையாக நெருப்பிற்கு ஓடாதிருக்கும். இதுவே கந்தகத்தின் தூய்மையும் கட்டுமாகும் (மேற்படி, பக். 2, 3, 4).

### வெடியுப்பு திராவகம் (குரு திராவகம்)

தூய்மை செய்த பூநீறு 10 பலமும், பெண் பிள்ளைகளின் சிறுநீர் 1/2 படியும் எடுத்துப் பூநீறைப் பொடித்துப் போட்டுக் கடுவெயிலில் வைத்து நாளொன்றுக்கு இரண்டு முறை கலக்கி வைக்கவும். இது சுண்டிய பிறகு ஒரு படி சிறுநீர் விட்டுக் கரைத்து அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து உப்பாக்கி எடுத்துக் கொண்டு, இதனை நெருப்பில் தாங்கும் பீங்கானில் இட்டு, நெருப்பில் வைத்து வறுத்து, கசிவு போக்கி எடுத்துக் கொண்டு 5 பலம் பூநீறில், நாலாம் **காய்ச்சல் வெடியுப்பு** (நான்கு முறை வாழைக்கிழங்குச் சாறுவிட்டு

அரைத்துக் காய்ச்சி ஊற்றி உலர்த்திய வெடியுப்பை நாலாங் காய்ச்சல் வெடியுப்பு என்பர்.) 10 பலம், சீனாகாரம் 20 பலம் இந்த மூன்றையும் ஒன்றாகப் பொடி செய்து திராவகம் இறக்கும் வாலையில் இட்டுச் சீலை மண் செய்து, அடுப்பிலேற்றிச் சிறுதீயாக எரிக்கவும்.

தொடக்கத்தில் புகையுடன் வெண்நிறமான நீர்வரும். இதனைப் புகைநீர், வெண்நீர்மை என்றும் கூறுவர். இந்த நீரைத் தனியேபிடித்து வைக்கவும். இந்த வெண்மை நீர் மாறி மஞ்சள் நிறமான நீர்வரும். இதனை மஞ்சள் நீரென்றும், பனிநீரென்றும், கழிவுநீரென்றும் கூறுவர். இதுவே குரு திராவகம் எனப்படும்.

******

# தட்சிணாமூர்த்தி குருமுகம் நூறு

## காப்பு

1. ஆதிவிந்து நாதமுடன் வாலைக் காப்பு
அருள் மிகுந்த அகாரஉகா ரங்கள் காப்பு
சோதிமய மாயிலங்கும் சிகாரம் காப்பு
சுகமான குண்டலியா மகாரங் காப்பு
நீதியுள சுழிமுனைக்குள் அவத ரித்த
நீலியவள் பாதமதை நிதம்பூ சித்து
பாதிமதி தனையணிந்த யீசன் பாதம்
பணிந்துயான் குருமுப்புப் பாடி னேனே.

## சிவன் தானே தட்சிணாமூர்த்தி எனல்

2. பாடினேன் அனேகநூல் பெரிதே அய்யா
பண்பாக அதிலிருந்த கற்பம் தன்னில்
கூடினேன் பரிபாசை இல்லா மல்தான்
குவலையத்தோர் பிழைப்பதற்கு இந்த நூலைத்
தேடினேன் தென்பொதிகை தனிலி ருந்தேன்
சிவன்தானும் தட்சிணாமூர்த்தி என்றார்
நாடினேன் அவர்பாதம் பணிந்து கொண்டு
நானிலத்தில் மனோன்மணியைப் பூசித் தேனே.

---

தட்சிணாமூர்த்தி குருமுகத்தில் இடம் பெறாத காப்புச்செய்யுள், நூல் அறிமுகம் ஆகிய மேலுள்ள இரண்டு பாடல்களும் கற்பமுப்பு குருநூல் என்ற நூலிலிருந்து எடுத்துத் தரப்பட்டவை.

3. மனோன்மணியாள் பாதத்தை மனத்தில் வைத்து
மார்க்கமுள்ள குருமுகமாய் வந்த நூல்தான்
வனம்பெருத்த மலைச்சார்பில் தவசு பண்ணு
மகாயோகி தன்பதத்தை வணங்கிப் போற்றி
இனம்பிரித்துச்[1] சரக்கு[2]வகை செந்தூ ரிக்க
ஏகமூலி கையதனா லெடுத்துச் சொல்வேன்
தனம்பெருத்த திரவியங்கள் செந்தூ ரம்தான்
சண்முகனார் கிருபையினால் சாற்று வேனே.

4. சாற்றுவேன் தாய்பதத்தைப் பூசை பண்ணி
தவசுபண்ணும் முனிவர்பதம் சரணம் செய்து
நாற்றிசையி லுள்ளசித்தர் பாதம் போற்றி
நன்மை சேர்ந்து . . . . . . . . . . .
ஆத்துமத்தில் குடியிருக்கும் அரனார் பாதம்
அன்புடனே தொழுதுநின்று அருள்தான் பெற்றுக்
கோத்திரத்தில் அகத்தியமா முனியைப் போற்றிக்
குருமுடிக்க வகைவிபரம் கூறு வேனே.

5. கூறுவேன் அகத்தீசர் பாதம் போற்றி
கோரக்கர் திருமூலர் கண்ணி சித்தர்
திரமான காலாங்கி ரோமன் தானும்
மாறுவேன் சுந்தரரும் இடைக்காட் டாரும்[3]
மகத்தான போகரிசி கருவூ ராரும்[4]
சீருற்ற கொங்கணரும் ராம தேவர்
சீர்பாதம் தெண்டனிட்டுச் செப்பு வேனே.

---

குறியிடாமல் தரப்பட்டுள்ளவை மூலத்தில் இருந்த வடிவம்.
* இக்குறியிட்டுக் காட்டப்படும் சொற்கள் பாடவேறுபாடுகள்.

1. பிரிந்து
2. சரகடு
3. இடைக்கட்டாரும்
4. கருவூராகும்

6. செப்புவேன் சித்தருட பாதம் போற்றிச்
செந்தூரம் பற்பமுறை **தீர்க்கம் சொல்வேன்**[*1]
அற்புதமாய்ச் சொல்லுகிறேன் **அடியேன் தானும்**[*2]
அடக்கினேன் நூறுக்குள் அறிந்து பாரு
முப்பொருளும் முடிந்த விடம்இந் **நூல்தான்**[*3]
**முக்கண்ணி**[*4] மனோன்மணியாள் எனக்குச் சொன்னாள்
தப்பிதங்க ளில்லையடா இந்த **நூலில்**[*5]
தாய்சொன்னாள் நான்சொன்னேன் தரணி யோர்க்கே

7. தரணியிலே நீயிருந்து தாயைப் பூசி
சற்குருவை மறவாமல் **சரணம் செய்து**[*6]
பரணியிலே வைத்திருந்த செந்தூர **மதனைப்**[5]
பார்வதிக்கு ஒப்பித்தந்தான் **அன்பாக**[6] நன்று
அருள்நிற மானதொரு செந்தூ ரத்தை
ஆறறிவார் வையத்தில் ஐயா ஐயா
வர்ணமுள்ள செந்தூரம் வாங்கி யுண்டால்
மலைபோல வந்தவினை[7] வாங்கும் தானே

## குருமுடிக்க விபரம்

8. தானென்ற குருமுடிக்க வகையைக் கேளு
சற்குருவின் அருளாலே சாற்று வேன்கேள்
தேனென்ற கல்லதுதான்[8] துய்ய வெள்ளை
செகத்திலே **ரொம்ப**[*7]வுண்டு தேடிப் பார்த்தால்
ஊனென்று ஒருவருக்கும் பொருள்தோ ணாது
உனக்குவிதி யிருந்தாக்கால் உடனே வாய்க்கும்
ஏனென்ற **கல்லது**[9]தான் எங்கே என்னில்[*8]
இருக்குமிடம் சொல்லுகிறேன் இனிதாய் கேளு

---

5. மகன்
6. தந்தான்பாக
7. வனை
8. தாய்
9. நல்லது

1* தன்னைச் செய்ய
2* முப்பு தன்னை
3* அப்பா
4* முக்கண்ணன்
5* நூலை
6* ஏற்றிப் போற்றி
7* மிக
8* என்றால்

9. கேளப்பா **ஊரடுத்து**[*9] மெத்த வுண்டு
கிடையாமல் **போவதுண்டோ**[*10] கதியுண் டானால்
ஆளப்பா யில்லாக்கால் காடு தோறும்
ஆரூபமா யிருக்குமடா அறிந்து பாரு
**நாளப்பா**[10] நாட்டினிலே ரொம்பு வுண்டு
நாடினால் கிடைக்குமடா நலம்பெற் றோர்க்கு
வாளப்பா மலையாதே மயங்கி டாதே
மண்டையிலே எழுதினது **பிரம்மம்**[11] தானே

10. பிரமமென்றும் வெள்ளையென்றும் பேத மென்றும்
பேரான[12]க்கல் சுண்ணமென்றும் விந்து வென்றும்
தருமத்துக் கோடெடுத்த கபால மென்றும்
<u>சங்கரனார் மண்டையென்றும் கல்தா னென்றும்</u>
வர்மத்தால் காளியுட கோட்ட மென்றும்
மகாமேரு கிரியென்றும் மாக்கல் என்றும்
செருமித்த சிகார[*11]மென்றும் சிரவோ டெ[*12]ன்றும்
தேச[13]மெங்கும் முளைத்தவெள் ளைக்கல் **லென்பாரே**[14]

11. கல்லென்றும் மலையென்றும் கபால மென்றும்
**கருவின்**[15]நிலை யிதுவென்றும் **கருத்தா வென்றும்**[*13]
அல்லடா அரனெடுத்து அமுது வாங்கி
அரனாண்ட படியாலே அரனென் **றாச்சு**[16]
சொல்லடா பலவிதமாய் **பகர்ந்தே**[*14] ஐயா
சூட்சமெல்லாம் **கண்டுநான்**[*15] சுருக்கிச் சொல்வேன்
புல்லடா முளையாத விடத்தி லேதான்
**பிறக்கு**[17]மடா வதன்பொருளைப் பேசு வேனே

12. பொருளென்ன அருளென்ன பூமி யென்ன
பொங்கிநின்ற உவருப்பு பிரம வெள்ளை

---

10. நாடப்பா
11. பிர்மம்
12. பேராக
13. தேக
14. லென்பரே
15. கருவி
16. னாச்சு
17. பிறங்கு

9* ஊரடுக்க
10* போவதில்லை
11* சிகரம்
12* சிறுவீடு
13* கூறுவார்கள்
14* பிரிந்து
15* தான்

கருவெள்ளை யிதுதாண்டா மயங்கி டாதே
கண்டபின்பு ஒருவரிடம் கருச்சொல் லாதே
தெருவிலே நில்லடா அலைந்தி டாதே
சிறுபிள்ளை புத்தி கொண்டு திறந்தி டாதே
உருவென்ன தெரியாதோ*16 உனக்குச் சொன்னால்*17
ஓடென்றும் மண்டையென்றும் உரைக்க லாச்சே[18]

பிரமக்கல் சுண்ணம்

13. உரைக்கிறேன் பிரமத்தை*18 எடுத்து வந்து
ஒழுங்கான கல்லுரலில் இட்டுக் கொண்டு
வரைபோன்ற*19 இரும்புலக்கை[19] யதனால் குத்தி
மாப்போல யானபின்பு வாரிக் கொண்டு
குறையில்லாச் சட்டியிலே போட்டு நீயும்
குமறவிட்டு சுத்தசலம் குளிர வூற்று
முறையோடே ஒருநாள்தான் ஊறிற் றானால்
முத்துப்போ லிறுத்[20]துவிடு தண்ணீர் போமே

14. தண்ணீர்தான் போனபின்பு மறுநீர் வாரு
சாதகமாய் மறுநாளும் சாய்த்துப் போடு
புண்ணியனே*20 யிப்படியே பத்து*21முறை யானால்
போட்டிடுவாய் ரவிதனிலே பொருமி நீரும்
கள்ளி*22யென்ற பழச்சாறு முங்க[21] விட்டுக்
கடுரவியில் போட்டுவிடு காற்றா டாமல்[22]
மண்ணிலே பிறந்தவுப்பு உவரு[23]ப் பாச்சு
மகத்தான வழலையுப்பு[24] மார்க்கம்[25] தானே

15. மார்க்கமுடன் எடுத்துஇந்த உப்பை நல்ல
வாயகண்ட பீங்கானில் வாரிக் கொண்டு

---

18. உரைக்காபிச்சே
19. இருப்புலக்னக
20. விருந்து
21. முங்கி
22 காற்றுடாமல்
23. உபரு
24. யுப்ப
25.

16* தெரிந்து கொள்ளு
17* தானும்
18* பிரமக்கல்
19* வரைக்குகின்ற
20* பண்ணி
21* தசம்
22* கன்னி

மூர்க்கமுள்ள பழச்சாறு நிரம்ப விட்டு
மூட்டுவாய் அடுப்பினிலே **தீபம்**[26] போலே
பார்க்குமுன்னே வெந்துநல்ல சுண்ண மாச்சு
பரிசு கெட்ட யெண்ணையெல்லாம் பறந்து போச்சு
ஆர்க்குமிதைச் சொல்லாதே அதிக வெள்ளை
**அடங்காத***[23] **முப்பு**[27]வும் குருவு மாச்சே

16. ஆச்சிந்த முப்புவை எடுத்துக் கொண்டு
அடங்காத சரக்கெல்லாம் அடக்க லாம்கேள்
வாச்சென்ற உப்புக்குப் பெயரே தென்றால்
வழலையென்றும் விந்துவென்றும் ஆதி யென்றும்
காச்சிந்த வுசிதமென்றும் உவருப் பென்றும்
கரையோரம் வளர்ந்திருந்த கல்லுப் பென்றும்
ஆச்சியின்றன் கோவிலென்றும் அரனா ரென்றும்
அநேகநூல்*[24] சாத்திரங்கள் பேசும் தானே

## முப்புகுரு சேர்க்கும் முறை

17. தானென்ற இந்தஉப்பு குருவு மாச்சு
சகலவிதச் சரக்குகட்கும் தாக்கிப் பாரு
வானென்ற இந்தஉப்பை வாய்நீர் விட்டு
மத்தித்துச் **சரக்குதனில்***[25] பூசிக் கொண்டு
கோனென்ற மூலிகைதான் யேக மூலி
குகைபிடித்துப் புடம்போடு செந்தூ ரிக்கும்
தேனென்ற **பற்பமுமாம்***[26] செந்தூ ரிக்கும்
செகமெலா மாடுகிற குருவி தாமே

18. குருவிலே **பண**[28]விடைதா னெடுத்துக் **கொண்டு***[27]
குளிகைக்கும் செந்தூரப் பற்பத் துக்கும்
பருகிவிடு லேகியம்தான் ரசாய **னங்கள்**[29]
பத்திரமாய் மாத்திரைக்கும் கசாயத் **தோடு***[28]
மருகிவிடு சூரணங்கள் தைலத் துக்கும்
மாட்டிவிடு பணவெடைதான் மருந்து சித்தி.
குருவிலே செந்தூரம் செய்யு மார்க்கம்
குருவுடைய கடாட்சத்தால் கூறு வேனே.

---

26. தீயம்
27. முப்ப
28. மறை
29. எசாயளங்கள்

23* யாகுமிந்த
24* வகை
25* சரக்குகளிற்
26* பற்பமுதல்
27* கொள்ளு
28* துக்கும்

## சவ்வீர பற்பம்

19. கூறுவேன் சவ்வீரம் கட்டி யாகக்
கொண்டுவந்து சுத்திசெய் தெடுத்துக் கொண்டு
பேறுபெத்த[*29] அப்பை[30]யுட மூலம் வாங்கி
பேசாதே குகைபோல அறுத்துத் தோண்டி
மாறுவேன் குகைக்குள்ளே சவ்வீ ரத்தை
வைத்துமே கிழங்காலே வாயை மூடி
சீராகச்[*30] சீலைசெய்து புடம்தான் போடு
திரமாகக் குக்குடத்தில் வெள்ளை யாமே.

## சவ்வீரச் செந்தூரம்

20. வெள்ளையென்ற சவ்வீர பற்பம் தன்னை
மேதினியோர் தங்களுக்கு விள்ளா தப்பா
பிள்ளைகளே செந்தூரம் செய்ய வென்றால்
பெருமையுடன் சொல்லுகிறேன் புதுமை மெத்த
மெள்ளவே பற்பமெல்லாம் பீங்கான் சேர்த்து
மேல்மருந்து முசுமுசுக்கைச் சாறு விட்டு
அள்ளவே பிசறியல்லோ ரவியில் போட்டால்
அருணநிற செந்தூர மாகும் தானே

21. தானென்ற செந்தூர பற்பம் தன்னைத்
தயவாகப் பணவிடை தாமெ[*31]டுத்துக்[31] கொண்டு[*32]
தேனென்ற சிறுதேனில் சேர்த்துக் கொண்டால்
தீராத சூலை[32]முதல் குன்ம வாய்வு
கானென்ற கால்முடக்கம் பறங்கி மேகம்[33]
கைகாலில் கறுப்புவெள்ளை காது மந்தம்
ஊனென்ற உடம்பெல்லாம் புள்ளித் தேமல்
உள்ளி[34]ரணம் வண்டுக்கடி ஓடும்[35] தானே

---

30. அம்மை
31. தாமிளடுத்துக்
32. ஆலை
33. வேகம்
34. உன்னி
35. வூடும்

29* பெற
30* சீறுபெற
31* தாம்
32* நீயும்

## கந்தகப் பற்பம்

22. ஓடுமடா இன்னமொன் றுரைப்பேன் கேளு
உற்றகந்திப் பற்பமடா உரைக்கப் போமோ
தேடு[36]கின்ற சிறுபீளை[37] யிலைய ரைத்துச்
சிறுகுகைபோ லுண்டுபண்ணிச் சீலை செய்து
கூடுகின்ற கந்தகத்தின் கட்டி மேலே
குருபூசி வாய்நீரில் குகைக்குள் வைத்து
மூடுவாய் சில்மூடிச் சீலை செய்து
மூன்றெருவில் புடம்போடு முதிர்ந்தி டாதே*[33]

23. திடமான கந்தகத்தின் **பற்பம்**[38] தன்னைத்
தேனிலே நெல்லிடையாய்க் கொண்டு வாநீ
**படபடவென்று**[39] திரியாதே **பத்தியமே தான்கொள்ளு***[34]
பாலாகும் நெய்யாகும் **பாசிப்பயிறு**[40] மாகும்
அடங்காத புள்ளிமே கம்போம் வாதம்
அறையாப்பு சிறுசிரங்கு அண்ட வாதம்
முடக்குவலி வாதவலி முழங்கால் வாதம்
முழிமுழிக்குக் கட்டுகிற சூலை போமே

24. சூலைபோம் பதினெட்டு குட்டம் போம்
சொறிசிரங்கு செங்கரப்பான் தொல்லை வாய்வு
காலையே முடக்கிவைக்கும் மேக வாய்வு
கண்புகைச்சல் கண்சிகப்பு கண்ணீ ரோட்டம்
**வாலை***[35]யிலே வந்தடக்கும் சயமாம் காசம்
மாரடைப்பு குத்துகிற வலியும் தீரும்
தோலையெல்லாம் **சுருக்க***[36] வைக்கும் மேகநீரும்
தொண்டையிலே புண்ணாகும் மேகம் போமே.

## சிலாசத்துப் பற்பம்

25. மேகம்போம் இன்னமொரு பற்பம் கேளு
விள்ளுகிறேன் **சிலாசத்துக்***[37] கட்டி வாங்கிப்

---

36. தேறு
37. பிழை
38. பற்படம்
39. படுபடுடென்று
40. பமாறு

33* மறந்திடாதே
34* பத்தியங்கேள்
35* மாலை
36* கருக்கி
37* சலாசத்து

பாகமென்ன வாய்நீரால் குருவைப் பூசி
பதியவொரு சுண்ணாம்புச் சீலை சுத்தி
வேகமுள்ள குக்குடமாம் புடத்தைப் போடு
வெந்தாறி நீறியது வெள்ளை யாகும்
கூகைநீர் போலவுமே வெள்ளை யானால்
கொடுப்பதற்கு அனுபானம் வெந்நீ ராமே

26. வெந்நீரில் கொண்டவுடன் வினைகள் போச்சு
மிக்கமல சலமடைப்பு விட்டுப் போச்சு
கண்ணிலே காசநீர் புகைச்சல் போச்சு
காயமடா வச்சிரம்போல் திரேக மாச்சு
எண்ணியதோர் வாயில்நின்ற ரோகம்[41] போச்சு
ஈளை[42]யது தொண்டைவலி இருமல் போச்சு
விண்ணிலே வந்ததொரு வாய்வு போச்சு
மேனியெல்லாம் கற்பூர தேக*[38] மாச்சே

## தாளக பற்பம்

27. ஆச்சப்பா இன்னமொரு பற்பம் கேளு
அரிதாரம் வெள்ளையடா யார்தான் செய்வார்
போச்சப்பா நாயுருவிச் சாம்பல் வாங்கி*[39]
மெய்ஞான*[40] அமுதப்பால் விட்டே ஆட்டி
மூச்சப்பா குகைபோலே செய்து கொண்டு
முன்போலே குருபூசி குகைக்குள் வைத்து
வீச்சப்பா சீலைசெய்து காய்ந்த தானால்
வெற்றியுள்ள குக்குடத்தில் வெள்ளை யாமே

28. வெள்ளையென்ற தாளகத்தைப் பணவிடை யாக[43]
மாறாமல் கொண்டுவர*[41] யேழு போது
சள்ளையென்ற சயரோகம் வாந்தி*[42] ரத்தம்
சங்கிலி போல் பின்னிவிழும் சிலேற்ப னங்கள்
மெள்ளமெள்ள வந்தடுக்கும் ஈளை காசம்
மிக்கதொரு உளமாந்தை மேனி வத்தல்
கள்ளனைப் போல் வந்தடுக்கும் கபரோ கங்கள்
காசமெனப்[44] பட்டதெல்லாம் காணா தென்னே

---

41. யோகம்
42. ஈனை
43. விடையாத்
44. மென்ன

38* வாச
39* ஆக்கி
40* பொன்னான
41* மிகத்தேனி லுண்பீரேல்
42* கபமாம்

29. காணாது முறைகாச்சல் ஈளை **மாந்தம்**[45]
காமாலை பெருவயிறு **கண்ட மாலை**[*43]
வாணாளை **ஆட்டி**[*44]வைக்கும் வலிகுன் மங்கள்
வாந்திபண்ணும் சத்திகுன்மம் வயிற்று நோயும்
ஊணாக உருக்கிவைக்கும் உள்ரோ கங்கள்
உளமாந்தை வெளிமாந்தை **உமிழ்**[46]நீ ரோட்டம்
வீணாகப் **பற**[47]ந்தோடும் தாளகத்தைக் கண்டால்
மேனியெல்லாம் தங்கநிற மாமே

வங்கபற்பம்

30. எண்ணலாம் **வங்க**[48]பற்பம் சொல்லக் கேளு
**இருநிலத்தில்**[*45] சொல்லாதே வீண்பே ருண்டு
வண்ணமுள்ள வங்கத்தைத் தகடாய் **வாங்கி**[*46]
வைத்திடுவாய் குழிக்கல்லில் வயண மாக
அன்னமுள்ள ஆலம்பால் தன்னி லூறி
ஆறியபின் **பொத்தியதை**[*47] மெழுகு மாகும்
பின்னமில்லா வில்லைதட்டிக் காய வைத்து
மேலோடு மூடிநன்றாய் காய வையே

31. காய்ந்தபின்பு வராகபுடம் போட்டீ ரானால்
**கரு**[49]வங்கம் நீறியல்லோ வெள்ளை யாகும்
சாய்ந்துநீ திரியாதே **சவங்க ளாகத்**[*48]
தனிப்பசுவின் வெண்ணையிலே தானே கொண்டால்
பாய்ந்ததடா தாதுவெல்லாம் பற்ற யேறி
பாசிபற்றும் சூலைமுதல் பறங்கிப் புண்ணும்
தேய்ந்ததடா வியாதியெல்லாம் திரேகம் பொன்னாம்
சீவிமுதல் பிரமியங்கள் ரத்தம் போமே

32. ரத்தம்போம் ரணங்கள் போம் நடுக்கல் போம்
ரணமில்லாப் பிரமியங்கள் நாச மாகும்

---

45. மந்தம்
46. உமி
47. பறி
48. வள்ள
49. கடு

43* கண்மயக்கம்
44* யோட்டி
45* யாவருக்கும்
46* தட்டி
47* கட்டியரை
48* கருச்சொல்லாதே

வத்திநின்ற தாதுவெல்லாம் முறம*49 தாகு
மாணியிலே புண்புறைகள் வாங்கிப் போகும்
அஸ்தியிலே எண்புருக்கி அண்டச் சூலை
அடிவயிற்றுச் சுருக்குவலி ஆணிப் புத்து
நெற்றியிலே கல்லைவைத் திறக்கி னால்*50போல்
நிமிசத்தில் தீருமடா நிசம்சொன் னோமே.

33. நிசமாகும் முன்குருவை மறந்து போனால்
நீறாது என்ன*51பட்டும் நிசமா காது
அசைவறவே ஆதியென்ற ஈசன் வித்தை[50]
ஆரறிந்து செய்வார்க ளானால் கேளு
குசமசக்காய் சொல்லவில்லை கூர்ந்து பாரு
குளிர்ந்தரசம் பதின்கழஞ்சி கல்வத் திட்டுத்
திசைநாதம் பொற்கற் பூர வள்ளி
சேர்த்தரைக்க இலைசமனாய் சேர்ந்து போமே

## இரசபற்பம்

34. சேர்த்தரை[51]நீ சாமமிரண் டரையில் சேரும்
தெள்ளுப்போல் வில்லைதட்டி ரவியில் போடு
வாத்துதடா புத்தோட்டில் வைத்து நல்ல
வளையம்போல் ஓலைவைத்து வன்மை யாக
நாத்துளைக்கும் நாயுருவி விதையைக் கொட்டி
நயமாக மூடிநன்றாய் எருமேல் வைத்துச்
சேர்த்துநன்றாய் எருவடுக்கிக் குக்குடம்போ லாயின்
தீயிட்டுப் புடம்போடச் செம்மை யாமே.

35. செம்மையுள்ள பற்பமடா ஆத்தாள் சொன்னாள்
செகத்தோர்க்கு வந்தபிணி தீர்க்க லாம்கேள்
திண்மையெல்லாம் தீரு[52]மடா சூதத் தாலே[53]
செய்பாகம் தப்பாமல் செய்து பாரு
ஆண்மையடா*52 மெத்தவுண்டு வியாதி தீர்க்க
அஞ்சார்கள்*53 சூதபற்ற மிருந்து தானால்
வன்மையுள்ள வைத்தியர்கள் செய்தா லும்தான்
வாராது வாய்ச்சூலை கட்டும் தானே.

---

50. விந்தை
51. தாரை
52. நீரு
53. தடலே

49* முறிப்ப
50* தாக்கினால்
51* பாடு
52* நன்மையடா
53* நலமான

36. கட்டாத பற்பமிது நல்ல பற்பம்
காசினியோர் தங்களுக் குத்தோ ணாது
வெட்டலாம் வியாதியெல்லாம் ரசவா ளாலே
வேதையுண்டு அறிந்தோர்க்கு வியாதி தீரும்*[54]
பட்டமரம் பால்சொரியும் இதனால் மக்காள்
பகருவேன் வைத்தியங்கள் பார்த்து வாநீ
குட்டம்போம் குன்மம்போம் குறைநோய் போகும்
குடல்வாதம் சூலைவலி குன்மம் போமே[54]

37. போமென்ன புண்புரைகள் பொல்லா மேகம்
புத்துகளாய் வெடித்ததெல்லாம் போகும் பாழாய்
ஆமென்ற அண்டத்தில் அரையில் புத்து
அடங்காத மேகவெட்டை யாணிக் குத்தும்
வாமென்ற வாயுதடு நாவு தொண்டை
மண்டையெல்லாம் புண்ணாக்கி வலிக்கும் மேகம்
காமென்ற கைகாலில் குடைச்சல் வீக்கம்
கருவயிற்றில் கட்டிமுதல் கரைந்து போமே

38. கரைந்துபோம் லிங்கத்தில் புண்புத் தானால்
கைகாலில் சூலைமுதல் கண்வீக் கங்கள்[55]
விரையோடே வலிகண்டம்*[55] அண்டம் சோர்ந்து
வீங்கியல்லோ நீரடைத்து மலமும் கட்டிப்
புரையோடிச் சீவிழுந்து புண்ணு மானால்
பொல்லாத மேகமெல்லாம் போகும் சொன்னேன்[56]
இறையளவு தப்பில்லை யிந்த நூலில்
இன்னமுண்டு சொல்லுகிறேன் இனிது பாரே.

39. பாரப்பா பண்டிதங்கள் பார்க்க வென்றால்
பார்தனிலே வெகுவாகப் பருத்துப் போச்சு
சீரப்பா செந்தூரம் செய்வோ றில்லை
திருடரையா வைத்தியர்கள் மெத்த வாச்சு
ஆரப்பா அறிவார்கள் குருவின் போக்கு
அறிந்தவர்கள் மனத்துக்குள் அடக்கம் செய்வார்
நேரப்பா போக்கறியா வைத்திய ரெல்லாம்
நேரம் சொன்னதினால் வருமோ சொல்லே

---

54. போலே
55. களவீக்கம்கள்
56. சொன்னோள்

54* மிகவும் லாபம்
55* கண்டு

## பொதிகை

40. வந்தவகை யெந்தனுக்கு[57] மார்க்க மென்ன
மனோன்மணியாள் கடாசத்தால் வந்து தையா[58]
கந்தனுடைய கிருபையினால் கடாட்சத்[59] தாலும்
காசினியில் சித்தனென்று பேரும் பெற்றேன்
எந்தனுட[60] ஆசான்பேர் சொல்லக் கேளு
இனிதான பொதிகையிலே இருப்பா ரையா
சந்தானம் பெற்றிருப்பார் தவங்கள் செய்வார்
சதாசிவமூர்த் தியைப் போல் தவம்செய் வாரே.

41. தவம்செய்த சற்குருவைச் சர்ணம் செய்தேன்
சடாதாரச் செய்கையிலே தவங்கள் பெற்றேன்
நவகோடிச் சித்தரையும் பணிந்து கொண்டேன்
நந்தியெனக் குபதேசம் நல்கி னாரே
பவமான பாவங்களெல் லாம்தீர்ந் தையா
பத்திமுத்தி யாகவுமே பரத்துக் காளாய்
சிவமாக என்குருவும் இருக்கும் தானம்
தென்மேற்கு மூலையடா பொதிகை தானே

42. பொதிகை தனில்வாழும் சித்த ரப்பா
பூரணா னந்தருட பிள்ளை யானும்
அதிகமாய்ப் பொதிகைமுனி எனக்குப் பாட்டன்
ஆதியென்ற புலத்தியர்க்கு மூன்றாம் பேரன்
மதிமிகுந்த மகத்தில் ராம தேவர்
மலைச்சார்பு கடலோரம் வராக[61] மூர்த்தி
இதமுடைய என்னுடைய நாலாம் பாட்டன்[62]
இறங்கிமனம் களிந்தல்லோ எடுத்தா ரென்னை

43. எடுத்தவர்கள் அருமைகொண்டு எல்லா மீய்ந்தார்[63]
ஏகாந்த மனோன்மணியாள் எதிரே நின்றாள்
துடுக்கான வித்தையெல்லாம் சொன்னாள் ஆத்தாள்
சுருதிமுடி யனுபோகம் சூட்சமம்[64] சொன்னாள்

---

57. யெனதனுக்கு
58. வந்துதை
59. கடாகடித்
60. என்தனுட
61. வாரார்
62. பாட்டான்
63. மிந்தார்
64. சூக்ஷமம்

எடுப்பதற்கு வெண்சாரை முதலா மென்றாள்
இனியகரு நெல்லிசத்தி இரண்டா மென்றாள்
அடுக்குமடா கைலாச கிரிமூன் றாச்சு
ஆதியென்ற சிறுபீழை[65] கடுக்காய் தானே

44. கடுக்காயைச் சொல்லியல்லோ தொட்டுக் காட்டிக்
கைபாகம் இன்னதென்று கருவும் சொல்லி
முடுக்கான ஐங்காய முறையுஞ் சொல்லி
மூவருக்கும் பேர்சொல்லி முகூர்த்தம் தொட்டு
எடுப்பதற்கு முறையோடே இதுதா னென்று
எண்ணிமனம் சலியாமல் ஏங்கி டாமல்
தொடுத்தமுறை தவறாமல் தொட்டுக் காட்டிச்
சுயராம தேவனென்று சொன்னார் பாரே

45. பாரப்பா **எனையடிமை**[66] கொண்ட மூர்த்தி
பதியான மகத்தில் ராம தேவர்
ஆரப்பா அறிவார்கள் அந்த ரங்கம்
ஆதிமக ரிசிக ளறிந்தே னையா
**தூரப்பா**[67] தொட்டல்லோ முடிவு மட்டும்
சொன்னார்கள் சோம்பலுக்கே சித்த ரெல்லாம்
பேரப்பா அவருடைய பிள்ளை யாகிப்
பெருமை பெற்றேன் பேரின்பம் பேசினேன்

46. பேசினேன் இந்தநூல் நூறுக் குள்ளே
பிரபலமாய் செந்தூர பற்ப மெல்லாம்
**வீசினேன்**[68] கர்பத்தி னேர்மை எல்லாம்
விதியாளி யானாக்கால் வினைபடத் தோனும்
தூசிபோல் பறக்குமடா வியாதி யெல்லாம்
சோலியில்லை செய்வதற்குச் சூட்ச மையா
வேசியர்கள் ஆசைவிட்டுக் கற்பம் கொள்ளு
**வேதாந்த**[69] மனோன்மணியைப் பூசிப் பாயே.

---

65. பிள்ளை
66. ஏனையடுமை
67. தூரு
68. வீசிறேன்
69. வேதார்த

## ஐங்கோல கற்பம்

47\. பூசித்த புண்ணியர்க்கு எல்லாம் சித்தி
பொய் சொல்லாள்*[56] பத்தினியைப் பூசி பூசி
காசிக்கு வழியெங்கே தடம்தா னெங்கே
கண்புருவ மத்தியிலே காசி வாசி
தேசிக்கு விலாசமப்பா அகண்ட வீதி
தெருநாலும் வீதிக்குள் தேசி மீட்டி*[57]
வாசிவசி வசியென்று குதிரை கட்ட*[58]
வல்லவனே யானாக்கால் மதிப்பா லுண்ணே

48\. மதியமுத முண்பதற்கு மயக்க மென்ன*[59]
வல்லாரை கொள்வதற்கு வருத்த மென்ன*[60]
உதவாதோ*[61] உங்களுக்கு விதியுண் டானால்
உள்ளபடி நல்லகற்ப முரைப்பேன் கேளு
சதி*[62]காலம் வந்ததென்றால் பார்த்து வாநீ
சங்கையில் லாதிருந்தால் நல்ல தாச்சு
உதயாதி யானாக்கால் மெத்த நன்று
உத்தமனே மாலையென்றால் ரண்டாம் பட்சம்[70]

49\. பட்சமென்றால் நல்லதடா பார்த்து வாங்கு
பசளையென்ற பேராச்சு பாவி மாக்காள்
அச்சமொன்றும் நினையாதே கோரை போக்கி
அறுத்திடுவாய் வாளாலே அறுத்து நல்ல
எச்சாண கல்லுரலில் பசளை போட்டு
இரும்புலக்கை யதினாலே இடித்துக் கொண்டு
மெச்சுமிந்தத் தரணி*[63]யிலே தோண்டும் போது
மேலான அமுரியடா படிநா லாமே*[64]

---

70\. பக்ஷம்

56* சொல்லாதே
57* மாட்டி
58* யேறி
59* காயசித்தி
60* எல்லாம் சித்தி
61* உதவுகின்ற
62* ததி
63* பானை
64* நாலுவாரே

50. நாலுபடி அமுரிவிட்டு அடுப்பி லேற்று
நலமான பசளைக்குப் பாதி சூடம்
மேலுமதைப் பொடித்துவிடு கலக்கி நல்ல
விநாயகருக்குப் பூசைபண்ணி அனலை மூட்டிப்
**பாலடுப்புப்**[71] போலையல்லோ அனல்மீ றாமல்
பத்திரமாய் பிடியாமல் துடுப்பால் கிண்டு
வாலுகையாம் அடுப்போடே இருக்கும் போது
மளமளென்று கொதியெழும்பும் வருமே நெய்யே

51. வருகிறதைப் பதம்பாரு[72] கடுகின் மேலே
வருகுமய்யா நெய்மிதக்கும் வடித்து வாங்கு
முருகாமல் **புஷ்டி**[73]யெல்லாம் வேறே வாங்கு
முழிக்காதே **முறைதப்பிச்**[*65] செய்தி டாதே
நிருவாணப் பூசையது நினைவாய் செய்து
நீங்காத சிவயோகம் நிஷ்டை கூடிப்
பிரிக்காதே படிநெய்யும் வெவ்வே றாகப்
பிசகாமல் பீங்கானில் பதனம் பண்ணே.

52. பதனம்வெகு பதனமடா சூதா **ணந்தான்**[74]
பத்திரமாய் வைத்தபின்பு பாகம் கேளு
விதமென்ன வீரமுடன் சாரம் சேர்ந்தால்
மேலினைக் கற்பமடா **விளங்கொண் ணாது**[*66]
அதுவென்ன விதுவென்ன வென்று எண்ணி
அலையாதே **அலை**[*67]யாதே ஐயா ஐயா
விதியென்ன இதுதாண்டா அறிவாய் நீயும்
வெளிவிடாதே இருந்தால் வேதை யாமே

53. ஆமென்ற **ரேசக**[75]பூர கந்தான் பண்ணு
அசையாமல் கும்பகத்தில் நின்று கொண்டு
தாமென்ற தைலத்தை முன்னே கொள்ளு
சாதகமாய் புஷ்டிதனைப் **பின்னே கொள்ளு**[*68]

---

71. பாலப்பு
72. பாகி
73. பிஷ
74. தன்
75. மேசக

65* யிரண்டு மொன்றாய்
66* விண்கொள்ளாது
67* மலை
68* கரண்டிவீதம்

ஓமென்ற இருவேளை கொள்வ தற்கு
இத்தோடே கொள்வதற்கு இனிநீ கேளு
காமென்ற காலையிலே **தைலம்**[76] உண்ணு
கடந்தபின்பு மாலையிலே புஷ்டி **கொள்ளே**[*69]

54. புஷ்டிதனைக் கொண்டதினால் பலமுண் டாச்சு
**பெருமையுள்ள**[*70] தைலத்தால் அழகுண் டாச்சு
எட்டிவந்த **நரைதிரையும்**[77] ஏகிப்[*71] போச்சு
எமனென்ற வார்த்தையிது **மிறந்து**[78] போச்சு
**விட்டில்லா**[*72] திரேகமெல்லாம் சட்டை வாங்கும்
மேல்கொள்ள வகையதுதான் யார்க்கும் தோணா
மட்டில்லா **சட்டையொன்று**[*73] உறிந்த தானால்
வைரமடா உன்திரேகம் வலுத்துப் போச்சே

55. போச்சுதே **பிரமனுட**[*74] லிபியும் போச்சு
பொன்போலே திரேகமெலாம் மின்ன லாச்சு
வாச்சுதே திரேகசித்தி வாய்த்துப் போச்சு
மரணமொரு **நாளுமில்லா**[79] மார்க்க மாச்சு
ஆச்சுதே அந்திசந்தி யுண்ட **தாலே**[80]
அச்சாணிக் கம்பமெலாம் இறுகிப் போச்சு
**பேச்சொன்று**[81] மில்லையடா இனிமே லென்ன
பேரின்பக் கூத்தாச்சு பேணிப் பாரே.

## சவ்வீர மெழுகு

56. பாரேநீ தைலத்தில் வாதம் சொல்வேன்
பார்வதித்தாய் **எந்தனுக்குப்**[82] பகர்ந்த வித்தை
தாரேநீ சவ்வீரக் கட்டி வாங்கித்
தைலத்தில் தோய்த்தல்லோ ரவியில் காய்ந்தால்
பேரேநீ புஷ்டிதனைக் கவசம் செய்து
பின்னுமந்த மண்சீலை **பிலக்கச்**[*75] சுத்தி
மீறாமல் ரவிதனிலே காய்ந்து தானால்
விளக்கிலே வாட்டிடவே மெழுகு மாமே

76. தாம்
77. தின்றே
78. மிதந்து
79. மில்லை
80. தாலோ
81. சென்று
82. என்தனுக்கு

69* கொள்ளே
70* புகழான
71* ஓடி
72* வட்டுப்போல்
73* சட்டையது
74* பிரமனிட்ட
75* வலுவாய்

57. ஆமென்ற மெழுகெடுத்துச் சிப்பி*76தனில் வைத்து
அரனடியைச் தான்தொழுது அன்பு கூர்ந்து
தாமென்ற தங்கத்தைத் தகடாய் தட்டித்
தனிபோக்குப்*77 பொடிசெய்து நறுக்கி வாங்கி
ஏமென்ற இம்மெழுகில் பத்துக் கொன்று
இப்பொடியைச் சேர்த்துநன்றாய் ரவியில் போடு
நாமென்ற சவ்வீரம் தங்கத்தைத் திண்ணும்
நல்ல மெழுகு காயிருக்கும்[83] நன்மை யாமே*78

58. நன்மையுள்ள மெழுகெடுத்து நவலோ கத்தில்
நாட்டினால் நாலாறு மாத்துக் காணும்
செம்மையுள்ள ஏழையடா இந்தப் போக்குச்
செய்பாகம் தப்பாமல் செய்து பாரு
வன்மையுள்ள சற்குருவை வணங்கிப் போற்று
மறவாதே தாய்பதத்தை மனத்தில் நித்தம்*79
உண்மையுள்ள சேதியடா உரைத்தி டாதே
ஒருத்தருக்கும்[84] சொல்லாதே உண்டு தேறே.

59. உண்டுவா*80 ஒருத்தருக்கும் பொருள்சொல் லாதே
உமையாணை சிவனாணை உலரப்பே சாதே
தெண்டெடுத்த ரிசிகளுட பாகத் தாணை
செங்கைவடி வேலாணை சித்த ராணை
கண்டு மனம்தெளிந் தோர்கள் ஆணை
கதிர்வேலன் தண்ணாணை காளி ஆணை
எண்டிசையும் நிறைந்திருந்த கங்கை ஆணை
இயல்பூமி தத்தாணை இயம்பி டாதே

60. இயம்பிநீ நூலிருக்கு தென்றி டாதே
இருக்குமென்று சொல்லாதே இடிதான் வீழும்
அயம்பிநீ அல்லவென்ற நூலீந் தாக்கால்*81
ஆளாக மாட்டாய்நீ நசித்துப்[85] போவாய்

---

83. காயிறாமம்
84. ஒத்தருக்கும்
85. றாசித்து

76* சிமிழில்
77* ரேக்குப்
78* பாரே
79* வைப்பாய்
80* தேறு
81* சொல்வாயானால்

பயமாக நடந்து கொண்டு குருவைப் போற்றிப்
பகருவது இந்தநூல் பத்தர்க் காகும்
நயம்பெறவே உன்னிடத்தில் வந்து **காத்து***82
நல்லபிள்ளை யானாக்கால் நடத்தை பாரே

61. பார்த்துநீ ஈந்தாக்கால் குற்ற மில்லை
பாவிகள்தான் மெத்தவுண்டு பகர்[86]ந்தி டாதே
சேர்த்தலும்*83 குற்றமுண்டு தோசி யோரைத்
துஷ்டனென்று*84 அப்பாலே தூரத் தள்ளு
கூர்த்தாடித் திரியாதே கொலை[87]செய் யாதே
கொண்ட[88]பெண்ணை விட்டலைந்தால் கூடா தென்றும்
சேர்ந்தாலே அலைந்து கெட்டுச் சுணங்க னாவாய்
சுகியான[89] அறுசுவையும் கிடைத்தி டாதே

62. கிடையாமல் வெறியெழும்பி அன்னத் தாலே
கெட்டவர்கள் மெத்தவுண்டு உலகத் துள்ளே
தடையென்ன இல்லறத்தி லிருந்து கொண்டு
சகலநூல்*85 சாத்திரங்கள் தருக்கம் பண்ணி
இடையிலே பரதேசிக் கன்ன மிட்டு
எந்தாயைப் பூசைபண்ணி இருதாள்[90] போற்றே

63. இருதாளைப் போற்றியல்லோ இருந்து கொண்டு
எந்நாளும் பூரணத்தில் சேர்க்கை யாகி*86
அறிவோடே நீயிருந்து அமிர்தம் உண்ணு*87
ஆங்காரமாய் கையெல்லாம் அறுத்துத் தள்ளி
நிருவிகற்பச் சமாதியிலே நின்று தேறி
நீங்காத சிவயோக நிஷ்டை கூடி
அறிவறிந்து ஆறுவரை யப்பால் சென்று
ஆனந்தப் பெருங்கடலில் அலையில் மூழ்கே

---

86. மகர்
87. குலை
88. கெண்ட
89. சுரியான
90. யிருந்தான்

82* சிஷ்யர் வந்தால்
83* சேர்ந்தாலும்
84* திருடரென்றும்
85* சார்ந்திடு
86* மனத்தை வைத்து
87* அமுதுண்டு

64. அலையிலே மூழ்கியல்லோ அறிய வேணும்
அப்பாலே ஆதிகல்பம் கொள்ள வேணும்
குலையிலே இருந்தசனி தின்று தேறி
குஞ்சரத்தைத் தியானித்துக் குருவைப் போற்றி
இலையிலே காய்ந்தகனி யெடுத்து உண்டு
எமனையும் காலனையும் இருதுண் டாக்கி
மலையிலே நீயிருந்து தவசு பண்ணு
வருகுமடா மெய்ஞான வழிதப் பாதே

65. தப்பாமல் இப்படியே இருந்தோர்க்[91] கெல்லாம்
சகலவித்தை கற்பமெல்லாம் தருவா ளாத்தாள்
எப்[92]போதும் குடியிருப்பாள் இடைவி டாமல்
ஏழையென்று எடுத்தணைப்பாள் இரங்கி யல்லோ
கற்பனைகள் வாராது*[88] தவசில் நின்றால்
தாயாரும்*[89] உன்னைவிட்டு விலகி டாள்பார்
ஒப்பேத்திக் கொண்டிருக்க இதுதான் மார்க்கம்
உள்ளபடி சொல்லிவிட்டேன் உலகத் தோர்க்கே

66. உலகத்தில் ஞானிகட்கு உறுதி சொன்னேன்[93]
ஒப்பில்லை இந்நூல்தான் நூறுக் குள்ளே
பலகலையும்*[90] தேர்ந்தல்லோ*[91] இதனைச் சொன்னேன்
பண்டிதமும் முன்னாலே பாடிப் போட்டேன்
இணக்கமுள்ள என்தாயார் இந்நூல் பார்த்து
எடுத்தமுறை பலிக்கவென்று சாபம் தீர்த்து
மலைக்குகையி லுள்ளசித்தர் இந்த நூலை
வாங்கினார் வாசித்து வையென் றாரே

67. வைத்திருந்த சித்தர்களை வணங்கிப் போற்றி*[92]
வாங்கினேன் இந்தநூலை நல்லோர்க் கென்று
கைத்திட்ட மானதொரு இந்த நூலைக்
கண்டவர்கள் காட்டார்கள் கருத்தா னென்று
அய்த்திருந்த*[93] பேர்களுக்கு அறிவுண் டாகும்
அகண்டபரி பூரணியாள் அருள்தன் னாலே

---

91. தேர்
92. நாய்
93. சொன்னோன்

88* செப்பமுள்ள கண்மூடி
89* சிறப்பாக
90* நாலுஞ்
91* சுருக்கியல்லோ
92* அழைத்துக் கண்டு
93* ஐத்திட்ட

செய்திட்ட கல்பமெல்லாம்*[94] தீர்க்கம் சொன்னேன்
திறமாக[94] இன்னமொரு ஈடு*[95] கேளே

வசியஈடு

68. கேளப்பா மாயனென்றால் அறியப் போறார்
கேசரியே மாயனென்று பேரு மாச்சு
ஆளப்பா ரெண்டுமொன்றாய் புணரும் போது
சுக்கிலமும்[95] சுரோணிதமும் ஒன்றாய் கூடி
ஆளப்பா பெண்ணைவிட்டு இறங்கும் போது
அருவிபோல் விழுகுமடா மோரு போலே[96]
நாளப்பா நல்லதொரு பீங்கான் தன்னில்
நலியாமல் வாங்கியல்லோ வேறே வையே

69. வைத்திட்ட கருவிலொரு மார்க்கம் கேளு
மைந்தனே ஈப்புலியும் ஈயும் போடு
அய்த்திட்ட ஐவிரலிச் சாறு விட்டு
அப்பனே மத்திக்க மெழுகு மாமே
இமைத்திட்ட திகைப்பூடு சனல்வண் டோடு
மினிமினிக்கு அஞ்சாறு கூடச் சேர்த்துக்
கைத்திட்ட மாகவே ஆடை யோட்டி
காட்டில்வளர்[97] நிலப்பனையும் கருவில் சேரே

70. சேர்த்தல்லோ ஒன்றாக அரைத்துக் கொண்டு
செம்மையுள்ள சிமிழதனிலே பதனம் பண்ணி
வேத்துமிகப் போகாமல் காத்தா டாமல்
வெகுபதன மாகவைத்துக் குருவைப் போற்றி
நேர்த்தியடா மோகினியை லட்சம்உரு செய்து
நீநினைத்த காரியங்கள் நிசமெனவே முடியும்
சேர்த்துவைக்க வேணுமென்றால் தீனியிலே சேரு
திலதமதை வேணுமென்றால் தியானம் பண்ணே

---

94. நிறமாகி
95. சுக்கலம்
96. பேலே
97. விளர்

94* கற்பமதின்
95* கற்பங்

71. பண்ணினால் பாவையர்கள் பறந்தோடி வந்து
பசப்பியுன்னை அணைந்திடுவார் பாவையர்க ளெல்லாம்
எண்ணியபடி முடிக்க **இந்தமை**[98] யாகும்
எவருக்குச் செய்தாலும் இழுத்துவரும் வாடை
புண்ணியர்க்கு இவ்வாடை போது மினிஈடு
பொன்பணங்கள் கேட்டதெல்லாம் போயெடுத்துக் கொடுப்பாள்
விண்ணிலுயர் போகுமட்டும் விட்டிடா லுன்னை
வெற்றியடா இந்தமை வெளிவிடா தடக்கே

72. அடக்கமாம் இன்னமொரு கற்பம் கேளு
ஆயிசொன்ன படியுரைத்தேன் அறிந்து பாரு
விடக்**கெடுத்த**[99] நாய் போலே திரிந்தி டாதே
வீணர்களைச் சேராதே வீண்பே சாதே
கடக்கரையில் நின்றவரைக் கைகாட் டாதே
**காமத்தை**[*96] நினையாதே கள்ளுண் ணாதே
படுக்கையிலும் இருக்கையிலும் யோகம் பாரு
பராபரத்தைப் பார்த்தவர்க்குப் பலிக்கும் தானே

## மூலிகைக் கற்பம்

73. பலிக்குமென்று என்தாயார் சொன்ன கற்பம்
பாடினேன் **மூலிகைக்குள்**[*97] பாகத் தோடே
**நலி**[100]க்குமென்ற ஆவாரையின் பட்டை யோடு
கனகமென்ற சிவன்வேம்பு வேங்கைப் பட்டை
சலிக்குமோ ஆதியந்தக் குரு[101]வும் கூட்டிச்
சமனாகப் பாண்டத்தில் ஒன்றாய் போட்டு
விலக்கமி லாதேமூடிச் சீலை செய்து
மீறாமல் குழித்தைலம் இறக்கி டாயே

74. இறக்கினதோர் தைலத்தைப் பதனம் பண்ணி
என்தாயைப் பூசித்து இருதாள் போற்றி
அரக்குமணி மாளிகையாம் தைல மப்பா
அன்புடனே **சண்**[102]முகர்க்குப் பூசை பண்ணி

---

98. இந்தை
99. கொடுத்த்
100. கலி
101. கரு
102. டின்

96* கர்மத்தை
97* தன்னுக்குள்

நிறக்குடனே பணவிடைதான் எடுத்துக் கொண்டால்
நீங்காத வியாதியெல்லாம் நிவர்த்தி யாகும்
நரைக்குலமாய் வந்ததெல்லாம் கண்டு போச்சு*[98]
நாடிநரம் புள்ளதெல்லாம் வலுத்துப் போச்சே

75. வலுவான தைலத்தில் கற்பம் சொன்னேன்
மண்டலமே பணவிடைதான் கொண்டா யானால்
சலியாது சண்டையொன்று சரீர மெல்லாம்*[99]
தள்ளுமடா வெளுப்பாகத் தானே போகும்
மெலியாது திரேகம*[100]ப்பா கெட்டி யாச்சு
மின்னலுமே சூரியன்போல் வீசும் பாரு
மலைமேலே இருந்தசித்தர் வாவா வென்பார்
வார்த்தைசொல்வார்*[101] தைலத்தின் வழிசொல் வாரே

76. வழிசொல்வேன்*[102] மண்டலமே கொண்டா யானால்
வைரம்போல் திரேகமப்பா வலுத்துப் போச்சு
அழியாத திரேகமப்பா*[103] படைத்துக் கொண்டால்
ஆண்பிள்ளை சித்தனென்று ஆகிக் கொண்டாய்*[104]
தெளிவாக திரேகசுத்தி செய்து கொண்டால்
சிறப்பான சிறுபிள்ளை யாயிருந்து திறமுங் காண்பாய்
சுழியான ரசம்கட்டும் சூதம்*[105] கட்டும்
சொன்னசரக் கறுபதுக்கும் சூட்டிப் பாரே

77. சூட்டிநீ சுருக்கிடவே கட்டிப் போகும்
சுண்ணமுமா மெழுகுமாகும் சோலி யில்லை
கூட்டிநி முடிப்பதற்கு உபாயம் வேணும்
குருவுடைய கடாட்சத்தால் குருவு மாகும்
நாட்டிலே இன்னுமொரு கற்பம் கேளு*[106]
நல்லசுண்ண முப்புவை நவிலு வேன்கேள்
வீட்டிலே இருக்குமடா அந்த மூலி
விளையுமடா கரையோடே*[107] விரையில் லாதே

---

98* ஓடிப்போகும்
99* தேகந்தன்னில்
100* தேகம்
101* மகத்தான
102* சொல்வார்
103* தேகமறை
104* பெருங்கொள்வாய்
105* சரக்குங்
106* சொல்வேன்
107* காயோடே

78. இல்லாத மூலியென்று எண்ணி டாதே
எந்தெந்த இடங்களெல்லாம் இருக்கும் பாரு
நில்லடா*[108] நிழல்சேர்ந்த தண்ணீ ரோரம்
நிழலருகே முளைத்திருக்கும் மூன்று மூலி
வல்லமையாய் அதிலிருந்து வாசி தேவர்
வாசிவாசி **யென்று***[109] தவம்செய் வார்கள்
சொல்லடா தவசுநிறை வேறிற் றானால்
சுழியைவிட்டு வெளியேறித் துலங்கு வாரே

79. வாரான தவசுவிட்டு வாசு தேவர்
வந்தவுடன் செடிமூன்றும் வாடி நிற்கும்
ஊராரைக் காணாமல் ஒவ்வொன் றாக
ஒருமிக்க மூன்றையும் தான்பிடுங்கும்[103] போது
சீறிவிடும் செடியப்போ **திக்கு***[110] டாதே
சிவந்திருக்கு மூலிகைதான் செடிதா னல்ல
ஆரறிவார் இம்மூலி **அறிவோர்***[111] காண்பார்
அல்லவடா வாசானை யடுத்துக் கேளே.

80. அடுத்தல்லோ மூலிகைதான் **அறியவே***[112]
யார்க்கும் தோணாது அதீத மப்பா
எடுத்தல்லோ இம்மூலி மூன்றும் தன்னை
இளசாகச் சிறுகறிந்து எடுத்துக் கொண்டு
வடுவில்லாச் **சட்டி**[104]யிலே மூலி தன்னை
வைத்தபின்பு தைவேளைச் சாறு விட்டு
எடுத்தல்லோ அடுப்பேத்தி இளந்தீ யாக
யெள்ளளவு பொங்காமல் **எரித்தி டாயே**[105]

81. எரித்துநீ நீர்வத்தி சிறுகி னாக்கால்
யென்னசொல்வேன் சுண்ணமதா யிருக்கும் பாரு
தரித்திரம்போம் சுண்ணமதைக் கண்ட போதே
சகலசரக் கறுபத்தி னாலும் நீறும்

---

103. பிடுக்கும்
104. சாட்டி
105. எறிந்திடாயே

108* நில்லாத
109* வாயென்று
110* தியங்கி
111* அறிந்தோர்
112* தானறிவதற்கு

அரிக்குமுத லெழுத்தப்பா இந்த மூலி
அரியாலும் அயனாலும் காணப் போமோ
விரித்து விட்டேன் இந்நூல் நூறுக் குள்ளே
மேலான சுண்ணமடா விண்கொள் ளாதே

82. விண்கொள்ளச் சுண்ணமதை யென்ன சொல்வேன்
வியாதியென்றால் கடுகளவு கொடுத்துப் பாரு
மண்ணும்விண் ணும்கொள்ளாது மார்க்க மெத்த
மகாமேரு கைலாச வரையும் தாண்டும்
எண்ணமுள்ள சிவயோகம் பார்க்கும் போது
எள்ளளவு நாவுமே விட்டுப் பாரு
தண்ணீரும் பெருகியல்லோ கடல்போ லாச்சு
தாகமென்ற பசிபோச்சே நன்மை யாச்சே

83. ஆச்சென்று இப்படியே யோகம் பார்த்தால்
அழியாது காயமப்பா **அழிவோ இல்லை***[113]
மூச்செங்கு மோடாது முன்பின் னாக
மூதண்ட வரைக்குள்ளே அடங்கி யாடும்
பேச்சேது **இனியென்ன***[114] திரேக **வாழ்வை***[115]ப்
பிலத்துதடா நரைதிரையும் **பலங்கெட் டோடும்***[1116]
வாச்சுதே இந்தமுறை யறிந்து செய்தால்
வாதமுண்டு **பேசுகிறேன்***[117] வளமை தானே

84. வளமான சுண்ணத்தை வாய்நீர் விட்டு
மத்தித்து ஆதியந்த உப்பும் கூட்டி
இளகாமல் ஐங்கோலத் தைலம் சேர்த்து
எட்டிலொன்று வீரமுடன் சாரம் சேர்த்துப்
**பழகுமட்டும்***[118] சிமிழதனில் பதனம் பண்ணு
பார்வதிக்கும் வடுகனுக்கும் பூசை **பண்ணு***[119]
களங்கமில்லாத் தங்கத்தைப் பொடியாய்ப் **பண்ணிக்***[120]
கண்டயிடைக்குப் பாதியடா கருவிற் சேரே

---

113* வாகியாலே
114* கற்பமுண்டால்
115* தானும்
116* ஓடிப்போகும்
117* கண்டு கொள்வான்
118* பழகினதோர்
119* பண்ணி
120* செய்து

85. சேர்ந்தல்லோ ஒன்றாகத் திரட்டிக் கொண்டு
சிவகாமி பூசையது நன்றாய் செய்து
பார்த்தல்லோ ரவிமுகத்தில் வைத்தா யானால்
பரிரேக்குத் தகடுருகித் திண்ணும் சுண்ணம்
கோத்தல்லோ ஒன்றாக்கி இரும்புக் குச்சி
கொண்டுகிண்டிச் சிமிழோடே பதனம் பண்ணு
ஆத்துமங்க ளிணையாது அறிவுண் டாக்கும்
அகண்ட வெள்ளம் பெருங்கடல்போ லாகும்தானே

86. ஆகுமென்று யெனையாண்ட ராமதேவர்*[121]
அறிவித்தா ருத்தாரம் அடியேன் கேட்டு
பாகுபத மானதொரு **சுண்ணத் தாலே**[106]
பட்டவிடம் தொட்டவிடம் வேதை கோடி
ஏகுமென்ற செம்புவெள்ளி யுருகும் போது
எள்ளளவு விராகனுக்கு எடுத்து நீட்டு
சோகிதமா யுருகியல்லோ மாத்தே **ழாச்சு**[107]
சொல்லாதே ஒருத்தருக்கும் சொல்லொண் ணாதே

87. ஒன்றான பொருளப்பா ஆதி யந்தம்
ஒருத்தருக்கும் **சொல்லாதே உண்டு***[122] தேறு
பண்ணார்கள் லோகத்தோர் பாகத் **தோடே***[123]
பதறியல்லோ சுட்டலைந்து பாவி யானோர்
மண்ணும்விண்ணும் **அறியார்கள்***[124] மார்க்கம் காணார்
வாதமென்றால் **எளிதாச்சோ***[125] வாய்ப்பேச் சாலே
கண்ணிமைக்குள் காணலாம் விதியுண் டானால்
கங்கையுட **உபதேசம்***[126] காண லாமே

**கந்தகத் தைலம்**

88. கண்டவர்கள் பெரியோர்கள் கருச்சொல் லார்கள்
காத்திருந்து மனதுவர நடந்து கொண்டால்

---

106. அன்னத்தடலே
107. ழிச்சு

121* ஆத்தாள்
122* தெரியாது கண்டு
123* தப்பி
124* மதியார்கள்
125* லேசாமோ
126* கற்பமது

தொண்டரென்று **மனதுவந்தால்**[*127] சொல்லு வார்கள்
சுருதிமுடி யனுபோகம் சொல்லக் கேளு
மண்டலத்தோர்க்கு இன்னமொரு தைலம் சொன்னேன்
மகத்துவங்கள் மெத்தவுண்டு வைத்துப் பாரு
எண்டிசைக்கும் தாயான கந்தி பூரம்
இனியநவச் சாரமுடன் இதுமூன் றாமே

89\. இதுமூன்றும் **உரலிலிட்டு**[*128] இடித்துக் கொண்டு
எடுத்துவைப்பா அளவான **பானை**[108] தன்னில்
சதுராக அமர்த்திநன்றாய் சட்டி மூடி
சந்துவாய் தெரியாமல் சீலை செய்து
கெதுஊடே குழித்தைலம் இறக்கி வாங்கிக்
**கேள்மகனே**[*129] குப்பியிலே பதனம் பண்ணு
**மதி**[109]யோடே பணிவிடைதான் கொண்டா யானால்
வயிரமடா உன்திரேகம் வலுத்துப் போச்சே

90\. வலுத்துதே காயமது மறலி போனால்
மண்டலத்தில் சட்டை யொன்று [*130] பாரு
**அலுத்துநீ**[110] இருக்காதே யோகம் பாரு
அடிமுடியும் நடுவனையும் அறிந்து ஊது
**பலத்துறாத**[*131] காயமது பலமுண் டாச்சு
பின்னும்முன்னும் பாராதே பிசகி டாதே
**இளக்கமுள்ள**[*132] தைலத்தின் இன்னம் சொல்வேன்
இனிவீரம் சாரமுடன் பூரம் தானே

91\. தானென்ற ரசமுடன் சமனாய்ச் சேர்த்துத்
தைலத்தை விட்டாட்டி **வழித்துக்**[111] கொண்டு
வானென்ற வங்கத்தில் பூசி நன்றாய்
மனதறிந்து புடம்போடு வங்கம் தன்னைக்

---

108\. யானை
109\. பதி
110\. அறுத்து
111\. விழித்து

127* அவரறிந்தால்
128* கல்வத்தில்
129* மேன்மையுடன்
130* வாங்கும்
131* வெலத்துதே
132* விலத்துவருந்

கோனென்ற வங்கமடா தங்க மாச்சு
குருபதத்தைப் போற்றியல்லோ சரணம் செய்து
தோனென்ற சிவயோகத் தடியில் நின்று
சிவன்பாதம் பூசித்துத் தேறு வாயே

## மருதாணித் தைலம்

92. தேறுதற்கு இன்னமொரு தைலம் சொல்வேன்
சிவமான மருதாணிச் சமூலம் வாங்கி
மாறுவேன் வாசமுள்ள வெட்டி வேரும்
மகிமையுள்ள ஆதியந்தக் கருவும் கூட்டிப்
பாருநீ சமனிடித்துப் பாண்டத்தி லிட்டுப்
பார்வதியைத் தியானித்துப் **பாகத்**[112] தோடே
வாருகேள் குழித்தைலம் முன்போல் வாங்கி
மாதாவைப் பூசித்து வைத்துக் கொள்ளே

93. வைத்திருந்த தைலத்தின் மார்க்கம் கேளு
வலுவான தாரமுடன் கௌரி வெள்ளை
அயத்துநீ போகாதே துருசு சூதம்
ஐந்துமே ஓர்நிறையாய் அளவாய் தூக்கி
நைத்துநீ கல்வத்தி லிட்டுக் கொண்டு
நன்மையுள்ள தைலத்தை விட்டு ஆட்டிச்
**செய்த***[133] மெழுகு அத்தனையும் சிமிழில் வைத்துச்
சிவகாமி தன்பதத்தைத் தியானிப் பாயே

94. தியானித்து மெழுகதனைச் செம்பில் பூசி
தீர்க்கமாய் புடம்போடச் சிவந்து போகும்
தயவான வெள்ளிதனில் தடவிப் **போடு***[134]
தங்கமடா நல்லதங்கம் சரிமாத் தாகும்
வயணமாய் சரக்குகளில் தடவி **வாட்ட**[113]
மணிபோலக் கட்டியல்லோ இறுகிப் போகும்
மயமான ருத்திரனை வணங்கிக் கொண்டால்
வருகுமடா இதுகளெல்லாம் வழிதப் பாதே

95. வழியாக இன்னமொரு **மையைக் கேளு***[135]
வசியமடா நல்லமுறை மார்க்கத் தோடே

---

112. பாச
113. வாட்டே

133* போட
134* தெரியாது கண்டு
135* உப்புக்கட்டு

அழியாத வெடியுப்புக் கல்லுப் போடே
அளந்தகரி யுப்புடனே **வளைய**[114] லுப்பு
குளியான சவுக்கார உப்போ டஞ்சும்
கூட்டியரை பழச்சாற்றால் **குழிக்கல் லாலே**[*136]
வழியாக அரைத்துருட்டி வட்டுப் பண்ணி
மனதார ரவிதனிலே காயப் போடே

96. போட்டெடுத்துப் புத்தோட்டில் வைத்து மூடிப்
புத்துமண்ணால் சீலைசெய்து புடத்தில் போட்டுத்
தேட்டமென்ன புடமாறி யெடுத்துப் பாரு
சிவமான **கருக்களஞ்சும்**[*137] கருகி நிற்கும்
ஆட்டமென்ன கருகினதோர் உப்பி னோடே
ஆனதொரு **காரமுடன்**[115] சாரம் சேர்த்து
வாட்டமில்லாப் பழச்சாறு விட்டு ஆட்டி
மைந்தனே வில்லைதட்டிக் காயப் போடே

97. காய்ந்தது என்றால் ஓட்டில் வைத்து ஓடு மூடிக்
**கண்ணளவாய்**[*138] **சீலை**[*139]செய்து ரவியில் போட்டுக்
காய்ந்தசிறு புடம்போட்டு எடுத்துப் பாரு
தான்முறுகிக் கரிப்போலே இருக்கும் **பாரு**[*140]
பாய்ந்துதடா முன்னெடுத்த கரியும் சேர்த்துப்
பாகமாய் கல்வத்தில் ஆட்டும் போது
**பாய்ந்துதடா**[*141] இளகியல்லோ **மையு மாச்சு**[*142]
மைநிறத்தை யென்னசொல்வேன் மைந்தா பாரே

98. பாரேநீ மையெடுத்துத் திலதம் போட்டுப்
பார்த்தவர்க ளெல்லாரும் வசிய மாவார்
ஆரப்பா இந்தமை அறிந்து செய்வார்
அதீதமடா அண்டபகி ரண்டம் தாண்டு
சூரப்பா தெரியாது கருத்தோ ணாது
குருவுடை கடாட்சத்தால் கூட்டிப்பாரு
நூறப்பா இந்தநூல் நுணுக்க மெத்த
நொடிவித்தை இதுபோலே நோக்கிப் பாரே

---

114. வளய
115. கரம்சொர்

136* குமறவிட்டு
137* உப்பைந்துங்
138* கனமான
139* சேலை
140* அப்பா
141* வாய்ந்துமே
142* மைபோலாகும்

99. நோக்கியிந்த மையாலே **யெல்லாம்**[*143] சித்தி
நூதனமாய் சொல்லவில்லை நோக்கிப் பாரு
வாக்கியங்கள் தப்பாது மைபோ லில்லை
மண்டலமெல் லாம்வசிய மாகும் சொன்னேன்
சாக்கியில்லை சண்டையில்லை ததையாய் சொன்னேன்
சகலஜென வசியமடா மாதர் கூடப்
பாக்கியங்கள் மெத்தவுண்டு பண்ணிப் பாரு
பார்வதியாள் எந்தனுக்குப் பகர்ந்தாள் பாரே

100. **பகர்ந்திட்ட**[116] மையெடுத்துத் திலதம் போட்டால்
பறந்தோடும் கவுளிமுதல் வசிய மாகும்
மிகுந்திட்ட மிருகமுதல் மங்கை மாரும்
வேணதெல்லாம் வசியமடா மீட்டும் பாரு
இகழ்ந்திடவும் போகாது இந்த மையை
என்ன சொல்வேன் மையினுட ஆட்டம் தானே

101. ஆட்டமடா இந்தமையில் மெத்த வுண்டு
அந்தரங்கம் யாரறியப் போரா ரப்பா
கூட்டமடா பக்கத்தில் ராம தேவர்
கொங்கணச் சித்தரெல்லாம் அதிலே கூட்டம்
பாட்டனுடைய கிருபையினால் பாக்கியம் பெற்றேன்
பலநூலும் வேதாந்தம் பார்க்கும் போது
தேட்டமடா சிறுமலையை நோக்கி யல்லோ
சிவமான சித்தரெல்லாம் வந்தார் பாரே.

102. வந்தவர்கள் அடியனுடைய சாய்கை யோரம்
மலைச்சாரல் வழியாக வந்து நின்று
எந்தனையும் தானழைத்துக் கூட்டிப் போனார்
இருந்தார்கள் மலைச்சார்பில் ஆறு பேரும்
சொந்தமடா நல்லபிள்ளை நீயென் றார்கள்
சொன்னார்கள் உபதேசம் அடியேன் கேட்டேன்
சந்தோசமாக என்னை முகத்தைப் பார்த்துத்
தடவினார் **கையாலே**[117] தவம்பெற் றேனே.

---

116. பகர்ந்தட்ட

143* வியாதி

117. கைரலே

103. தவம்பெற்றேன் என்குருவின் கடாட்சத் தாலே
சகலகரு மானமெலாம் தரிக்கச் செய்தார்
நவநீத மானதொரு கற்பம் தன்னை
நாள்தோறும் கொண்டுவர நாட்டம் சொன்னார்
சிவன்பாதம் **தரிசிக்கத்**[118] தெளிவு சொன்னார்
தேகசித்தி ஆவதற்குத் திறமும் சொன்னார்
உவமான நூல்களிலே எடுத்துச் சொன்னார்
உள்ளபடி இதுவென்றே உரைத்திட் டாரே

104. உரைத்திட்டார் உத்தாரம் **அடியேன்**[119] கேட்டு
உண்மையுடன் அவர்[120]பதத்தைத் தொழுது போற்றி
நிறைத்திட்டம் தப்பாமல் நின்றேன் அப்பா
நீங்காத சிவயோகம் புதினம் ஆச்சு
அசைந்திட்ட கல்பமெல்லாம் அடியேன் கொள்ள
அனுக்கிரகம் செய்தார்கள் அப்பா லையா
குறைந்திட்ட நூலென்று எண்ணி டாதே
குருமுகமாய் வந்தநூல் நூறு முற்றே

**ஸ்ரீதெக்ஷிணாமூர்த்தி குருமுகம் நூறு முற்றிற்று**

118. தெரிசிக்க
119. அடிபேடன்
120. அமர்

# தட்சிணாமூர்த்தி குருமுகம் நூறு

## தெளிவுரை

1. நாத விந்தையும், அதனுடன் சேர்ந்து நிற்கும் வாலை சக்தியையும், அகார உகாரத்தையும், ஒளி விட்டுப் பிரகாசிக்கும் சிகாரத்தையும், மகாரமான குண்டலினியையும், சுழிமுனையில் நிற்கும் நீலியான மனோன்மணியையும், பிறைச்சந்திரனை அணிந்துள்ள சிவபெருமானையும், நாளும் போற்றி வணங்கி இந்த முப்புகுரு என்ற நூலைப் பாடுவதற்குக் காப்பாக வைக்கின்றேன்.

2. நான் பெரிய அளவில் பல நூல்களைப் பாடியிருக்கின்றேன்! அவற்றிலுள்ள கற்ப முறைகளை மட்டும் தனியாக எடுத்து உலகத்தோர் இறவாமல் உயிர் வாழ்தவற்காகப் பரிபாசைகள் இல்லாமல் தெளிவாகக் கூறியிருக்கின்றேன். நான் பொதிகை மலையில் இறைவனைத் தியானித்துக் கொண்டிருந்தேன். அப்போது சிவன் தான் தட்சிணாமூர்த்தி என்றுணர்ந்த நான் அவர் பாதத்தில் வீழ்ந்து வணங்கினேன். அதன்பின் மனோன்மணியை வழிபட்டேன்.

3. மனோன்மணியாள் ஆகிய பார்வதி தேவியின் பாதங்களை வணங்கி, குருமுகமாய் கிடைத்ததால் இது குருமுக நூல் ஆகியது. தவமிருந்து, மகா யோகியான ஆதிசிவனை வணங்கி அனைத்துச் சரக்குகளையும் இனம் பிரித்துச் செந்தூரிக்க, ஏக மூலி என்ற ஒரு மூலிகைவழி செந்தூர பற்பங்கள் செய்வதற்குச் சண்முகன் என்ற முருகக் கடவுளின் அருளினால் இதைக் காப்புப் பாடலாக ஆசிரியர் தெரிவிக்கிறார்.

4. வாலை பூசை செய்து, அதன் வழி நெஞ்சில் நின்ற சிவனை வணங்கி, நான்கு திசையும் புகழ் மணக்க நின்று இலங்கும் நற்சித்தர் பெருமக்களைத் தொழுது மாணவர் போற்றும் மாமுனிவரை வணங்கி, இந்நூல் சிறக்கச் சித்தர் கோத்திரத்து மூத்தவராகிய அகத்தியர் பெருமானை வணங்கி, நூல் கூறும் குரு முடிக்க வழி வகையை ஆசிரியர் கூறுகிறார்.

5. கோரக்கர், திருமூலர், கண்ணி சித்தர், காலாங்கி, ரோமன், சுந்தரர், இடைக்காடர், போகரிசி, கருவூரார், கொங்கணர், இராமதேவர் போன்ற சித்தர்களுக்கெல்லாம் தலைவனாக விளங்கும்

அகத்தியனை முதற் பொருளாகக் கொண்டு வணங்கிக் குருமுப்பு முறையை ஆசிரியர் கூறுகிறார்.

6. இந்நூலில் நூறு பாடலில் கூறியுள்ளேன். இந்நூலால் முப்பொருளும் முடித்துவிடலாம். சிவன், மனோன்மணி எனக்குச் சொல்லியபடி கூறியுள்ளேன்.

7. காடுமலை அலையாமல் நிலையாக இருந்து தாயாரைப் பூசிக்க வேண்டும். இந்தப் பூமியிலே நாம் நிலைத்து வாழத் தாயையும், சற் குருவையும் மறவாமல் பூசிக்க வேண்டும். அப்படிப் பூசிப்பதன் வழி கற்பமுறை செந்தூரத்தை அடையலாம். இந்தச் செந்தூரமானது மலை போல வந்த தீவினைகளை எல்லாம் நீக்கி நல்வினைகளை அருளும்.

குருமுடிக்க விபரம்

8. சற்குருவின் அருளால் குருமுடிக்கும் வகையைக் கூறுகிறேன் கேள். இவ்வுலகில் **வெள்ளைக்கல்** (அண்டக்கல்) என்று ஒரு கல் இருக்கிறது. இது உலக வாழ்க்கையில் பற்றுக் கொண்டவர்களுக்குக் கிடைக்காது. விதி இருந்தால் தான் அது கிடைக்கும். அந்தக் கல் இருக்குமிடம் கூறுகிறேன். கவனமாய்க் கேள்.

9. இந்த வெள்ளைக்கல் சில ஊர்களிலும், காடுகளிலும், நாடுகளிலும் இருக்கும். தேடிப் பார்ப்பின் நல்லவர்களுக்குக் கிடைக்கும். கிடைக்க வில்லை என்றால் மலையாதே! மயங்கி நிற்காதே! கிடைப்பதும் கிடைக்காததும் பிரம்மன் எழுதிய தலை எழுத்தின் படியே!

10. பிரமக்கல், வெள்ளைக்கல், பேதம், கற்சுண்ணம், விந்து, தருமத்துக்கு ஓடு எடுத்த கபாலம், சங்கரனார் மண்டை, கல், காளி கோட்டம், மகாமேருகிரி, மாக்கல், சிகரம், சிறுவீடு,

11. மேலும் கல், மலை, கபாலம், கருவின் நிலை போன்றவையும் பிரமக்கல்லின் பரிபாசைப் பெயர்கள். சிவபெருமான் உட்கொண்ட கல்லும் இதுதான். வார்த்தையால் பலவிதமாய்க் கூறும் சூட்சப் பெயரை உனக்காகச் சொல்லியிருக்கிறேன். புல் விளையாத இடத்தில் இது விளையும்.

12. புல் விளையாத பூமி என்றால் உவருப்பான பூநீறு விளையும் பூமியாகும். நான் சொன்னதைக் கண்டு மயங்கிடாதே! இதை

ஒருவருக்கும் சொல்லாதே. தெருவில் நின்று அலையாமலும், சிறு பிள்ளை போல் திரியாமலும் நான் கூறுவதைக் கேள்!

13. நான் மேலே சொன்ன பிரமக்கல்லை எடுத்துக் கல்லுரலில் போட்டு இரும்பு உலக்கையால் குத்தி, மாபோல் ஆன பின்பு பீங்கான் சட்டியில் போட்டுத் **தூயநீர்** (கார்த்திகை மாதத்தில் வரும் சுவாதி நட்சத்திரத்தில் பெய்யும் மழைத் துளிகளைத் தூயநீராகப் பயன்படுத்துவர். சிப்பியானது இந்த நீரை உள்வாங்கித்தான் முத்தை உருவாக்குகிறது. பனிநீரும் தூயநீராகப் பயன்படுத்தப்படுகிறது.) ஊற்றி ஒரு நாள் ஊறவைத்துப் பின்பு மேலே இருக்கும் தண்ணீரை இறுத்து விட வேண்டும்.

14. தண்ணீரை இறுத்த பின்பு மீண்டும் தண்ணீர் வார்த்து ஒரு நாள் சென்ற பின்பு தண்ணீரைச் சாய்க்க வேண்டும். இவ்வாறு பத்து முறை செய்து தூய்மையாக்கி அடியில் இருக்கின்ற கரைசலை எலுமிச்சம் பழச்சாற்றில் மூழ்கவிட்டு கடும் வெயிலில் வைத்துக் காற்றாடாமல் வேடு கட்டினால் உவர் உப்பு கிடைக்கும்.

15. மேற்படி எடுத்த உப்பை வாய் அகன்ற பீங்கானில் போட்டுக் கொண்டு, மூழ்குகின்ற அளவுக்குப் பழச்சாறு விட்டு அடுப்பில் வைத்துச் சிறுதீயில் எரித்தால் உப்பு வெந்து நல்ல சுண்ணம் கிடைக்கும். இதிலுள்ள கசிவாகிய எண்ணெய் காற்றோடு பறந்து போய் விடும். இதை இரகசியமாய் வைத்துக் கொள். வெண்மை நிறத்தில் உள்ள இந்தச் சுண்ணத்திற்கு **முப்பு** குரு என்று பெயர்.

16. இந்த முப்பால் சரக்குகளை அடக்கும் முறையைக் கூறுகிறேன் கேள்! இந்த முப்பிற்கு வழலை, விந்து, ஆதி, உசிதம், உவருப்பு, கல்லுப்பு, ஆச்சியின் கோவில், அரனார் போன்ற வேறு பெயர்கள் உண்டு. அனைத்து நூல் சாத்திரங்களிலும் இவ்வேறு பெயர்கள் வழங்கப்படுகின்றன.

முப்பு குரு சேர்க்கும் முறை

17. இந்த உப்புவிற்குக் குரு என்று பெயர். இதை வாய்நீர் (செயநீர், திராவகம்) விட்டுப் பிசைந்து கோனென்ற மூலிகையான, ஏக மூலியாகிய இலந்தை இலையின் அரைத்த விழுதினால் கவசம் செய்து புடம் போடச் செந்தூரமும் பற்பமும் கிடைக்கும். இந்த உலகை ஆட்டிப் படைக்கின்ற **குரு மருந்து** இதுதான்.

18. மேற்சொன்ன குரு மருந்தைப் பண எடை அளவு எடுத்துக் கொண்டு குளிகை, செந்தூரம், பற்பம், லேகியம், இரசாயனம்,

மாத்திரை, கசாயம், சூரணம், தயிலம் போன்றவற்றிற்குச் சேர்ப்பதனால் பெரும் பயன் உண்டாகும்.

சவ்வீர பற்பம்

19. சவ்வீரக் கட்டியை எடுத்துக் கொண்டு முறையாகச் சுத்தி செய்து கோவைக் கிழங்கின் (அப்பை மூலம்) மேல்பகுதியைக் குகை போலத் தோண்டி எடுத்து, அந்தக் குகைக்குள்ளே மேற்படி சுத்தி செய்த சவ்வீரத்தை வைத்து, அந்தக் கிழங்கின் பகுதியைக் கொண்டே வாயை மூடி முறையாகச் சீலை செய்து குக்குடப்புடம் எனப்படும் பத்து எருவறட்டியில் புடமிடப் வெள்ளையான பற்பம் கிடைக்கும்.

20. மேற்படி பற்பத்தை உலகில் உள்ள மக்களுக்குச் சொல்ல வேண்டும். இந்தச் சவ்வீரப் பற்பத்தைச் செந்தூரமாக்க, இதனைப் பீங்கான் பாத்திரத்தில் போட்டு முசுமுசுக்கைச் சாறு விட்டுப் பிசறி வெயிலில் வைத்தால், சூரியனைப் போல் சிவந்து செந்தூரமாகிவிடும்.

21. மேற்படி செந்தூரத்தைப் பண எடை எடுத்துப் புதுத்தேனில் குழைத்துச் சாப்பிட்டால் தீராத வயிற்று வலி, குன்ம வாய்வு, முடக்கு வாதம், தோல்நோய், கைகாலில் கறுப்பு, வெள்ளை, காதுமந்தம், உடலில் ஏற்படும் வெண்புள்ளி, தேமல், உடலுக்குள் ஏற்படக்கூடிய புண் போன்றவை தீரும்.

கந்தகப் பற்பம்

22. மேலும் இன்னொரு கந்தக பற்பத்தைச் சொல்லுகிறேன். சிறுபீளை இலையை அரைத்துக் குகை போலச் செய்து, சீலை செய்து, ஒரு கட்டி கந்தகத்தை அக்குகைக்குள் வைக்க வேண்டும். இக்கந்தகக் கட்டியின் மேல் குருமருந்தை வாய் நீரால் மத்தித்துப் பூசி குகையின் வாயை ஓட்டால் மூடி மூன்று எருவில் புடம் போடப் பற்பம் ஆகும்.

23. மேற்படி பற்பத்தைத் தேனிலே நெல் எடை எடுத்துப் பத்தியத்துடன் சாப்பிடத் தோலில் ஏற்படுகின்ற புள்ளி மேகம், வாத நோய், அறையாப்பு, சிறுசிரங்கு, அண்டவாதம், கால் கை முடக்கு வலி, முழங்கால் வாதம், மூட்டுக்கு மூட்டு ஏற்படுகின்ற முடக்குச் சூலை போன்றவை அகலும். மேற்படி பற்பத்தைப் பாலோடும், நெய்யோடும் பாசிப்பயிரோடும் கூடச் சாப்பிடலாம்.

24. இப்பற்பத்தால் மேலும் சூலை நோய், 18 வகையான குட்ட நோய்கள், சொறி சிரங்கு, செங்கரப்பான், வாயுத்தொல்லை, கை கால்களை முடக்கி வைக்கும் மேகவாய்வு, கண்புகைச்சல், கண்சிவப்பு, கண்ணீரோட்டம், ஈளை நோய், காச நோய், மாரடைப்பு, குத்துவலி,

தோலைச் சுருக்க வைக்கும் மேகநோய், தொண்டையிலே ஏற்படுகின்ற புண் போன்றவையும் நீங்கும்.

### சிலாசத்துப் பற்பம்

25. சிலாசத்தை ஒரு கட்டி எடுத்துக் கொண்டு அதன் மீது உமிழ் நீரால் குழப்பிய குருமருந்தைப் பூசி, மேலும் சுண்ணாம்பை எடுத்துக் கொண்டு சீலை செய்து குக்குடப் புடம் இட நீற்றுக் கூகைக் கிழங்கின் நிறம் போன்ற வெண்மையான பற்பம் கிடைக்கும். இதற்குரிய அனுபானமான வெந்நீரில் இதனைக் கொடுக்க வேண்டும்.

26. மேற்படி மருந்தை வெந்நீரில் சாப்பிட்டால் மலக்கட்டு, நீர்க்கட்டு, கண்ணில் ஏற்படுகின்ற காசம், கண்புகைச்சல், வாயில் ஏற்படுகின்ற புண், ஈளை, தொண்டை வலி, இருமல், வாய்வு போன்றவை நீங்கும். உடலில் ஏற்படுகின்ற துர்வாடை நீங்கிக் கற்பூரமணம் வீசும். மேலும் உடல் வச்சிரம் போல் ஆகும். இம்மருந்து அனைத்து வித நோய்களையும் போக்கக் கூடியது.

### தாளக பற்பம்

27. நாயுருவி என்ற செடியை எரித்துச் சாம்பலாக்கி அதை அமுதப்பால் என்று கூறப்படும் உமிழ் நீர் விட்டு அரைத்து, குகை போல் செய்ய வேண்டும். பின் தாளகத்தைக் கட்டியாக எடுத்து அதைச் சுத்தி செய்து அதன்மேல் குரு மருந்தை வாய் நீரால் மத்தித்துப் பூசி மேற்கூறிய குகைக்குள் வைத்துச் சீலை மண் செய்து, காய்ந்தவுடன் குக்குடப் புடம் போடப் பற்பமாகும்.

28. மேற்படி செய்தெடுத்த தாளகப் பற்பத்தை ஏழு நாட்கள் உட்கொண்டால் எலும்புருக்கி, இரத்த வாந்தி, கபநோய், ஈளை காசம், உளமாந்தை, உடல்மெலிவு, காசம் தொடர்பான நோய் போன்றவை நீங்கும்.

29. மேலும் முறைக்காய்ச்சல், ஈளைமாந்தம், காமாலை, பெருவயிறு, கண்டமாலை, வாழ்நாளைக் கலங்க வைக்கும் வலி குன்ம நோய்களான, வாந்தி குன்மம், சத்தி குன்மம், வயிற்றுக் குன்மம், உடலை உருக்கும் உள் நோய்களான உளமாந்தை வெளிமாந்தை, மிகு உமிழ்நீர் போன்றவையும் இத்தாளகத்தைச் சாப்பிடுவதால் நீங்கும். உடலும் பொன்னிறமாக மாறும்.

30. அடுத்துச் சொல்ல வருவது வங்க பற்பம். இதை விண்ணுலகு மண்ணுலகு ஆகிய யாவருக்கும் சொல்லாதே. வங்கத்தைத் தகடாகத்

தட்டிக் கொண்டு, குழிக்கல்லில் போட்டு ஆலம்பால் விட்டு ஊற வைத்துத் தகடு வெளியே செல்லாதவாறு பொத்தி அரைக்க மெழுகு கிடைக்கும். அந்த மெழுகை வில்லை தட்டி ஓட்டில் வைத்து மேலோடு மூடி வெயிலில் காய வைக்க வேண்டும்.

31. காய வைத்த வங்கத்தை 20 அல்லது 50 எரு வைத்து வராகப் புடம் போட்டால் நீற்றுப்போய் பற்பமாக ஆகும். இதை வெளியே சொல்லாமல் ஒரே பசுவின் பாலில் எடுக்கப் பட்ட வெண்ணெயில் உட்கொண்டால் தாதுக்கள் இறுகும். கற்பசூலை, யோனிச்சூலை, யோனிப்பாசி, மேகப் புண் போன்றவை நீங்குவதோடு சீழ்பிரமியம், இரத்தப் பிரமியம் போன்றவையும் நீங்கி உடல் பொன்நிறமாக மாறும்.

32. அதோடு நடுக்கல் நோய், வெட்டை நோய் ஆகியன தீரும். தாதுக்கள் கெட்டிப்படும். ஆண் குறி புண் புரைகள் நீங்கும். எலும்பு மஜ்ஜையில் ஏற்படுகின்ற எலும்புருக்கி நோய்களும், அண்ட சூலைகளும், அடி வயிற்றில் உண்டாகும் சுறுக்கும், ஆண் குறிப்புற்றும் நெற்றியடி போல் மிக விரைவில் குணமாகும்.

33. குரு சுண்ணமான முன்சொன்ன பிரம்மக்கல் சுண்ணத்தைப் பயன்படுத்தாமல் செய்தால் இந்தச் சரக்குகள் பற்பமாக ஆகாது. இந்த வித்தையை யார் அறிந்து செய்வார்கள். இதை நான் குழப்பமாகச் சொல்லவில்லை. குளிர்ந்த இரசத்தைப் (இரசத்தை மஞ்சளில் அரைத்து நீர் விட்டுக் கழுவச் சுத்தியாகும். இதுபோல் ஒட்டடை, பனைவெல்லம், சர்க்கரை, உப்பு போன்றவற்றைக் கொண்டும் சுத்தி செய்ய வேண்டும். மேலும் வெடியுப்புத் திராவகத்தினாலும், கந்தகத் திராவகத்தினாலும் சுத்தி செய்யப்படும் போது உயர்ந்த தரமான இரசம் கிடைக்கும். இரசத்தை நெருப்புக்குப் புகைந்து ஓடாமல் தங்கம் உருகும் நிலைக்குக் கொண்டு வந்து பற்பம் செய்தால் இரசபற்பம் முழுமைபெறும்.) பத்துக்கழஞ்சு சேர்த்துக் கல்வத்தில் இட்டு அதனுடன் சம அளவு கற்பூரவல்லி இலையைச் சேர்த்து அரைக்க இரண்டும் ஒன்றாகக் கலந்து விடும்.

### இரச பற்பம்

34. இரண்டரை சாமம் மேற்படி இரசபற்பத்தில் கற்பூர வல்லி இலையைச் சேர்த்தரைத்து வில்லை தட்டிக் காய வைத்துப் புதுவோட்டில் வைத்து, அதன் மேல் நல்ல ஓலையை வளையம் போல் திடமாக வைத்து ஓலையின் மேல் நாயுருவியின் விதையைப் பரப்பி மேல் ஓட்டினை நன்றாக மூடி சீலை செய்து எரு அடுக்கி, அதன்

மேல் வைத்துக் கோழிப்புடம் போட்டு எடுக்கச் செம்மையான பற்பம் கிடைக்கும்.

35. இந்தப் பற்பம் செம்மையாக இருக்குமென்று பார்வதிதேவி எனக்குச் சொன்னாள். இதன்வழி உலகத்தவர்க்கு வந்த பிணிகள் எல்லாம் தீரும். இந்த இரசத்தினால் வந்த நோய்கள் அனைத்தும் விலகும். செய்பாகம் தப்பாமல் இந்த மருந்தைச் செய்தால் ஆண்மை விருத்தியடைய நல்ல மருந்தாக அமையும். இந்த மருந்து கையில் இருக்குமானால் அனைத்து வியாதிகளையும் தீர்ப்பதற்கு மருத்துவர் முன் வருவர். மேற்படி இம்மருந்து உண்ணுவதால் வாய்சூலை ஏற்படாது, வாய் பிடிக்காது, மாறாக வாயில் ஏற்படுகின்ற நோய்கள் நீங்கும்.

36. இப்பற்பம் செய்யும் முறை உலக மக்களுக்குத் தெரிந்து இருக்காது. இதன் வழி அனைத்து விதமான நோய்களையும் குணப்படுத்த முடியும். மேலும் இந்தப் பற்பத்தால் பட்ட மரமும் துளிர்க்கும் குட்டம், குன்மம், குறைநோய், குடல் வாதம், சூலை வலி போன்றவை விலகும்.

37. அதோடு நில்லாமல் புற்றுகளாய் வெடித்த புண்புரைகள், வெட்டை மேகங்கள், புற்று நோய்கள் அரையாப்பு, அடங்காத மேகவெட்டை, ஆணிக்குத்து, வாயுத்தொல்லை, வாய், உதடு, நாக்கு மண்டை போன்ற இடங்களிலெல்லாம் புண்ணாக்கி வலிக்கும் மேகம், கைகால் குடைச்சல் மற்றும் வீக்கம், கருப்பைக் கட்டிகள் ஆகியவை குணமாகும்.

38. மேலும் ஆண்குறியில் ஏற்படுகின்ற புண்புரை, புற்று நோய்கள், கைகாலில் ஏற்படும் சூலை, கண்வீக்கம், விரையும் அண்டமும் சேர்ந்து வீங்கி, மலமும் நீரும் அடைபட்டுப் புரையோடிச் சீழ் விழுந்து புண்ணாகும் கொடிய மேகம் ஆகியவையும் நீங்கும்.

39. இவ்வுலகினில் பாண்டித்தியம் பெற்றவர்கள் இதுவரை கூறிய முறைகள் அனைத்தையும் மிக எளிதாகச் செய்து விடுவர். ஆனால் செந்தூரமாக்குவதற்குக் குரு மருந்து தேவை. முன் சொன்ன குரு மருந்தை இதில் சேர்த்துச் செய்தால் அருமையான இரசச் செந்தூரம் கிடைக்கும். இதை அறிந்தவர்கள் அடக்கமாகச் செய்வார்கள். அப்படிச் செய்யாத மருத்துவர்கள் குரு மருந்தின் தன்மையை அறியாதவர்கள் ஆகி விடுவர்.

40. நான் வந்த வழியைக் கூறுகிறேன். மனோன்மணியாள் கடாட்சத்தால் வந்துதித்தேன். கந்தனுடைய அனுகிரகத்தாலும்,

அருட்பார்வையாலும் சித்தன் என்ற பெயர் பெற்றேன். என்னுடைய குருவின் பெயர் கூறுகிறேன் கேள். அவர் இனிமையான தென்றல் தவழ்ந்து வரும் பொதிகையிலே இருப்பார். அனைத்துச் செல்வங்களையும் ஒருங்கே பெற்று, எந்நேரமும் தவம் செய்து சதாசிவ மூர்த்தியைப் போல் இருப்பார்.

41. தவம் செய்த என் குருநாதரை வணங்கி அட்டமா சித்துகளையும் தவத்தால் பெற்றேன். முப்பத்து முக்கோடி தேவர்களில் இந்த ஒன்பது கோடியாகிய நவகோடிச் சித்தர்களையும் பணிந்து கொண்டேன். அதனால் நந்தி பகவான் எனக்கு உபதேசம் நல்கினார். பழவினை காரணமாயும், தற்போது செய்ததாலும் ஏற்படும் பாவங்கள் தீர்ந்தது. பக்தியின் காரணமாக அடையப் பெறுகிற பேரின்பத்தையும், அப்பேரின்பத்தின் விளைவால் பெறப்படும் உம்பர் உலக இன்பத்தையும், சிவ வடிவில் ஒன்றாகிய தெற்கு நோக்கி அருள் பாலித்திருக்கும் தட்சிணாமூர்த்தியே ஆசானாக இருந்து அளிக்கிறார். என் குருவானவர் இருக்கும் இடம் தென்மேற்கு மூலையான பொதிகை மலையாகும்.

42. தென்னகத்தே பூரணானந்தர் என்ற பெயரில் எழுந்தருளியிருக்கும் இறைவனாகிய தட்சிணாமூர்த்தியே எனக்கு மூல முதல்வன். அகத்தியர் அவரின் பின்வழி வந்தவர். புலத்தியர் எனக்கு மூன்றாம் பாட்டன். இராமதேவர் அதற்கடுத்த உறவினர், வராக மூர்த்தி எனக்கு நான்காம் பாட்டன்.

43. இவர்கள் கருணையால் என்னைச் சீடப் பிள்ளையாக ஏற்றுக் கொண்டனர். அப்படி ஏற்றுக் கொண்ட அவர்கள் எல்லாக் கலைகளையும் எனக்குத் தந்து அருளினர். அதற்குச் சாட்சியாகச் சக்தியும் நின்றாள். அவளும் சால வித்தைகளை எல்லாம் எனக்குச் சொல்லித் தந்தாள். இராசயோக அனுபவத்தின் சூட்சமங்களையும் சொல்லித் தந்தாள். கற்ப முறைகளில் முதலில் வெண்சாரைக் கற்பமும், இரண்டாவது கருநெல்லிக் கற்பமும் அடுத்துச் சிறுபசளைக் கற்பமும், கடுக்காய் கற்பமும் சொன்னாள்.

44. கடுக்காயின் கற்பத்தைச் கூறியதோடு கைபாகமும் காட்டி மூலப்பொருள்களையும் சொன்னாள். பஞ்சபூதத் தத்துவங்களைப் பற்றிக் கூறி, சிவன், விஷ்ணு, பிரம்மா என்ற மூவருக்கும் பேர் சொல்லி மூலிகை எடுப்பதற்கான சிறந்த நேரத்தையும் சொன்னாள். இதுதான் முறையென்று மனம் சலியாமல், மனத்தில் ஏக்கமில்லாமல் அவர்கள் முடித்த முறை தவறாமல் எனக்குச் சொல்லிக் கொடுத்து நான் தான் இராமதேவர் என்று பரிவாய்ச் சொன்னாள்.

45. இப்பேர்ப்பட்ட இராமதேவர் என்னைச் சீடனாக ஏற்றுக் கொண்டு அவருடைய சூட்சமங்களை எல்லாம் எனக்குக் கனிவாய் எடுத்துரைத்தாள். அடிமுடி காணாத இறைவனை அறிந்ததால் நான் தேவர்களையும், முத்தர்களையும், ஆதிசிவனையும் அறிந்தேன். சித்தர்களையும், முனிவர்களையும் அறிந்ததோடு ஆதி சிவனையும் அறிந்ததால் சித்தர்களுக்கு எல்லாம் பிள்ளையாகினேன். அதனால் பெருமை பெற்றேன்.

46. இந்நூலில் நூறு பாடலில் பிரபலமாய் விளங்கும் செந்தூர பற்பங்களையும், கற்பத்தின் நேர்மையையும், கரு உற்பத்தியினுடைய தன்மையையும் கூறியுள்ளேன். விதி இருந்தால் இவை எல்லாம் கை கூடும். இதில் கூறியுள்ள மருந்துகளைச் செய்து சாப்பிட்டால் நோய்கள் மிக விரைவில் குணமாகும். பெண்களின் மீதுள்ள ஆசையை விட்டுக் கற்ப மருந்து உட்கொண்டு மனோன்மணித் தாயாரைப் பூசிக்க வேண்டும்.

**ஐங்கோல கற்பம்**

47. தாயைப் பூசித்தால் அனைத்தும் சித்தியாகும். பூசிக்கும் போது பொய் சொல்லுதல் கூடாது. காசி என்பது புருவ மத்தியே ஆகும். அதற்குப் போகும் வழி சுஷிம்னா நாடியாகும். தேசியான காற்றை மூலாதாரத்தில் இருத்தி அங்குள்ள வாசியைத் தலை உச்சிக்கு ஏற்றி அமிர்தம் கொள்ள வேண்டும். இந்த வாசியோகப் பயணம் செய்வோரை உலகத்தவர் போற்றுவர்.

48. மேற்படி மதியமுதம் என்கின்ற அமிழ்து உண்பதற்கும், வல்லாரை என்கின்ற கற்ப மூலிகை உண்பதற்கும் தயங்க வேண்டாம். இவை இரண்டும் நல்ல விதியை, கற்ப சாதனையை உண்டாக்கும் இன்னும் கற்பம் சொல்ல வேண்டுமானால் நாசியின் வழி சுவாசிக்கும் வாசியோகத்தைச் செய்து வந்தால் இந்த உடலோடு நீண்ட காலம் வாழ முடியும். இம்மருந்தை உதயாதி காலத்தில் உண்ணுதல் வேண்டும். மாலை வேளை இரண்டாம் பட்சமாகும்.

49. பசளை என்ற மூலிகையைக் கிழங்கு மற்றும் வேரை அகற்றிக் கல்லுரலில் போட்டு இரும்புலக்கையால் இடித்துப் பானையில் போட்டு அதோடு பூநீறு என்கின்ற அமுரியை நாலுபடி விட வேண்டும்.

50. நாலுபடி அமுரி விட்டபின் அடுப்பில் வைத்துப் பசளையின் எடைக்குப் பாதி எடை அளவு கற்பூரம் சேர்த்து விநாயகருக்குப்

பூசை செய்து நெருப்பு மூட்டி, சிறு தீயாக எரிக்க வேண்டும். அப்படி எரிக்கும் போது அனல் மீறாமலும், சட்டியில் உள்ள சரக்கு அடிபிடித்துக் கொள்ளாமலும் பார்த்துக் கொள்ள வேண்டும். இப்படிச் சிறு தீயாக எரித்துத் துடுப்பில் கிண்டும் பொழுது மருந்து கொதித்து நெய்யைக் கக்கும்.

51. நெய் வரும் பதத்தைப் பார்த்துச் சட்டியை அடுப்பில் இருந்து கீழே இறக்கி, நெய்யை வடித்து எடுத்துக் கொள்ள வேண்டும். அடியில் தங்கியுள்ள கருகாத புஷ்டியான கல்கத்தைத் தனியாக எடுத்துக் கொள்ள வேண்டும். தனித்தனியாக உள்ள இவ்விரண்டால் யோக நிஷ்டையும், யோகப் பெருவாழ்வும் கிடைக்கும். அதனால் இதைப் பாதுகாப்பாக வைத்துக் கொள்ள வேண்டும்.

52. மேற்படி எடுத்த நெய்யினையும், கல்கத்யையும் பாதுகாப்பாக வைத்துக் கொண்டு, அதோடு வீரமும் சாரமும் சேர்த்தால் மேலான கற்பம் கிடைக்கும். அதுவா இதுவா என்று சந்தேகிக்காமல் தெளிவாய் இருந்தால் இதுவே வேதையாகும்.

53. சரம் பார்த்து வாசியோகம் செய்தால் மனம் அடங்கும். மனம் அடங்கியபின் காலையில் தயிலத்தை ஒரு கரண்டி அளவும், மாலையில் கல்கத்தை நெல்லிக்காய் அளவும் சாப்பிட வேண்டும்.

54. இங்ஙனம் கல்கத்தையும், தயிலத்தையும் கற்பமுறையில் உட்கொண்டால் கல்கத்தால் வலிமையும், தயிலத்தால் அழகும் உண்டாகும். நரை திரை அகலும். காலன் எனப்படும் எமன் நெருங்க முடியாத நிலை ஏற்படும். உடல் முழுவதும் மேல்தோல் உரியும் இங்ஙனம் தோல் உரிந்தால் உடல் வைரம் போல் உறுதி பெறும். இந்த முறையைப் பராசக்தி எனக்குச் சொன்னாள்.

55. மேலும் பிரம்மன் எழுதிய தலைவிதி அழிந்து போகும். உடல் பொன் போல் பொலிவு பெறும். உடற் சித்தி வாய்த்து, மரணம் இல்லாத வாழ்வு கிட்டும். இன்பப் பெருக்கு ஏற்பட்டுப் பேரின்ப வீடு சித்திக்கும். எலும்புகள் எல்லாம் இறுகி வலுப்பெற்று விடும். யோகம் கை கூடும்.

சவ்வீர மெழுகு

56. மேற்படி தயிலத்தில் மருத்துவ வாத வித்தை செய்யும் முறையை பார்வதிதேவி எனக்குச் சொன்னாள். சவ்வீரத்தை ஒரு கட்டி எடுத்து மேற்சொன்ன தயிலத்தில் ஓர் இரவு ஊற வைத்து, அடுத்த நாள் சூரிய ஒளியில் காய வைத்து, அதன் மேல் கல்கத்தைக்

கவசஞ் செய்து அதன் மேல் சீலைமண் வலுவாகச் செய்து வெயிலில் காய வைத்து நல்லெண்ணெய் விளக்கிலே வாட்டினால் மெழுகாகும்.

*57.* மேற்படி மெழுகை எடுத்துச் சிமிழில் பாதுகாப்பாக வைத்துச் சிவனாரைத் தொழுது, அவர் அடி பணிய வேண்டும். பின் தங்கத்தை எடுத்துத் தகடாய்த் தட்டிப் பொடி செய்து கொள்ள வேண்டும். பின்னர் மெழுகின் எடைக்குப் பத்தில் ஒரு பங்கு தங்கத்தின் பொடியைச் சேர்த்துச் சூரிய ஒளியில் போட்டால் மெழுகானது தங்கத்தைத் தின்று மெழுகாக மாற்றி விடும். இது பலருக்கும் நன்மை செய்யக் கூடியது.

*58.* மேற்படி மெழுகை எடுத்து நவலோகங்களில் கொடுக்கும் போது இருபத்து நான்கு மாற்று கொண்ட தங்கம் கிடைக்கும். இம்முறையைக் கைபாகமும், செய்பாகமும் தவறாமல் செய்ய வேண்டும். சற்குருவை நாளும் போற்றி வணங்கிப் பராசக்தியை மனத்தில் வைத்து நித்தம் தொழுதால் இக்காரியம் சித்திக்கும். இம்முறையை ஒருவருக்கும் கூறக் கூடாது. இம்மெழுகை உட்கொண்டு காயசித்தி பெறுவாயாக.

*59.* மேற்படி மருந்தை உண்டு வா. இதனுடைய சூட்சத்தை யாருக்கும் சொல்லாதே. தேவையற்றதைப் பேசாதே. உமைமீது ஆணை. சிவன் மீது ஆணை. முருகன் மீது ஆணை, முனிவர் மீது ஆணை, காளி மீது ஆணை, கங்கையாகிய நீர் மேல் ஆணை, இயங்கும் பூமி மீது ஆணை. இதனை யாருக்கும் சொல்லாதே.

*60.* மேலும் இந்தக் கற்பநூல் உன்னிடம் இருக்கிறது என்று யாரிடமும் கூறக் கூடாது. அப்படிக் கூறினால் தலையில் இடி விழும். அதை மீறி இந்த நூலை நீ தந்தால் உனக்கு அழிவு ஏற்படும். ஆகையால் வாயை மூடிக் கொண்டு பயபக்தியாய் குருவைப் போற்றிக் கொண்டிரு. இந்நூல் பக்தர்களுக்காக எழுதப்பட்டது. அத்தகைய சீடர்கள் வித்தைக் கற்றுக் கொள்ள வந்தால் முதலில் அவர்களுடைய நடத்தையைக் கவனி.

*61.* அவன் நல்லவனாய் இருந்தால் நூலைக் கொடு. கெட்டவனாக இருந்தால் கொடுக்காதே. இவ்வுலகில் சூது நிறைந்தவர் அதிகமுண்டு. அவர்களைத் திருடர்களுக்கு ஒப்பாக எண்ணி அவர்களிடமிருந்து விலக வேண்டும். திருமணம் செய்து கொண்ட பெண்ணைக் கைவிடாமல் காப்பாற்ற வேண்டும். இவ்வாறான நற்செய்கைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். அங்ஙனம் இன்றித் தீயோருடன் சேர்ந்தால் நல்ல வாழ்க்கையும், அறுசுவை உணவும் உனக்குக் கிடைக்காது.

*62.* இவ்வாறு தீயோரின் பழக்கத்தால் உணவு கிடைக்காமல் வெறியெழும்பிக் கெட்டவர்கள் இவ்வுலகில் அதிகமுண்டு. ஆகவே மடையரான பாவிகளுடன் சேராமல் நல்ல முறையில் வாழ்க்கை நடத்த வேண்டும். அது எப்படி என்றால் முறையாக இல்லறத்தில் இருந்து கொண்டு, நல்ல சாத்திரங்களைக் கற்றுக் கொண்டு, துறவிகளின் பசி போக்கி, பராசக்தியைப் பூசை பண்ண வேண்டும்.

*63.* இவ்வாறு பூசை செய்து கொண்டு, எப்பொழுதும் மனத்தைப் பூரணத்தில் நிறுத்தி அறிவோடு கலந்து நின்று, அமுதத்தை உட்கொண்டால் அகங்காரம் அழிந்து, நிருவிகற்ப சமாதி கிட்டி, நீங்காத சிவ யோகம் கிடைக்கும். இவ்வாறு நிஷ்டையில் இருந்து கொண்டு ஆறு ஆதார இடங்களைக் கடந்து அதற்கு அப்பால் உள்ள ஆனந்தப் பெருங்கடலில் மூழ்க வேண்டும்.

*64.* ஆனந்தக் கடலின் அலையில் மூழ்கிப் பூரணத்தை அடையும் போது உடல் கற்பம் ஆகிறது. அமிர்த தாரணையில் இருந்து அமிழ்தம் சொட்டுகிறது. இறைவனைத் தியானம் செய்து இந்த அமிர்தத்தை உண்ணும் போது மரணமிலாப் பெருவாழ்வு கிடைக்கும். காலன் நம்மை அணுக மாட்டான். மலையிலே இருந்து தவம் செய்து வந்தால் ஞானம் கிட்டும்.

*65.* மேற்சொன்னபடி எல்லாம் தவறாமல் செய்தால் அனைத்து வித்தைகளையும், கற்பங்களையும் தாய் தருவாள். அது மட்டும் இன்றி எப்பொழுதும் நம்மிடையே பராசக்தி குடியிருப்பாள். நம்மைக் காத்து உயர்வடையச் செய்வாள். ஞானமும் கிட்டும். நம்மை விட்டு விலக மாட்டாள். இதுதான் கடைத்தேற உண்மையான வழி. இதை மறைக்காது உலகத்தோர்க்குச் சொல்லிவிட்டேன்.

*66.* மேற்படி ஞானிகளுக்கு உறுதிமொழியாகக் கூறுவது என்னவென்றால் இந்நூல்தான் அனைத்துக்கும் ஆதாரம். பல கலைகளையும் இதில் சொல்லியுள்ளேன். மருத்துவமும் இதில் கூறியுள்ளேன். பராசத்தியின் அருளால் இதில் சொல்லியுள்ள முறைகள் அனைத்தும் பலிதமாகும். சாபத்தை நிவர்த்தி செய்து கொண்டு, குகையிலுள்ள சித்தர்கள் எல்லாம் இந்நூலைப் படித்து மேல்நிலையடைந்தார்கள். இந்நூலை வாங்கி மறைத்து விட்டனர்.

*67.* பிறகு இந்நூலை வைத்திருக்கும் சித்தர்களை வணங்கி, "இந்த நூலை உலகத்தில் உள்ள நல்லோர்க்காக எழுதினேன்" என்று கூறி நூலைத் திரும்ப வாங்கினேன். இந்நூலின் உள்ளே உள்ள கருவை அறிந்தவர்கள் வெளியே கூறமாட்டார்கள். நல்லவர்களாக இருப்பின்

பரிபூரணியின் அருளால் இந்நூலில் உள்ள செய்திகளைப் பற்றிய அறிவு தன்னால் உண்டாகும். மேலும் இன்னமொரு கற்பம் கூறுகிறேன் கேள்.

வசிய ஈடு

68. மாயன் என்ற மந்திர சாலம் இங்குக் கூறுவேன். ஆணும், பெண்ணும் புணரும் போது சுக்கிலமும், சுரோணிதமும் பெண்ணின் கருப்பையில் ஒன்றாகக் கலந்து பின் அக்கலவை பெண் உறுப்பின் வழி வெளியே வரும். இதனை நல்ல பீங்கானில் வார்த்துப் பக்குவப்படுத்த வேண்டும்.

69. மேற்படி வைத்த கருவாகிய கலவையில் ஒரு வழி கூறுகிறேன். அதில் எட்டுக்கால் பூச்சியும், ஈயும் போட்டு ஐ விரலிச் சாறுவிட்டுக் கடைய மெழுகாகும். திகைப்பூண்டு மீது வளரும் பொன்வண்டும், மின்மினிப் பூச்சி ஐந்தாறும் சேர்த்துக் கைப்பிடி அளவு ஆடையோட்டி அத்துடன் நிலப்பனை கிழங்கையும் கருவில் சேர்க்க வேண்டும்.

70. சேர்த்த பொருளை ஒன்றாக அரைத்துக் கொண்ட சிமிழில் பாதுகாப்பாக வைத்து, நீர்விடாமல், காற்றாடாமல், பாதுகாப்பாக வைத்துக் குருவைப் போற்றி நேர்த்தியாக மோகினியை ஓர் இலட்சம் உருவேற்றினால் நினைத்த செயல் கை கூடும். இதை நெற்றியில் திலதமாகப் பூசித் தியானம் செய்ய வேண்டும்.

71. அப்படித் தியானம் செய்தால் பெண்கள் வசியம் ஏற்படும். பெண் வசியத்திற்கு இம்மருந்து சிறந்தது. இப்படிப்பட்ட திலதத்தை நாம் அணியும் போது உமையாள் கடாட்சத்தால் பொன், பணம், மற்றும் கேட்பதெல்லாம் கிடைக்கும். இந்த மானுடப் பிறவி முடியுமட்டிலும் வெற்றியே கிடைக்கும்.

72. அடக்கமாக இன்னுமொரு கற்ப மருந்தைக் கேளு. தாய் சொன்ன படி உரைக்கிறேன். நாய் போல் திரியாமல், வீண் பேச்சுப் பேசுபவருடன் பேசாமல், கர்மவினை உள்ளவர்களிடம் சேராமல், காமத்தை விட்டு, கள்ளுண்ணாமல் தூங்கும் போதும், உட்கார்ந்திருக்கும் போதும் யோகம் செய்தால் அனைத்தும் கை கூடும்.

73. பராசக்தி சொன்னதை மூலிகை பாகத்தோடு சொல்லுகிறேன் கேள். ஆவாரையின் பட்டை, சிவனார் வேம்பு, வேங்கைப்பட்டை, இவையனைத்தையும் இடித்துச் சலித்து, முற்சொன்ன குரு முப்புவையும் சேர்த்துச் சமமாகப் பாண்டத்தில் போட்டு வாயை மூடி சீலை செய்து குழித்தயிலம் இறக்க வேண்டும்.

74. இத்தயிலத்தைப் பாதுகாப்பாக வைத்துக் கொண்டு தாயையும், முருகப் பெருமானையும் பூசித்துப் பண எடை உட்கொண்டால் நீங்காத வியாதியெல்லாம் குணமாகும். நரைதிரை மூப்பு அகன்று போகும். நாடி நரம்புகள் அனைத்தும் உறுதியாக வலுக்கும்.

75. மேற்படி தயிலத்தை ஒரு மண்டலம் சலிக்காமல் பண எடை அளவு உண்டு வந்தால் உடம்பில் தோல் உரியும். உடல் வெளுப்பாக மாறும். உடல் கெட்டிப்படும். சூரியனைப் போல் ஒளி விட்டுப் பொன் போல் பிரகாசிக்கும். இவ்வாறு இருக்கும் போது சித்தர் பெருமக்கள் அழைத்து இந்தத் தயிலத்தின் மகிமைகளைச் சொல்வர்.

76. மேற்படி தயிலத்தை ஒரு மண்டலம் சாப்பிட்டால் உடல் வலுப்பதோடு மட்டுமல்லாமல் அழியவும் செய்யாது. ஆண் சித்தனாக மாறிவிடுவாய். முறையாக உடலைச் சித்தி செய்து கொண்டால் என்றென்றும் சிறு பிள்ளை போல இருக்கலாம். இத்தயிலத்தால் இரசமும், அறுபத்து நாலு சரக்கும் கட்டும்.

77. இத்தயிலத்தை மேற்சொன்ன சரக்குகளுக்குச் சுருக்குக் கொடுத்தால் எல்லாச் சரக்கும் இறுகி மணியாகும். சுண்ணமும், மெழுகு போன்றவையும் கைகூடும். இதை முடிப்பதற்குக் குருவுடைய கடாட்சம் வேண்டும். மேலும் இன்னுமொரு முறையையும் சொல்லுவேன். இதை முடிக்க வீட்டிலேயே ஒரு மூலி உள்ளது. அந்த மூலியானது காயோடே விரையில்லாமல் இருக்கும். அந்த மூலிகை விளையும் இடம் கரையோரம்.

78. கரையோரம் மூலிகை இருக்காது என்று நினைக்க வேண்டாம். நிழல் சேர்ந்த தண்ணீர் ஓரம் முளைத்திருக்கும் அந்த மூன்று மூலி. அந்த மூலிகையிலிருந்து கொண்டு தேவர்கள் வாசி வாசி என்று வாசம் செய்வார்கள். தவசு நிறைவேறியதும் தவத்தை விட்டு வெளியேறித் துலங்குவார்கள்.

79. இவ்வாறு வாசிதேவர் தவத்தை விட்டு வெளியே வந்தால் மூன்று செடிகளும் வாடி விடும். ஊராருக்குத் தெரியாமல் மூன்றையும் பிடுங்கும் போது அச்செடியானது சீறும். மூலிகையின் நிறம் சிவந்து இருக்கும். இது செடியல்ல. இம்மூலிகையைப் பூரணத்தை அறிந்தவர்கள் மட்டுமே காண முடியும். இதைப் பற்றி அறிய நீ நல்ல குருவைத் தேடிக் கேட்க வேண்டும்.

80. அந்த மூலிகைகளை அறிவதற்குக் குருதான் சொல்ல வேண்டும். மற்ற யாருக்கும் தெரியாது. அந்த மூலிகையைக் கண்டு

நல்ல இளசாகப் பார்த்து எடுத்துக் கொண்டு சிறுக அறிந்து சட்டியில் இட்டுத் தைவேளைச் சாறு விட்டு அடுப்பில் ஏற்றி இளந்தீயாகப் பொங்கி வராமல் எரித்திட வேண்டும்.

81. இப்படி நீர் வற்றும் வரை முறையாகவும், பொருமையாகவும் எரித்தால் சட்டியின் அடியில் மூலிகை சுண்ணமாக நிற்கும். இந்தச் சுண்ணத்தைப் பார்த்த உடன் தரித்திரம் போகும். இதனால் அனைத்துச் சரக்குகளும் நீறும். இந்த மூலிகை அரிக்கு முதலெழுத்தாகும். விஷ்ணுவாலும், பிரம்மாவாலும், சிவனாலும் காண முடியாத இந்த மூலிகையை இங்கே கூறிவிட்டேன். இந்நூலில் கூறியுள்ள சுண்ணங்களில் இச்சுண்ணமே மேன்மையானது.

82. இச்சுண்ணத்தின் பெருமை பற்றி நான் என்னென்று கூறுவேன். இதனைக் கடுகளவு கொடுத்தால் அனைத்து வியாதிகளும் ஓடி விடும். இதனுடைய பெருமை வானத்தையும், பூமியையும், கைலாச மலையையும் தாண்டிச் செல்லும். சிவயோகம் செய்யும் பொழுது எள்ளளவு நாவிலிட்டுக் கொண்டு செய்தால் பசியும் தாகமும் அகலும். உடலுக்கு நன்மை தரும். பல நன்மைகளை இது கொடுக்கும்.

83. இப்படியே சிவயோகம் செய்தால் உடல் அழியாமல் நிற்கும். மூச்சு மேலும் கீழும் ஓடாமல் ஆதாரத்தில் ஒடுங்கி நிற்கும். மகாமேருவைத் தொடலாம். மகாமேருவைத் தொடுவதன் வழி சும்மா இருக்கும் சுகம் கிடைக்கும். நரை திரை அகலும். இந்த முறையை அறிந்து செய்தால் வாத வித்தையையும் வளமாகக் கூறுவேன்.

84. இந்தச் சுண்ணத்தில் உமிழ் நீர் விட்டுப் பிசைந்து முற்சொன்ன ஆதி குரு முப்பைச் சேர்த்து அது இளகாமல் ஐங்கோலத் தயிலம் சேர்த்து எட்டுக்கு ஒன்றாய் வீரத்துடன் சாரம் சேர்த்துப் பத்திரப்படுத்திப் பார்வதிக்கும் சிவனுக்கும் பூசை செய்து, சுத்தமான தங்கத்தைப் பொடியாகச் செய்து தங்க எடைக்குப் பாதி முன் சொன்ன கருவில் சேர்ப்பாய்.

85. ஒன்றாகச் சேர்த்த கருவைத் திரட்டிக் கொண்டு பார்வதிக்குப் பூசை செய்து, சூரியனில் வைத்தால் தங்கத்தகட்டைச் சுண்ணம் தின்னும். அதை இரும்புக் குச்சியால் கிண்டிப் பத்திரமாகச் சிமிழில் எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும். மேற்படி சுண்ணத்தை நெல்லெடை அருந்தும் போது உடல் பொன் போல ஆகும்.

86. பொன் போல் ஆகுமென்று இராமதேவர் எனக்குச் சொன்னார். அடியேனும் பாகுபதமான சுண்ணத்தைக் கோடி வேதை செய்தேன். இந்தச் சுண்ணம் பட்ட இடமும், தொட்ட இடமும்

தங்கமாக மாறும். வெள்ளியும் செம்பும் உருகும் போது விராகனுக்கு எள்ளளவு போட்டு உருக்கினால் ஏழு மாற்று உள்ள தங்கமாக மாறும். இந்தப் பூசையை வெளியே சொல்லாதே.

***87.*** இந்தச் சுண்ண முறைகளில் சேர்க்கும் மேற்படி கூறிய ஆதியந்தக் கருவைப் பற்றி ஒருவருக்கும் சொல்லாமல் கற்பமாக உண்டு தேறுவாய். உலகத்தாருக்கு இந்தப் பாகம் தெரியாது. கண்டதையும் சுட்டு எரித்துக் கரியாக்கிப் பாவியானோர் ஏராளம். மண்ணையும், விண்ணையும் அறியாமல், வழி தெரியாமல் வாதம் என்பது வாய்ப் பேச்சு என்று கூறுவோர் பலர். விதி இருப்பின் கண்ணிமைக்கும் நேரத்திற்குள் சித்திக்கும். வாலை தேவியினுடைய உபதேசமும் கிட்டும்.

***88.*** முறையாக அறிந்த சித்தர் பெருமக்கள் அதை வெளியே சொல்ல மாட்டார்கள். அவர்களின் மனம் போல் நடந்து தொண்டு செய்தால் அடியவராக ஏற்று ஆதி முதல் அந்தம் வரை உபதேசம் செய்வார்கள். இவ்வுலகத்தோருக்கு இன்னுமொரு தயிலம் கூறுவேன். இதனுடைய மகத்துவங்கள் பெரிது. கெந்தி, பூரம், நவச்சாரம் ஆகியவற்றை எடுத்து,

***89.*** கல்வத்தில் போட்டு இடித்துக் கொண்டு ஒரு சராசரி அளவுடைய பானையில் வைத்து மேலே ஒரு சட்டியைக் கவிழ்த்து மூடிச் சந்து வாய்கள் தெரியாமல் சீலை செய்து குழித்தயிலம் இறக்கி மேன்மையுடன் குப்பியில் பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டு, பண எடை அளவு உட்கொண்டால் உடல் வலுத்து வைரம் போல் ஆகும்.

***90.*** மேற்படி கற்ப மருந்தை உட்கொள்ளும் போது தேகம் வலுக்கும். காலன் நம்மை அணுகாது. ஒரு மண்டலத்தில் உடலின் மேல் தோல் உரியும். அது போன்ற நேரங்களில் யோகத்தில் இருக்க வேண்டும். கீழும் மேலும் வாசியோகம் செய்ய வேண்டும். இப்பேர்ப்பட்ட உடல் வலுவானதாயினும், சற்றும் பிசகாமல் யோகத்தில் முழுக வேண்டும். அடுத்து இன்னுமொரு தயிலம் சொல்வேன். வீரம், பூரம், சாரம்.

***91.*** இவற்றோடு சூதத்தைச் சமனாய்ச் சேர்த்துக் கொண்டு தயிலத்தில் விட்டு அரைத்து வழித்துக் கொண்டு வங்கத்தில் பூசி நன்றாகப் புடம் போட்டால் வங்கமானது தன் நிலையில் இருந்து உயர்ந்து தங்கமாக மாறும். இப்படிப்பட்ட பொருளை எடுத்துக் குருபதத்தைப் போற்றிச் சிவயோகத்தில் தேர்ச்சி பெற வேண்டும்.

**மருதாணித் தயிலம்**

***92.*** மேற்சொன்ன தயிலத்தோடு இன்னுமொரு தயிலமும் சொல்லுகிறேன். மருதோன்றிச் சமூலம் எடுத்து அதனுடன் மருதாணி

அளவிற்கு வெட்டி வேரும் சேர்த்து, முற்சொன்ன ஆதியந்தக் கருவையும் கூட்டி இடித்துப் பாண்டத்தில் போட்டுப் பார்வதியைத் தியானம் செய்து குழித்தயிலம் இறக்க வேண்டும்.

*93.* இந்தத் தயிலத்தின் வழிவகையைக் கூறுகிறேன் கேள். அரிதாரம் கெவுரி, வெள்ளைப் பாடாணம், மயில் துத்தம், சூதம் ஆகியவற்றைச் சம அளவு எடுத்துக் கொண்டு மேற்சொன்ன தயிலத்தை இதில் விட்டு அரைத்து மெழுகு பதம் ஆனவுடன் சிமிழில் வைத்துப் பார்வதியைப் பூசிக்க வேண்டும்.

*94.* இந்த மெழுகைச் செம்பிற் பூசி புடம் போட்டால் சிவந்து விடும். இதனை வெள்ளியில் தடவிப் புடம் போட்டால் முழுமையான மாற்றுடைய நல்ல தங்கம் கிடைக்கும். இந்த மெழுகை நவலோகங்களில் தடவிப் புடம் போட்டால் இறுகி மணி போல் கட்டும். இவையெல்லாம் உருத்திரனை வணங்கிச் செய்தால் பலிதமாகும்.

*95.* மேலும் இன்னுமொரு மையைச் சொல்லுவேன். இந்த முறை நல்ல வசியமும் ஆகும். வெடியுப்பு, கல்லுப்பு, கரியுப்பு, வளையலுப்பு, சவுக்கார உப்பு ஆகிய ஐந்து உப்பையும் சம அளவு எடுத்துக் கூட்டிப் பழச்சாற்றால் அரைத்து வில்லையாக்கிச் சூரியனில் வைக்க வேண்டும்.

*96.* சூரியனில் வைத்த பின்பு ஓட்டில் வைத்து மூடி சீலை செய்து புடம் போட்டு, புடம் ஆறிய பின் எடுக்க மேற்படி உப்புகள் கருகி நிற்கும். இந்தக் கருகிய உப்போடு காரத்தையும், சாரத்தையும் சேர்த்துப் பழச்சாறு விட்டு அரைத்து மீண்டும் வில்லை தட்டிச் சூரியனில் வைக்க வேண்டும்.

*97.* மேலும் இந்த வில்லையை ஓட்டில் வைத்துச் சீலை செய்து புடம் போட்டு எடுக்க நல்ல கரியாக இருக்கும். முன்னே சொன்ன கரியையும், இந்தக் கரியையும் சரி சமமாகச் சேர்த்துக் கல்வத்தில் அரைக்கும் போது மைபோல் ஆகும். இந்த மையின் பெருமையை என்ன சொல்வது!

*98.* மேற்படி மையை எடுத்துத் திலகம் வைக்க மக்கள் வசியமாவர். இந்த மையை உலகில் உள்ள அனைவரும் செய்ய முடியாது. இந்த மையினுடைய பெருமை இந்த அண்டத்தைக் கடந்து பகிரண்டம் வரை செல்லும். இந்த மையினுடைய பெருமை குரு கடாட்சத்தால் கிடைத்தது. இதனுடைய பெருமை அளவிடற்கரியது.

*99.* இந்த மையை வைத்துப் பார்க்க அனைத்தும் சித்தியாகும். வாக்குப் பலிதம் உண்டாகும். மண்டலமே வசியமாகும். இதன் வழி

அனைத்து மக்களும் வசியமாவர். பெண்கள் வசியமும் உண்டு. அனைத்து விதமான நலமும் வளமும் வந்து சேரும். இதனைப் பார்வதித்தாய் எனக்கு அருளினாள்.

**100.** மேற்சொன்ன மையை எடுத்துத் திலகம் இட்டால் கவுளியும் வசியமாகும். கொடிய விலங்குகள் முதல் மங்கைமாரும் அனைவரும் வசியமாவர். இந்த மை எண்ணியதெல்லாவற்றையும் செய்யும்.

**101.** இந்த மையினுடைய மகிமையை இந்த உலகத்தில் யார் அறிவர். இந்த மையினுடைய பெருமையால் இராமதேவர், கொங்கணச் சித்தர் முதலான அனைத்துச் சித்தர்களும் கூடி நின்றனர். அனைவருக்கும் பாட்டனாய் விளங்கும் அகத்திய மாமுனிவன் கிருபையினால் பாக்கியத்தைப் பெற்றேன். இந்த மையினுடைய மகிமையினால் சித்தர் பெருமக்கள் அனைவரும் வந்தனர்.

**102.** மேற்சொன்ன சித்தர்கள் அனைவரும் அடியேன் தவம் செய்யும் மலைச்சாரலில் வந்து நின்று, அவர்கள் இருக்கும் இடத்திற்கு என்னையும் அழைத்துச் சென்றனர். நீதான் எங்கள் நல்ல பிள்ளை என்று கூறி மகிழ்ச்சியுடன் எனது முகத்தைத் தடவினர். இந்நிலையின் வழி குரு உபதேசம் பெற்றேன். அதாவது வித்தைகளைத் தொட்டுக் காட்டினர். நானும் தவம் பெற்று முழுமை அடைந்தேன்.

**103.** என் ஆசானின் அருளால் தவம் பெற்றேன். அவர் அருளாலே அனைத்துக் கருமச் செயல்களையும் அறியப் பெற்றேன். புதியதொரு கற்பத்தை நான் கண்டடைய வேண்டும் என்ற விருப்பினை அவர் எனக்குச் சொன்னார். சிவனின் இறையடியை நாடுவதற்கான தெளிவினையும் எனக்குத் தந்தார். உடலைச் சித்தியடையச் செய்யும் வழிமுறையையும் எனக்குச் சொன்னார். அதற்கான பார்வை நூல்களையும் சொல்லி இன்னது இது என்ற தெளிவையும் தந்தார்.

**104.** என் அய்யப்பாட்டிற்கான வினாக்களுக்கு உரிய தெளிவினைத் தந்த ஆசானின் பாதத்தினைப் பணிந்து தொழுவேன். நிறைந்த உள்ளத்தோடு ஆணவமின்றி ஆசான் வழி நின்றமையால், சிவனின் புண்ணியத்தால் புனிதம் ஆனேன். இதன்வழி கற்பங்கள் அனைத்தும் செய்தறிய ஆசானின் அருள் எனக்குக் கிட்டியது. ஆகவே இந்நூலை அறிவும் தெளிவும் குறைந்த நூல் என்ற நினைக்க வேண்டாம். குரு என் முன்னே நிற்க, அவன் முன்னே தட்சிணாமூர்த்தி குருவாக நிற்க, அதன் வழி எழுந்தது இந்நூல் என்று உணர்வாயாக.

*****

# பாடல் முதற் குறிப்பகராதி


| | |
|---|---|
| அடக்கமாம் இன்னமொரு | 70 |
| அடுத்தல்லோ மூலிகை | 78 |
| அலையிலே மூழ்கியல்லோ | 62 |
| ஆகுமென்று யெனையாண்ட | 84 |
| ஆச்சப்பா இன்னமொரு | 25 |
| ஆச்சிந்த முப்புவை | 14 |
| ஆச்சென்று இப்படியே | 81 |
| ஆட்டமடா இந்தமையில் | 99 |
| ஆமென்ற மெழுகெடுத்து | 55 |
| ஆமென்று ரேசக | 51 |
| இதுமூன்றும் உரலிலிட்டு | 87 |
| இயம்பிநீ நூலிருக்கு | 58 |
| இருதாளைப் போற்றி | 61 |
| இல்லாத மூலியென்று | 76 |
| இறக்கினதோர் தைலத்தை | 72 |
| உண்டுவா ஒருத்தருக்கும் | 57 |
| உலகத்தில் ஞானிகட்கு | 64 |
| உரைக்கிறேன் பிரமத்தை | 11 |
| எடுத்தவர்கள் அருமைகொண்டு | 41 |
| எரித்துநீ நீர்வத்தி | 79 |
| என்னலாம் வங்கபற்பம் | 28 |
| ஒன்றான பொருளப்பா | 86 |
| ஓடுமடா இன்னமொன்று | 20 |
| கட்டாத பற்பமிது | 34 |
| கடுக்காயைச் சொல்லியல்லோ | 42 |
| கண்டவர்கள் பெரியோர்கள் | 86 |
| கரைந்துபோம் லிங்கத்தில் | 36 |
| கல்லென்றும் மலையென்றும் | 9 |
| காணாது முறைகாச்சல் | 27 |
| காய்ந்தது என்றால் | 95 |
| காய்ந்தபின்பு வராகபுடம் | 29 |
| கிடையாமல் வெளியெழும்பி | 60 |
| குருவிலே பணவிடை | 16 |
| கூறுவேன் அகத்தீசர் | 3 |
| கூறுவேன் சவ்வீரம் | 17 |
| கேளப்பா ஊரடுத்து | 7 |
| கேளப்பா மாயன் | 66 |
| சாற்றுவேன் தாய்பதத்தை | 2 |
| குட்டிநீ சுருக்கிடவே | 75 |
| சூலைபோம் பதினெட்டு | 22 |
| செப்புவேன் சித்தருட | 4 |
| செம்மையுள்ள பற்பமடா | 33 |
| சேர்த்தல்லோ ஒன்றாக | 68 |
| சேர்த்தல்லோ ஒன்றாக | 83 |
| சேர்த்தரை நீசாமம் | 32 |
| தண்ணீர்தான் போனபின்பு | 12 |
| தப்பாமல் இப்படியே | 63 |
| தரணியிலே நீயிருந்து | 5 |
| தவம்செய்த சற்குருவை | 39 |
| தானென்ற இந்த உப்பு | 15 |
| தானென்ற செந்தூர | 19 |
| தானென்ற குருமுடிக்க | 6 |
| தானென்ற ரசமுடன் | 89 |
| திடமான கந்தகத்தின் | 21 |
| தியானித்து மெழுகதனை | 92 |
| தேருதற்கு இன்னமொரு | 90 |
| நன்மையுள்ள மெழுகெடுத்து | 56 |
| நாலுபடி அமுரிவிட்டு | 48 |
| நிசமாகும் உன்குருவை | 31 |
| நோக்கி யிந்த | 97 |
| பகர்ந்திட்ட மையெடுத்து | 98 |
| பட்சமென்றால் நல்லதடா | 47 |
| பண்ணினால் பாவை | 69 |
| பதனம்வெகு பதனமடா | 50 |
| பலிக்குமென்று என்தாயார் | 71 |
| பார்த்துநீ ஈந்தா | 59 |

பாரப்பா எனையடிமை 43
பாரப்பா பண்டிதங்கள் 37
பாரேநீ தைலத்தில் 54
பாரேநீ மையெடுத்து 96
பிரம மென்றும் 8
பிஷ்டிதனைக் கொண்டதி 52
பூசித்த புண்ணியர்க்கு 45
பேசினேன் இந்தநூல் 44
பொதிகை தனில்வாழும் 40
பொருளென்ன அருளென்ன 10
போச்சுதே பிரமனுட 53
போட்டெடுத்துப் புத்தோடு 94
போமென்ன புண்புரைகள் 35
மதியமுத முண்பதற்கு 46
மனோன்மணியாள் பாதத்தை 1
மார்க்கமுடன் எடுத்துஇந்த 13
மேகம்போம் இன்னமொரு 23
ரத்தம்போம் ரணங்கள் 30
வந்தவகை யெந்தனுக்கு 38
வந்தவர்கள் அடியனுடைய 100
வருகிறது பதம்பாகி 49
வலுத்துதே காயமது 88
வலுவான தைலத்தில் 73
வழிசொல்வேன் மண்டலமே 74
வழியாக இன்னமொரு 93
வளமான சுண்ணம் 82
வாரான தவசு 77
விண்கொள்ளச் சுண்ணம் 80
வெந்நீரில் கொண்டவுடன் 24
வைத்திட்ட கருவிலொரு 67
வைத்திருந்த சித்தர்களை 65
வைத்திருந்த தைலம் 91
வெள்ளை யென்ற 18
வெள்ளை யென்ற 26


*****

# அருஞ்சொற் பொருள்

(எண் - பாடல் எண்)

தவசு - தவம், உறுதி நிலை 1

சரக்கு - மூலிகைப் பொருட்கள் 1

யேகமூலி - ஒரே மூலிகை 1

திரவியம் - பொன்

செந்தூரம் - பாடாணங்களைப் புடமிட்டுக் கிடைக்கும் சிவந்த பொருள் 1

குருமுடித்தல் - உயரிய ஒரு மருந்துப் பொருளைச் செய்து கொள்ளுதல்

பற்பம் - மருந்துகளைப் புடமிடக் கிடைக்கும் வெண்மைப் பொருள் 3

அரூபம் - உருவமற்றது 7

அரன் - சிவன் 9

உவருப்பு - உவர் மண்ணில் பூத்த உப்பு 10

சுத்தஜலம் - பனிநீர் 11

ரவி - சூரியன் 12

வழலையுப்பு - ஓர் உப்பு வகை 12

மார்க்கம் - வழி 12

சுண்ணம் - ஒரு கிளிஞ்சலை உலை வாயில் வைத்து ஊதிக் கிடைக்கின்ற வெளுத்த பொருள் 13

ஆதி - முதல் பொருள் 14

மத்தித்தல் - கடைதல் 15

குகை - மூசை 15

புடம் - வறட்டியினால் எரித்தல் 15

செந்தூரிக்கும் - நன்றாகச் சிவக்கும் 15

குளிகை - மாத்திரை 16

பணஎடை - நான்கு குன்றிமணி அளவு 16

லேகியம் - இளகம் 16

இராசாயனம் - இரசவாதம் 16

மாத்திரை 1. கண்ணிமைத்தல் 16
2. குளிகை

கசாயம் - மருந்துச் சரக்கோடு கொதித்து வற்றிய நீர் 16

சூரணம் - வேர், தழை, பட்டை, காய், பூ ஆகிய வற்றைக் காய வைத்து இடித்துத் துணியில் சலிக்கப்பட்ட பொருள் 16

தயிலம் - மூலிகையின் பட்டை, வேர், தண்டு, இழை ஆகிய வற்றைச் சூரணித்து எண்ணெயில் காய்ச்சி எடுக்கப்பட்டது 16

சித்து - கை கூடுதல் 16

மருந்து - ஔடதம் 16

சுத்தி - 1. மருந்துப் பொருட் களைத் தூய்மை செய்தல் 17

அப்பை - கோவைக்கிழங்கு 17

சீலைசெய்தல் - மண்ணும் துணியும் சேர்ந்து உறவாக்கி மருந்துச் சட்டியின் மேலே சுற்றப்படுகின்ற துணி மணல், கரி, சாம்பல், களிமண், தேங்காய் நார் சேர்த்துச் செய்யப் படும். இது களங்கு, சுண்ணம் போன்றவை செய்யப் பயன்படும் கருவி 17

குக்குடம் - கோழிப்புடம், பத்து வறட்டியால் எரிக்கும் புடம் 18

அருணன் - பூரணச் சந்திரன் 18

சூலை - கடுமையான வலி 19

குன்மவாய்வு - வாத நோய் 19

மேகம் - தோல் நோய் தொடர்பானது 19

தேமல் - தோல் நோய் தொடர் பானது 19

சிறு பீழை - சிறுகண் பீழை என்கின்ற மூலிகை 20

கூகை நீர் - கூகைக் கிழங்கு எனும் மருந்தின் மாவுப்பொருள் 23

அனுபானம் - துணை மருந்து. மருந்தின் செயல் திறனை அதிகரிக்கச் செய்ய மருந்துடன் துணை மருந்து கொடுப்பர் 23

அரிதாரம் - தாளகம் என்னும் மருந்தின் மறுபெயர் 25

அமுதப்பால் - உமிழ்நீர் (எச்சில்)

சயரோகம் - காசநோய் 26

சிலேற்பனம்- உடலிலுள்ள கபக்கூறு 26

ஈளைகாசம் - உடலிலுள்ள கபக்கூறு 26

ஈளைமாந்தம் - நுரையீரல் தொடர்பான நோய் 26

கண்டமாலை- கழுத்துப் பகுதியில் ஏற்படும் கட்டி 27

சத்தி குன்மம் - வாயு தொடர்பாக வயிற்றில் ஏற்படும் நோய் 27

உளமாந்தை - நுரையீரல் தொடர்பான நோய் 27

வெளிமாந்தை - நுரையீரல் தொடர்பான நோய் 27

குழிக்கல் - மருந்தரைக்கும் குழியம்மி

தியானம் - ஒன்றை விடாது நினைத்தல் 68

மை - மந்திரத்தில் பயன்படுத்தப் படும் ஒரு கருமை நிறப் பொருள் 69

யோகம் - எண்வகைப்பட்ட யோகாப் பியாச அங்கங்கள் 70

கனகம் - பொன் 71

சிவன் வேம்பு - சிவனார் வேம்பு என்ற மூலிகை 72

அரக்குமணி மாளிகை - கொம்பரக்கு நிறம் போன்ற சாதிலிங்கத்தால் ஆன மணி 72

கட்டும் - இறுகும் 74

சுருக்கு - பாடாணத்தை மூலிகைச் சாற்றில் சுருக்குக் கொடுத்தல் 75

உபாயம் - வழி 75

குருகடாட்சம் - குருவின் அருள்75

சுழி - இருபுருவ மையங்களுக்கிடையே உள்ள இடம் 76

துலங்கு - ஒளிர்தல் 76

வாசிதேவர் - வாசிக்கதிபதி 76

மூலி - மூலிகை 76

நீறு - சரக்குகளை நீர்மப் பொருள் கொண்டு (இலைச்சாறு, புகைநீர், செயநீர் (அரைத்துப் புடம் போட்டு வறுத்தாவது எரித்தாவது, உலையிட்டு ஊதியாவது வெளுக்கும்படிஎடுத்துக் கொள்வது பற்பம். இது நீறு, வெண்ணீறு எனப்படும்

அரி - திருமால் 79

அயன் - பிரம்மா 79

மூதண்டம் - பிரம்ம அண்டத்தின் முகடு 81

வடுகன் - வைரவன் 82

மாத்தேழு - ஏழு மாற்று 84

கங்கை - புனித நீர் 85

உரல் - தானியத்தைப் பக்குவப் படுத்தும் கல் கருவி 87

குப்பி - மருந்து பதனம் செய்யும் கருவி 87

மறலி - மயக்க நிலை 88

சமூலம் - வேர் முதல் இலை ஈறாக உள்ள அனைத்தும் 90

பார்வதி - உமை 90

பாகம் - பதம் 90

தாரம் - அரிதாரம் 91

சிவகாமி - சிதம்பரத்து அம்பிகை 91

ருத்திரன் - சிவன் 92

வசியம் - வசப்படுகை 93

வட்டு - உருண்டை 93

கருக்களஞ்சும் - உப்பைந்தும் 94

சீலைமண் - துணித்துண்டில் மண் தடவி மருந்து வைக்கப் பட்ட அகலின் ஓரங் களில் இடைவெளி தெரியாமல் சுற்றி உலர விட வேண்டும். இதுவே சீலைமண். மருந்துச் சட்டியின் வாயை அடைக்கும் மண் பூசப்பட்ட துணி 54

பழச்சாறு - எலுமிச்சம் பழச்சாறு 94

அதீதம் - எட்டாதது 96

அண்டபகிரண்டம் - உலகமும் அதன் புறத்தே உள்ள ஏனைய உலகங்களும் 96

மண்டலம் - 40 நாள் 96

சாக்கி - சாட்சி 97

கிருபை - அருள் 99

வேதாந்தம் - பரமான்மாவும் சீவான் மாவும் ஒன்று என்னும் மதம் 99

தேட்டம் - விருப்பம் 99

மலைச்சார்பு - மலைப்பகுதி 100

உபதேசம் - ஞானபோதனை 100

வில்லை - வட்டமாகத் தட்டுதல் 28

வராகபுடம் - 20 முதல் 50 வறட்டி யால் போடும் புடம் 29

கருவங்கம் - கடைச்சரக்கு 29

பிரமியம் - 1. நோய்வகை 29

குசமசக்காய் - குழப்பமாய் 31

கழஞ்சு - ஓர் எடுத்தலளவை, சிறிது 31

சாமம் - 2 1/2 மணி நேரம் 32

தெள்ளு - ஆராய்தல் 32

புத்தோடு - புதிய அகல் 32

வேதை - ஒரு தாழ்ந்த உலோகத்தை உயர்ந்த உலோகமாக மாற்றும் இரசவாதக் கலை 34

குறைநோய் - மேகவெட்டை நோய் 34

லிங்கம் - லிங்கபாடாணம், ஆண் குறி 36

செந்தூரம் - மருந்துப் பொருட் களை (ஒரு நீர்மப் பொருள்) புகை நீர், செய நீர், இலைச்சாறு அரைத்துப் புடம் போட்டாவது, எரித்தாவது, வறுத்தாவது, வெயிலில் வைத்தா வது முருக்கம் பூப்போல் சிவக்கும்படி செய்து எடுத்துக் கொள்வது செந்தூரம்.

முகூர்த்தம் - நல்லநேரம் 42

கற்பம் - ஆயுளை நீட்டிக்கும் மருந்து 44

காசி - கண்புருவமத்தி 45
மதிப்பால் - அமுதப்பால் 43
சங்கை - சந்தேகம் 46
அமுரி - சிறுநீர், ஞானத்தால் சொட்டு கின்ற ஞானப்பால் 47
சூடம் - கற்பூரம் 48
முறுகாமல் - கருகாமல் 49
சிவயோகம் - சிவனை முன்னிருத்திச் செய்கின்ற தவம் 49
நிஷ்டை - யோகநிலை 49
கும்பகம் - மூச்சுக் காற்றை அடக்குதல் 51
சட்டை வாங்கும்- மேல் தோல் உரியும் 52
பிரமனுட லிபி- பிரமன் எழுதிய எழுத்து 53
கவசம் - சீலைமண் 54
மெழுகு - பிசுபிசுத்த தன்மையுடைய மருந்து 55
சிப்பி - சிமிழ், கிளிஞ்சல் 55
அரன் - சிவன் 55
நவலோகம் - பொன், இரும்பு, செம்பு, ஈயம், வெள்ளி, பித்தளை, தரா, துத்தநாகம், வெண்கலம் ஆகிய ஒன்பது உலோகங்கள் 56
மாத்து - தங்கத்தின் தர நிர்ணயம் 56
செய்பாகம் - மருந்து செய்யும் முறை 56
நசித்து - அழிந்து 58
ஈந்தால் - தந்தால் 59
வயணம் - விதம் 59
தருக்கம் - நியாயவாதம் 60
பரதேசி - தேச யாத்திரை செய்வோன் 60
அமிர்தம் - வீடுபேறு 61
சமாதி - மனத்தைப் பரம் பொருளோடு ஒன்று படுத்தி நிறுத்துகை 61
ஆதிகல்பம் - முப்பு மருந்து 62
சுக்கிலம் - இந்திரியம் 66
சுரோணிதம்- சுக்கிலத்தோடு சேர்ந்து குழந்தை உண்டாகக் காரணமாகும் மகளிர் இரத்தம் 66
கரு - உட்பொருள் 67
ஈப்புலி - ஒருவகைச் சிறு சிலந்தி, எட்டுக்கால் பூச்சி 67
திகைப்பூடு - மிதித்தவர்களை மயங்கச் செய்யும் ஒரு பூண்டு வகை 67
சனல்வண்டு - திகைப்பூடு மீது வளரும் பொன்வண்டு 67
மின்மினி - ஒளிவீசும் ஒரு பூச்சி வகை 67
திலதம் - நெற்றிப் பொட்டு 68

****

# சொல்லடைவு


அகண்ட பரி பூரணியாள் 65
அகண்ட வீதி 45
அகத்தியமா முனி 2, 3
அச்சாணிக்கம்பு 53
அடக்கம் 70
அடிமை 43
அடிவயிறு 30
அண்டசூலை 30
அண்டம் 35, 36, 96
அண்டவாதம் 21
அந்தம் 85
அந்தரங்கம் 43
அந்தி சந்தி 53
அநேக நூல் 14
அம்மை 17
அமிர்தம் 61
அமுது 9
அமுரி 47, 48
அரக்கு மணி 72
அரன் 2, 9, 14, 55
அரி 79
அரிதாரம் 25
அருணநிறம் 18
அரூபம் 7
அருவி 66
அருள் 10, 65
அரை 68
அரைப்புத்து 35
அலை 61, 62
அழகு 52
அறுசுவை 59
அறுத்து 17, 47, 61
அறையாப்பு 21
அன்னம் 28, 84
அனல் 48
அனுபானம் 23
அனுபோகம் 41, 86
அஸ்தி 30
ஆச்சு 13, 24, 37, 46, 53
ஆசான் 38
ஆட்டம் 98, 99
ஆட்டி 25
ஆட்டு 95
ஆண்பிள்ளை 74
ஆண்மை 33
ஆணி 30
ஆணிக்குத்து 35
ஆணிப்புத்து 30
ஆணை 57
ஆத்தாள் 33, 41
ஆத்துமம் 2, 83
ஆதி 14, 31, 71, 82, 85
ஆதிகல்பம் 62
ஆதிமகரிசிகள் 43
அயன் 79
ஆயி 70
ஆயிரம் 55
ஆறி 23
ஆலம்பால் 28
ஆவாரைப்பட்டை 71
ஆறுபேர் 100
இடி 58
இடைக்காட்டார் 3
இருக்கை 70
இரும்புக்குச்சி 83
இருமல் 24
இரும்புலக்கை 47
இருவேளை 51
இல்லறம் 60
இலை 31
இளகி 95
இறுகி 53
இறுத்து 11
ஈ 67
ஈசன் 31
ஈய்ந்தார் 41

ஈளை 24, 26, 27
ஈளைகாசம் 26
உசிதம் 14
உண்ணு 51
உத்தமம் 46
உத்தாரம் 84
உதயாதி 46
உப்பு 13, 14, 15, 82
உபதேசம் 85, 100
உபாயம் 75
உமிநீரோட்டம் 27
உமை 57
உரல் 87
உரு 68
உரை 10, 11, 56
உலகம் 63, 64
உலரப் பேசாதே 57
உவருப்பு 10, 12, 14
உள்ரோகம் 27
உளமாந்தை 27
உறிந்து 52
ஊற்று 11
ஊறி 11, 28
எட்டிலொன்று 82
எண்புருக்கி 30
எமன் 28, 52, 62
எரு 20, 32
எள்ளளவு 78, 80, 84
ஏழு போது 26
ஐங்கோலத் தைலம் 82
ஐ விரலிச் சாறு 67
ஓடு 10, 19, 20, 95
ஓலை 32
கங்கை 85
கட்டி 17
கட்டும் 33
கட்டை 52
கடல் 40
கடற்கரை 70
கடாட்சம் 16, 38, 96
கடுக்காய் 41, 42
கடுகளவு 80
கடுவங்கம் 29
கண்டமாலை 27
கண்சிகப்பு 22
கண்ணளவு 95
கண்ணிசித்தர் 3
கண்ணீரோட்டம் 22
கண்புருவமத்தி 45
கதிர்வேலன் 57
கந்தக பற்பம் 21
கந்தகம் 20
கந்தன் 38
கந்தி 86
கந்திபற்பம் 20
கபரோகம் 26
கபாலம் 8, 9
கரி 95
கரியுப்பு 93
கரு 10, 42, 67, 71, 83, 86, 90, 94, 96
கருகி 94
கருத்தன் 65
கருத்தா 9
கருநெல்லி 41
கருப்பு வெள்ளை 19
கரு வயிறு 35
கருவி 9
கருவூரார் 3
கருவெள்ளை 10
கரைந்து 35, 36
கரையோரம் 14
கல் 8, 9, 30
கல்சுண்ணம் 8
கல்பம் 63, 70, 71, 73
கல்லுப்பு 14
கல்லுரல் 11, 47
கல்வம் 31
கவசம் 54
கவுளி 98
கள் 70

கள்ளி 12
களங்கம் 82
கற்பம் 44, 46, 50, 75
கற்பூர தேகம் 24
கற்பூர வள்ளி 31
கனகம் 71
கனி 62
கஷாயம் 16
காச்சல் 27
காச்சு 14
காசம் 22, 26
காசி 45
காசினி 34, 38
காடு 7
காதுமந்தம் 19
காமம் 70
காமாலை 27
காய்ந்து 54
காயம் 24, 25, 29, 81, 88
காத்து 58
காரம் 88
காரியம் 68
கால்முடக்கம் 19
காலன் 62
காலாங்கி 3
காலை 51
காளி 8, 57
கிண்டு 48
கிருபை 38, 99
கிழங்கு 17
குக்குடம் 17, 23, 25, 32
குகை 17
குசமசக்கு 31
குஞ்சரம் 62
குட்டம் 34
குடல்வாதம் 34
குத்தி 11, 15, 20, 25
குத்துவலி 22
குதிரை 15
குப்பி 87
கும்பகம் 51
குமுரவிட்டு 11
குரு 1, 2, 5, 6, 13, 15, 16, 20, 23, 25, 31, 37, 39, 58, 62, 68, 75, 96
குருபதம் 89
குருமுகம் 1
குலை 62
குழிக்கல் 28, 93
குழித்தைலம் 71, 87, 90
குளிகை 16
குறைநோய் 34
குன்மம் 19, 34
கூத்து 53
கெட்டி 73
கேசரி 66
கைகால் 36
கைகால் குடைச்சல் 35, 36
கைத்திட்டம் 65, 67
கைபாகம் 42
கைலாசகிரி 41, 80
கொங்கணர் 3, 99
கொட்டி 32, 73
கொள்ளு 51
கோட்டம் 8
கோடி 84
கோத்திரம் 2
கோரக்கர் 3
கோரை 47
கோவில் 14
கௌரி 91
சகலநூல் 60
சகலம் 15
சகலவித்தை 63
சங்கை 46
சட்டி 78, 87
சட்டை 52, 77, 88
சடாதாரம் 39
சண்டை 97
சண்முகர் 72

சத்தி குன்மம் 27
சதிகாலம் 46
சந்தானம் 38
சந்துவாய் 87
சமன் 31, 71, 89, 90
சமூலம் 90
சயரோகம் 22, 26
சரக்கு 1, 15, 74, 79
சரணம் 5, 39, 89
சரீரம் 73
சவ்வீரக் கட்டி 54
சவ்வீர பற்பம் 18
சவ்வீரம் 17, 55
சவங்கல் 29
சவுக்கார உப்பு 93
சளி 62
சற்குரு 5, 39, 56
சாக்கி 97
சாதகம் 12, 51
சாபம் 64
சாமம் 32
சாய்கை 100
சாரம் 50, 82, 94
சாஸ்திரம் 60
சிகாரம் 8
சித்தர் 38, 40, 43, 57, 64, 65, 73, 99
சித்தி 16, 17, 23, 41, 45, 97,
சிப்பி 55
சிமிழ் 68, 82, 83, 91
சிரவோடு 9
சிலாசத்துக்கட்டி 23
சிவகாமி பூசை 83
சிவகாமி 91
சிவம் 39
சிவன் 57, 89
சிவன் வேம்பு 71
சிறுகி 79
சிறுசிரங்கு 21
சிவம் 99
சிவயோக நிஷ்டை 61
சிவயோகம் 49, 80, 89
சிறுபீளை 20
சிறுமலை 99
சீலை 17, 20, 21, 22, 25, 29, 36, 87, 94
சுக்கிலம் 66
சுண்ணம் 13, 75, 79, 82, 83
சுண்ணாம்புச்சீலை 23
சுத்தஜலம் 11
சுத்தி 54
சுந்தரர் 3
சுருக்கி 75
சுருதி முடி 41, 86
சுரோணிதம் 66
சூட்சம் 9, 41
சூட்டி 74, 75
சூடம் 48
சூதம் 33, 91
சூதானந்தன் 50
சூரணம் 16
சூரியன் 73
சூலைவலி 34
செகம் 6, 15
செங்கரப்பான் 22
செங்கை வடிவேலன் 57
செடி 77
செந்தூர பற்பம் 16, 18, 19, 44
செந்தூரம் 1, 5, 15, 37
செப்பு 3, 4
செம்மை 32, 33
செய்பாகம் 56
சேதி 56
சொறிசிரங்கு 22
சோகிதம் 84
சோலி 44, 75
ஞானி 64
தகடு 55
தங்கநிறம் 27
தட்டி 32, 55, 94
தடம் 2, 45, 92

தண்ணீர் 11, 12
தரணி 4, 5, 47
தரித்திரம் 79
தருக்கம் 60
தவசு 1, 2, 63
தவம் 38, 39, 100
தனிப்பசுவின் வெண்ணை 29
தாக்கி 15
தாண்டு 96
தாது 29, 30
தாய் 63, 72
தாய்பதம் 56
தாளகம் 26, 27
திகைப்பூடு 67
திண்ணம் 33
தியானம் 62, 68, 90
தியானி 91, 92
திரவியம் 1
திருமூலர் 3
திரேகசித்தி 53
திரேகம் 24, 29, 52, 65, 74, 81, 87
திலதம் 96, 98
தீ 32
தீபம் 13
தீனி 68
துடுப்பு 48
துஷ்டன் 59
தூசி 44, 45
தெண்டனிட்டு 3
தெல்லு 32
தென்மேற்கு மூலை 39
தேகம் 8
தேசம் 39
தேவர் 76
தேன் 19, 21, 26
தைலம் 51, 52, 54, 72, 73, 86, 88, 89, 90, 91
தொட்டு 42
தொண்டைப்புண் 22
தொண்டைவலி 24
தொழுது 55
தோண்டி 17, 47
தோணாது 34
தோல் 22
தோஷம் 59
நடுக்கல் 30
நந்தி 39
நரை 52, 91
நவகோடிச் சித்தர் 39
நவச்சாரம் 86
நவலோகம் 56
நறுக்கி 55
நாடி நரம்பு 72
நாடு 7
நாயுருவிச் சாம்பல் 25
நாயுருவி விதை 32
நாலாம் பாட்டன் 40
நாலுபடி 47, 48
நாவு 35, 80
நிசம் 30, 31, 68
நிமிஷம் 30
நிரம்ப 13
நிருவாணப்பூசை 49
நிருவிகற்பம் 61
நிலப்பனை 67
நிவர்த்தி 72
நிறம் 65
நிஷ்டை 49
நீறு 23, 29, 35, 79
நுணுக்கம் 96
நூதனம் 97
நூறு 4, 44, 64, 96
நெய் 48, 49, 70
நெல்லெடை 21
நொடிவித்தை 96
நைத்து 91
பகர்ந்தாள் 97, 98
பகிரண்டம் 96
பசப்பி 69
பசளை 47, 48

பட்சம் 46, 47
பட்டமரம் 34
படபட 21
படி 49
படுக்கை 70
பண்டிதம் 37, 64
பண்ணு 51, 62
பணம் 69
பணவெடை 6, 26, 72, 73, 87
பணி 39
பத்தர் 58
பத்தி 39
பத்தியம் 21
பத்திரம் 16, 48, 50
பத்தினி 45
பதம் 1, 2, 49, 84, 91
பதினெட்டு குட்டம் 22
பதரி 85
பதனம் 49, 50, 68, 72, 82, 83, 87
பதி 87
பதின்கழஞ்சு 31
பரணி 5
பரிசு 13
பரதேசி 60
பரந்து 13
பலநூல் 99
பலகலை 64
பலம் 52
பழச்சாறு 12, 13, 93, 94
பற்பம் 4, 23, 25, 33, 34
பறங்கிப்புண் 29
பாக்கியம் 97, 99
பாகம் 57, 71
பாகு 84
பாசம் 50, 90
பாசி 29
பாட்டன் 40, 99
பாண்டம் 71, 90
பாதம் 1-4, 89
பார்வதி 5, 82, 90
பார்வதித்தாய் 54, 97
பாவம் 39
பாவி 85
பாவை 69
பிசரி 18
பிணி 33
பிரபலம் 44
பிரமம் 7, 8, 11
பிரமவெள்ளை 10
பிரமன் 53
பிரமியம் 29, 30
பில் 9
பிள்ளை 40, 43
பீங்கான் 13, 49, 66
புடம் 15, 17, 20, 23, 32, 89, 92, 94
புண்ணியர் 45, 69
புண்புத்து 36
புண்புரை 30
புத்து 35
புத்துமண் 94
புத்தோடு 32, 94
புதைவேளைச் சாறு 78
புரை 36
புலஸ்தியர் 40
புலி 67
புள்ளித் தேமல் 19
புள்ளி மேகம் 21
புஷ்டி 51, 52, 54
பூசி 15, 20, 23, 25, 44, 45, 68, 89, 90
பூசை 60, 72, 82
பூமி 10
பூரணம் 6
பூரணானந்தர் 40
பூரம் 88
பெண் 66
பெருங்கடல் 61, 83
பெருவயிறு 27
பேணி 53
பேதம் 8
பேரின்பம் 43, 53

பொடி 55, 82
பொடித்து 48
பொதிகை 38, 39, 40
பொருள் 10
பொன் 29, 53, 69
போகரிசி 3
போச்சு 13, 24
மகத்துவம் 86
மகாமேரு 80
மகாயோகி 1, 8
மண் 85
மண்சீலை 54
மண்டலம் 74, 86, 88, 97
மண்டை 10, 35
மணி 92
மத்தி 45
மத்தித்து 15, 67, 82
மதி 45, 46
மதியமுதம் 46
மயக்கம் 46
மரணம் 53
மருந்து 16
மருதாணிச் சமூலம் 90
மலசல மடைப்பு 24
மலம் 36
மலை 9
மலைக்குகை 64
மலைச்சார்பு 40, 41, 100
மலைச்சாரல் 100
மறுநீர் 12
மனம் 1, 37, 56
மனோன்மணி 38, 41, 44
மா 11
மாக்கல் 8
மாத்திரை 16
மாத்து 56
மாதர் 97
மாதா 90
மாந்தம் 27
மாயன் 60
மார்க்கம் 1, 12, 13, 16, 38, 53, 63, 67, 80, 85
மாரடைப்பு 22
மாலை 46, 51
மாளிகை 72
மின்ன 53
மிருகம் 98
முக்கண்ணி 4
முகூர்த்தம் 42
முங்கி 12
முத்தி 39
முத்து 11
முப்பு 13, 14, 75
முப்பொருள் 4
முறுகி 95
மூட்டு 13, 48
மூதண்டம் 81
மூர்த்தி 40, 43
மூலம் 17
மூலிகை 15, 71, 75-78
மூன்றாம் பேரன் 40
மூன்றெரு 20
மெய்ஞான அமுதப்பால் 25
மெழுகு 28, 54-56, 67, 75, 91, 92
மேகநீர் 22
மேகம் 35, 36, 40, 43
மேகவாய்வு 22
மேகவெட்டை 35
மேதினி 18, 33, 37, 46, 59, 80, 86, 96, 98, 99
மேலோடு 28
மேனி 27
மேனிவத்தல் 26
மை 69, 93, 95-98
மோர் 66
யேகமூலி 1, 15
யோகம் 70, 81, 88
ரசம் 331, 74, 89
ரசவாள் 34
ரணம் 30

ரத்தம் 29, 30
ரவி 12, 18, 32, 54, 55, 83, 93, 95
ராமதேவர் 3, 40, 42, 43, 84, 99
ரிசிகள் 57
ரேசக பூரகம் 51
ரோமன் 3
லட்சம் 68
லிங்கம் 36
லேகியம் 16
லோகம் 85
வங்கபற்பம் 28
வங்கம் 89
வச்சிரம் 24
வசியம் 93, 96-98
வட்டு 93
வடித்து 49
வடுகன் 82
வண்டுக்கடி 19
வயணம் 28, 60
வயிரம் 87
வராகபுடம் 29
வல்லாரை 46
வலிகண்டம் 36
வலி குன்மம் 27
வலு 52, 72, 87, 88, 91
வழலை 14
வழலையுப்பு 12
வளையம் 32
வளையலுப்பு 93
வன்மை 32
வாசனை 77
வாசி 64, 76
வாட்டி 54, 92
வாடை 69
வாத்து 32
வாதம் 21, 54, 85
வாசுதேவர் 77
வாந்தி 26
வாய்ச்சூலை 33
வாய்நீர் 23, 82
வாயு 19, 22, 24, 35
வாரி 11, 13
வாலை 22
விண் 85
வித்தை 41, 54
விதி 44, 46, 85
விந்து 8, 14
விந்தை 31
விநாயகர் பூசை 48
வியாதி 29, 33, 34, 44, 72, 80
விராகன் 84
விரை 36
வில்லை 32, 94
விலாசம் 45
விள்ளாது 18
வினை 24, 44
வீக்கம் 35, 36
வீங்கி 36
வீண் 70
வீணர் 70
வீரம் 50, 82, 88
வெட்டி வேர் 90
வெடித்தது 35
வெடியுப்பு 93
வெண்சாரை 41
வெந்நீர் 23, 24
வெள்ளி 13, 17, 18, 19, 23, 25, 26, 29, 84, 92
வெள்ளை 8, 83, 91
வெள்ளைக்கல் 8
வெளிமாந்தை 27
வெளுப்பு 73
வேங்கைப் பட்டை 71
வேசியர் 44
வேணும் 68
வேதாந்தம் 44, 99
வேதை 34, 50, 84
வைத்தியர் 37
வைத்தியம் 33, 34
வைரம் 52, 74

******

# துணை நின்றவை

## சித்த மருத்துவத் தமிழ் நூல்கள்


1. அகத்தியர் கற்பமுப்பு குருநூல் நூறு, இ. ராமகுருசாமிக்கோனார் சன், மதுரை, 1959.
2. அகர ஆய்வு மற்றும் கற்ப விளக்கங்கள், அறிவாற்றலரசன், அனுசூயா பதிப்பகம், சென்னை, 1997.
3. அமுத கலசம், வி. பலராமையா, அருட்பெருஞ்சோதி பதிப்பகம், சென்னை.
4. சரபேந்திரர் சித்த மருத்துவச் சுடர், டாக்டர் மு. சௌரிராசன், தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு, தஞ்சை, 1973.
5. சித்த மருந்து செய்முறைகள், வி. பலராமய்யா, அருட்பெருஞ்சோதி பதிப்பகம், சென்னை, 1973.
6. சித்த வைத்திய பதார்த்த குண விளக்கம், சி. கண்ணுசாமி பிள்ளை, சென்னை, 1973.
7. தமிழ் இலக்கியத்தில் சித்த மருத்துவம், மூலிகை மணி டாக்டர் க. வேங்கடேசன், ஸ்ரீசக்தி பதிப்பகம், சென்னை, 1993.
8. தோற்றக் கிரம ஆராய்ச்சியும் சித்த மருத்துவ வரலாறும், க. சு. உத்தமராயன், சென்னை, 1978.
9. புலிப்பாணி மருந்துகள், மே.சீ. சுப்பிரமணியம், தாமரை நூலகம், சென்னை, 1991.
10. புலிப்பாணி முனிவர் அருளிய பலதிரட்டு, சித்த மருத்துவ மேம்பாட்டுக் கழகம்.
11. மருத்துவத் திறவுகோல், எஸ். சிதம்பரதாணுப்பிள்ளை, சித்த மருத்துவ ஆராய்ச்சி நிலைய வெளியீடு, சென்னை, 1982.
12. முப்பு குரு, வி. பலராமய்யா, அருட்பெருஞ்சோதி பதிப்பகம், சென்னை, 1977.
13. வள்ளுவர் சரித்திர மருத்துவ ஆராய்ச்சிக் கதிர், எஸ். கலியாணராமன், சென்னை, 1972.
14. யூகி முனிவர் வைத்திய சிந்தாமணி, முதல்பாகம், இரா. தியாகராசன், 1976.

**ஆங்கில நூல்கள்**

1. Ancient Indian Medicine; Dr. P. Kutumbiah, M.D.F.R.C.P. Orient Longmans, 1969.
2. Introduction to the Siddha System of Medicine Dr. V. Narayanaswamy, Chennai. 1975.

**இதழ்கள்**

1. முப்பு ஆய்வு, எஸ். ஆர். சங்கரலிங்கனார், சித்தாசிரமம், பெரிய சேக்காடு, சென்னை - 51.
2. வைத்திய முப்பு, மேற்படி

**சங்கங்கள்**

1. அகில இந்திய முப்பு ஆய்வுக் கழகம், சித்தர் கோட்டம், மூலப்பாளையம், ஈரோடு, 638 002.
2. கல்ப முப்பு குரு சித்த ஆய்வகம், அடையாறு, சென்னை.
3. தமிழகச் சித்தர் கலை ஆய்வு நற்பணி சங்கம், வேலூர், 632 006.

*****

# இணைப்புகள்

## முப்புவின் பெயர் - 96

வழலை, அண்டம், பிண்டம், இடைகலை, சுழிமுனை, பிங்கலை, அம்பு, எரி, பரிதி, மதி, வில், அரிதாரம், இடி, இரண்யகர்ப்பம், இறையம், கோசம், கௌரி, தனித்தியம், பீசம், மேகம், வாயு, அமுரி, உரி, உவர், உவர்மண், கடுக்காய், சிகை, சுண்ணம், தசைநஞ்சு, திரிகுணஜலம், நஞ்சு, நாதம், பாசாணம், பூமிநாதம், வைரவம், விந்து, அடி, அமாவாசை, அரக்கி, ஊன்உப்பு, ஐம்பத்தொன்று, கணபதி, கம்பி, கருநெல்லி, கிரகம், குயவன், கொள்ளி, நடு, நவமூலி, நீருப்பு, பிரதமை, பீநீறு, மிதுனம், முடி, மேடம், லவணம், வண்ணான், விசமி, விசம், வெடியுப்பு, வெண்சாரை, அனாமி, எழுபிறப்பு, ஐவர், ஓசை, கண்மணி, கதிர், கமலம், கமி, குடிபோம் வீடு, கூற்றன், சாரி, சிங்கி, சுடர், சுட்டல், சுயம்பு, சூடன், நாயகம், நிலப்பூடு, நீரன்னம், பச்சை, படிகம், பண்ணை, பரமன், பிடாலவணம், புஷ்டி, பொட்டல், மடையன், மணற்பொடி, மலம், மவுனம், மாசி, முயல், லிங்கம், விஷ்ணு, கெடி, வெளி, அக்கினிக்கட்டி,

அங்கி, அயம், அவுரி, இந்திரக்கோபம், இரசம், இராசவர்க்கம், உரம், உருளை, ஏகசவுக்காரம், ஏமம், ஒளி, கடலிற்பாசி, கண்டங்கத்திரி, களிச்சுண்ணம், கனல், கனல்மேல் உப்பு, கன்னி, கன்மம், காரீயம், காவி, குங்குமம், குரு, குருத்து, கொக்கு, கொச்சி, கொடி, கொன்றை, கோதை, கோமயம், கோரோசனை, சங்கமம், சங்கு, சந்நியாசி மண்டை, சமாதி, சாபீசம், சாளக்கிராமம், சிங்கு, சுக்கான், சுத்தம், சூக்குமம், சூலம், சொரி, சோடம், சோதி, சோமநாதம், தலைப்பிள்ளை, தாது, திருமேனி, துத்தி, துருசு, தூலம், தேர்க்கால், தொட்டி, நட்டோடு, நந்தி, நாகம், நிலவுப்பு, பஞ்சமித்திரம், படலம், பரம், பரி, பாலைநிலம், புத்தான், புரியட்டம், புனுகு, பூரம், பூர்ணம், பொன்னூமத்தை வித்து, மரம், மதனபூண்டு, மதி, மந்திரம், மனலருது, மின், மீனம், முட்டை, முத்தான், யானைக்கல், ரவி, வங்கு, வலியான், வள்ளி, வாசி, வியாக்கிரம், விருட்சம், வெண்கண்டர், வெண்காரம், வெள்ளையாரை, என்னுமிவை. தொண்ணூற்றாறு நாமங்களாம் (யூகி முனிவர் சுருக்க நூறு, ப. 10).

## தீட்சை நீரின் பெயர்

அண்டநீர், அகாரநீர், அப்பு, அமுதம், அமுரி, அருக்கன் பால், அறுவகை நீர், ஆற்று வெள்ளம், இளங்குமரி நீர், உகாரநீர், உதகம், உப்புநீர், ஊசிநீர், ஐவிரலி நீர், ஓகாரநீர், கங்கை, கருநீர், கல்நீர், கவந்த நீர், கழுதை நீர், கள்ளு, கன்னிருது, காக்கை நீர், காந்தமலரொட்டி நீர், காரநீர், கிளிஞ்சல், குதம்பை நீர், கும்பிடுகல் நீர், குருதி, கெங்கை நீர், கெர்ப்ப நீர், சத்தி நீர், சம்பளச்சாறு, சரஸ்வதி தீர்த்தம், சருகு நீர், சாராயம், சிப்பி நீர், சிவதீக்ஷைநீர், சுத்த கெங்கை, சுரோணிதம், சுண்ண நீர், செந்தேன், ஜெயநீர், சையோக நீர், சோடசநீர், சோமநீர், சோரி, தசமநீர், தண்ணீர், தயிலம், தாளிச்சாறு, திராவகம், திரிபுரை, தீநீர், தூபநீர், தூமை, சுத்தநீர், நவச்சார நீர், பனிநீர், நாதம், பாளைநீர், பஞ்சதீட்சை நீர், பழச்சாறு, பிரணவ நீர், பிரவாகம், புகைநீர், புவனை, பூச்சாரநீர் போகாப்புனல், மதிநீர், மது, முலைநீர், முன்துளி நீர், மூலப்புளிநீர், மேனிப்பால், வண்டு, வஸ்து நீர், வாலை நீர், வெண்ணீர், வேசரி நீர், வேர்வை, யோக தீட்சை நீர், ரீங்கார நீர் முதலியவையாம் (யூகி முனிவர் சுருக்க நூறு, ப. 10).

*****

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113**

**அண்மை வெளியீடுகள்**

| | |
|---|---|
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-1 | 80.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-2 | 85.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-3 | 95.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 180.00 |
| நாவல்கலையியல் | 50.00 |
| சங்கரநமச்சிவாயர் | 60.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 40.00 |
| Agreement in Dravidian Languages | 100.00 |
| நாடகவியல் | 70.00 |
| அறிவியல் தமிழ் அறிஞர் பெ. நா. அப்புசுவாமி | 60.00 |
| சங்க பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் | 30.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் | 100.00 |
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| தெசிணி-யின் தமிழாக்கப் பாடல் திரட்டு | 50.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் 1 | 80.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல் | 25.00 |
| பெரியாரின் பண்பாட்டுப்புரட்சி | 25.00 |
| வ. உ. சி. வளர்த்த தமிழ் | 20.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| தமிழ் நாடகம் – நேற்றும் இன்றும் | 30.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| தமிழர் கட்டிடக்கலை | 30.00 |
| தமிழ் மேடை நாடக வரலாறு | 55.00 |
| பரதநாட்டிய சாஸ்திரம் | 150.00 |
| இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள் | 55.00 |
| தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள் | 70.00 |
| கருவூரார் பல திரட்டு | 70.00 |
| தமிழ் மொழியின் வரலாறு | 30.00 |
| சங்ககாலக் காசு இயல் | 30.00 |
| பாரதி இந்தியா | 40.00 |
| தமிழில் மருத்துவ இதழ்கள் | 50.00 |
| தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 75.00 |

Pub.No. 485 **தட்சிணாமூர்த்தி குருமுகம் - 100** 50.00